
கல்கி
அடுத்த இதழில் 'சோ' எழுதும்
ஹாஸ்யத் தொடர் நாடகம்
ALKI
.1965
35
காசு




# இன்பமான கனவுகள் உட்வர்ட்ஸுக்கு நன்றி!

மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**

ATC-308 TAM

# கல்கி




ஒன்றும் அறியாதவர்களைக் கொடுமைப்படுத்தும் பள்ளிக்கூடத்தை விடக் கடுமையானது உலகில் வேறொன்றுமில்லை. முதலில் பள்ளிக்கூடம் என்பது வாஸ்தவத்தில் ஒரு சிறைக்கூடமே. சில அம்சங்களில் சிறைக்கூடத்தை விடக் கொடுமையானது பள்ளிக்கூடம் என்று சொல்ல வேண்டும். உதாரணத்துக்கு, சிறையதிகாரிகளாகிய வார்டர்கள், மேற்பார்வையாளர்கள் ஆகியோர் எழுதிய புஸ்தகங்களைப் படிக்கும்படி கைதிகள் கட்டாயப் படுத்தப் படுவதில்லை. வேண்டுமானால் சிறையில் உங்கள் உடலை வருத்தலாம். ஆனால் அறிவை அவர்கள் துன்புறுத்துவதில்லை!

— பெர்னார்ட் ஷா

## பொருளடக்கம்

விகவாவக ஆடி 24 — ஆகஸ்ட் 8



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அந்த நாடகக் கம்பெனி என்ன ஆயிற்று என்றே தகவல் இல்லை. அம்புஜம் எங்கே போனாள் என்பதும் தெரியவில்லை.

சரியாக ஒரு வருஷம் கழிந்து விட்டது. மைனரும் நானும் மலைக்கோட்டை உத்ஸவத்துக்குப் போய் விட்டுத் திரும்பி வரும் போது தஞ்சாவூரில் இறங்கினோம். நீண்ட காலத்துக்குப் பிறகு மைனர் மறுபடியும் வெளியூர் புறப்பட்டது அப்போதுதான்.

தஞ்சாவூர் ரயிலடியில் காத்துக் கொண்டிருக்கும் போதுதான் அந்த அதிசயம் நடந்தது. அம்புஜம் மட்டும் தனியாக எதிரே வந்து கொண்டிருந்தாள்.

மைனர் அவளைப் பார்த்ததும் அவசரமாக எழுந்து போனார்.

"அம்புஜம்!" என்று கூவினார்.

"நீங்களா?" என்று பிரமித்துப் போய்ப் பார்த்தாள் அவள்.

மூவரும் வெயிட்டிங்ரூமில் போய் உட்கார்ந்தோம். காப்பி தருவித்துச் சாப்பிட்டோம்.

"அம்புஜம்! உன்னை மறுபடியும் சந்திக்க வேண்டும் என்று தவித்துக் கொண்டே இருந்தேன். நல்ல வேளையாக இன்றைக்குப் பார்த்தேன். அம்புஜம், என்னை மன்னித்து விடு. உண்மையில் அந்தத் தீ விபத்துக்குக் காரணம் நான்தான். உன் பிடிவாதத்தை மாற்ற எனக்கு வேறே வழி தோன்றவில்லை."

மைனரின் பேச்சைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். அமைதியாக, எளிய தோற்றத்தோடு இருந்த அம்புஜம் சாதாரணமாகவே உட்கார்ந்திருந்தாள்.

"எனக்கு அப்போதே தெரியும். முதலில் உங்கள் பேரில் கோபந்தான் வந்தது. ஆனால் யோசித்துப் பார்த்ததில் என் மேல் இருந்த ஆசையில்தானே அப்படிச் செய்தீர்கள் என்று புரிந்து கொண்டேன். அப்படிப்பட்டவரின் அன்பை அலட்சியமாய் உதறி விட்டேனே என்று தவித்தேன். இத்தனை நாட்களாய்...."

மேலே பேசுவதை நிறுத்தி விட்டு அவள் என்னைப் பார்த்தாள்.

"என் சிநேகிதன்தான். எல்லா விவரமும் இவனுக்கும் தெரியும்" என்றார் மைனர்.

"நாடகக் கம்பெனி என்ன ஆச்சு?" என்று கேட்டேன்.

"ஏற்பட்ட நஷ்டத்தைச் சமாளிக்க வழியில்லை. எல்லாருக்கும் சம்பளப் பாக்கி வேறு. புதிதாக எல்லாம் வாங்கிக் கம்பெனியை ஆரம்பிக்க வழியே இல்லை. நகைகளை யெல்லாம் விற்றுக் கடனைத் தீர்த்து விட்டுக் கம்பெனியைக் கலைத்து விட்டேன்."

"அம்புஜம்! நான் செய்த தவறுக்காக எந்த உதவி வேண்டுமானாலும் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறேன். என்ன வேண்டுமோ, கேள் அம்புஜம்" என்றார் மைனர்.

"இனி மேல் நான் மேடை ஏறுவதாக எண்ணமே இல்லை. உங்களுக்கு இஷ்டமானால் அன்றைக்கே நீங்கள் என்னிடம் கேட்ட அதே கேள்வியை இப்போது நான் உங்களைக் கேட்கிறேன். தயவுசெய்து என்னை உங்கள்...... மனைவியாக......" அவள் தயங்கினாள்.....

"வேண்டாம், அம்புஜம்..... அதில் உனக்குக் கௌரவமே இல்லை. கலைக்காகவே வாழ்வதாகத் தீர்மானித்துக் கொண்டவள் நீ. ஒரு சாதாரணமான மனிதனைக் கல்யாணம் செய்து கொள்ளாதே. உன்மேல் உள்ள அன்போடு, உன்னைப் புரிந்து கொண்ட மதிப்போடு இதைச் சொல்கிறேன்."

மைனருக்குத் தொண்டையை அடைத்தது. அம்புஜத்தின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. இப்போதும் அவள் பூரண சௌந்தர்யத்தோடு, புனிதமாகவே தோன்றினாள். அழியாத அழகு அது.

மைனர் அவளுக்காக வீடும், நிலமும் வாங்கிக் கொடுத்தார். தஞ்சாவூருக்குப் பக்கத்தில் கிராமம் ஒன்றில் அவள் இருந்தாள். ஆனால் அதற்குப் பிறகு மைனர் அவளை ஒரு தடவைகூடச் சந்திக்கவில்லை; அவளைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கக் கூட இல்லை.

∴ ∴ ∴

ராமசப்பு மறுபடியும் பொடி மட்டையை எடுத்தார். ஆனால் அதைப் பிரிக்காமலே கீழே வைத்து விட்டார். மறுபடியும் நினைவின் தீவிரம் அவரை மௌனத்தில் ஆழ்த்தி விட்டது. நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டேன்.



மலர் 25 ● இதழ் 2

# கருத்தடைச் சாதனங்கள்

**ராஜாஜி**

அரசியல்வாதிகளும், புள்ளிக் கணக்கு நிபுணர்களும், அறிஞர்கள் பலரும் வெகு முக்கியமானதாகக் கருதிவரும் ஒரு பிரச்னையை நான் நீண்ட காலமாகத் தவிர்த்து வருகிறேன். மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த வேண்டும், இதற்காகக் கருத்தடைச் சாதனங்களை உபயோகிக்க வேண்டும், அறுவை வைத்தியம் செய்ய வேண்டும் என்றெல்லாம் திட்டங்கள் வகுக்கப்படுவதைக் குறிப்பிடுகிறேன். இவ்விஷயத்தைப் பற்றி எழுத இதுவரை அருவருத்து வந்தேன். எனினும் தற்போது ஒரு புதுவித கருத்தடைச் சாதனம் மிகவும் பிரபலமடைந்து வருவதாக விளம்பரங்களைக் கண்டு கலவரமடைந்தேன். இனியும் அருவருப்புக் காட்டி அலட்சியம் செய்யலாகாது என்று கருதி என் அபிப்பிராயத்தை வெளியிடுகிறேன்.

சமூகத்தில் உயர்நிலையில் உள்ள மக்களிடையே கருத்தடையைப் பரப்புவதைக் காட்டிலும், நாட்டின் சுபிட்சத்தைப் பெருக்குவதே உண்மையான இலட்சியத்துக்கு உகந்த காரியம் என்பது என் உறுதியான கருத்து. சுபிட்சம் ஏற்பட்டால் குடும்ப விருத்தி தானே குறையுமேயன்றி, இதற்கு மாறாக பிரஸவத் தடையால் சுபிட்சத்தை ஏற்படுத்த முடியுமெனக் கொள்கை வகுத்துக் கொள்வது அறிவீனம். கருத்தடையை அதிகம் உபயோகிக்கும் வர்க்கத்தினர் பொருளாதாரத்தில் வசதி பெற்றவர்கள் மட்டுமே யாவார்கள். சர்க்காரின் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைச் சுகவாசிகளும், சுயநலக்காரர்களும், செயல் ஊக்கம் இல்லாதவர்களும்தான் பயன் செய்து கொள்வார்கள். இவர்கள் குடும்பத்தைக் கட்டுப்படுத்திக் கொள்வதால் பண்டங்களுக்கு அதிக விலை கொடுத்து வாங்கவும் தயங்க மாட்டார்கள். இது காரணமாக, பண்டங்களின் விலைவாசி ஓரளவு உயர்ந்து, மற்றவர்களும் அவ்விலைக்கே வாங்க நேரும்.

உற்பத்தியைப் பெருக்குவதே சுபிட்சத்துக்கு வழி; குடும்பத்தைச் சுருக்குவதல்ல. சுபிட்சம் பெருகினால் தானே வம்ச விருத்தி குறையும். அறுவைச் சிகிச்சையும், வேறு உபகரணங்களும் வேண்டியதில்லை. இவையெல்லாம் மக்களிடையில் அக்கிரம நடவடிக்கைகளைத்தான் பெருக்கும்.

சீனாவின் ஏகாதிபத்திய ஆசைதான் இந்தியாவின் உடனடிப் பிரச்னை; ஜன சங்கியை அல்ல. சீனத்தை எதிர்ப்பதற்குப் பெரிய ராணுவம் தேவைப்படும் இக்காலத்தில் குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றி நினைப்பது பொருந்தாது. சீனத்தின் ராணுவ பலத்தை எதிர்ப்பதற்கு நம்மிடம் மேல் நாடுகளில் உள்ளது போல் சிறப்பான பயிற்சி பெற்ற கட்டுப்பாடான படைகள் இருந்தால் போதாது. யுத்த தந்திரங்களை விடுத்து, மிருகத்தனமாக கொரில்லாப் போர் செய்யும் சீனர்களை எதிர்ப்பதற்கு உயிரை விடத் துணிந்த ஏராளமான வீரர்களைக் கொண்ட மிகப் பெரும் சைன்யம் தேவை. சீனாவில் சாதாரணப் பிரஜையாக வாழ்வதைவிட ராணுவ வீரனாக வாழ்வது சௌக்கியமென்பதால், எண்ணற்ற சீனர்கள் தங்கள் உயிரையும் பொருட்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
— பாரதியார்

படுத்தாமல் ராணுவத்தில் சேர்ந்துள்ளனர். இவர்களுக்கு நாம் ஈடு கொடுப்பது எப்படி?

கருத்தடை முறைகளைப் பின்பற்றினால் சுக வாசத்தை விரும்பும் சுயநலம் பிடித்த ஒரு வர்க்கத்தையே சிருஷ்டி செய்வோம்; இவர்களே சமூகத்தின் 'மேன்மக்களாக' இருப்பார்கள். இவர்கள் உடும்புப் பிடியாக உயிரைப் பற்றிக் கொண்டிருப்பார்கள். யுத்தத்தின் அபாயங்களையும், தியாகங்களையும் இவர்கள் ஒருபோதும் ஏற்கமாட்டார்கள். இவர்களுடைய தலைமையில் உருவாகும் சமுதாயம் எப்படி இருக்கும்? ஆசியாவில் சமாதானம் உருப்பெறும் என்கிற நிச்சயம் ஏற்படும்வரையில் இவர்களுடைய தலைமையில் தேசத்தை ஒப்புவிப்பது தகாது.

சமூகத்தின் உயர் வர்க்கத்திலுள்ளவர்களின் வாழ்க்கைப் போக்கைத்தான் பொது மக்களும் அநுசரிக்க விரும்புவது இயல்பு. இந்திரிய வேகத்தைக் கட்டுப்படுத்தாமலே, அதன் இயற்கையான பலன்களிலிருந்து தப்பித்து வாழ விரும்பும் மேல் வர்க்கத்தினர் பொதுமக்களுக்கு வழிகாட்டியாக இருக்கலாகாது. மக்கட் செல்வம் ஒரு தொந்தரவு எனக் கருதி, தடையின்றிப் புலனின்பம் தேடுவோர் வழிகாட்டிகளாக இருக்கும் நாட்டில் தேசத்துக்காகப் போராடி உயிரைத் தியாகம் செய்யும் பான்மையைப் பொதுமக்கள் எப்படிப் பெற முடியும்? இந்த விதமாக அனுபவிக்கும் இன்ப நுகர்ச்சியை முஷ்டி - மைதுனம் முதலிய ஆபாசங்களோடுதான் சேர்க்க வேண்டும். அருவருப்பான விஷயத்தைப் பற்றி எழுதுவதும் படிப்பதும் அருவருப்பாகத்தான் இருக்கும். வாசகர்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

திருவனந்தபுரத்தில் புதிய கருத் தடைக் கருவிக்காக மக்கள் 'க்யூ'வில் நிற்பது பற்றிக் குடும்பக் கட்டுப்பாட்டு நிபுணர்கள் மகிழ்ச்சியடைந்தபோதிலும் இது ஓர் ஆபத்தான அறிகுறியாகும். இதுவே சீனவுக்கு மிகவும் நல்ல சேதியாகும். சீனத்தின் கையாட்களாக இந்தியாவின் எதிர்க் கட்சியொன்றில் இடம் பெற்று, சர்க்காரின் அபாயகரமான நடவடிக்கைகளுக்கு மட்டும் ஆதரவு தருகிறவர்கள் வேண்டுமென்றே இது போன்ற திட்டங்களை வரவேற்கிறார்கள். தென்கிழக்கு ஆசியாவைப் போல் கம்யூனிஸ ஆதிக்கத்தின் கீழ் நாம் வலுவிழந்து விழாமலிருக்க வேண்டுமாயின், போதிய தளவாடங்களும் திறனும் இல்லாவிடினும் அளவில் மிகப் பெரிய ராணுவத்தை உருவாக்குவது அத்தியாவசியம். இதை ஒப்புக்கொண்டால் மக்கட்தொகையைக் கட்டுப்படுத்துவது எத்தகைய அநுசிதமான திட்டமென்பது புரியும்.

புருஷனை அண்டுவதற்கு முன் ஒரு வைத்தியனிடம் சென்று மர்மஸ்தானங்களை அவனிடம் ஒப்புவித்து அவன் தொட்டுத் தடவிக் கைவைத்த பின் புருஷனைச் சேருவது என்பது எவ்வளவு ஆபாசம் என்பதை உணர்ந்து இந்தப் பயனற்ற ''லூப்'' திட்டத்தை மக்கள் புறக்கணிக்க வேண்டும். ''லூப்'' உபயோகிப்பதில் உடல் கோளாறுகளும் சிலருக்கு உண்டாகும் என்று வைத்தியர்களே பத்திரிகைகளில் எழுதியிருக்கிறார்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக, காந்தியடிகள் இவ்விஷயமாகக் கூறிவந்ததில் உண்மையில்லையா? இந்திரிய வேகத்தைக் கட்டுப்படுத்தாமல் குடும்பத்தை மட்டும் கட்டுப்படுத்துவது தருமத்துக்கும், இயற்கைக்கும் விரோதமில்லையா? அது உடலுக்கும் மனத்துக்கும் தீங்கு இல்லையா? முக்கியமாக, இது உடலைவிட மனத்தை அதிகம் மாசுபடுத்தும்.

# என்ன சேதி?

## சீ! சீ! இந்தப் பழம் புளிக்கும்!

ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் வெளிநாட்டுக் கடன்களை வாங்கினால் நமது சுதந்திரத்துக்கு ஆபத்து வந்துவிடும் என்று சமீபத்தில் கூறியிருக்கிறார். இது ''சீ!சீ! இந்தப் பழம் புளிக்கும்!'' என்று நரி சொன்ன கதையைத்தான் நினைவுபடுத்துகிறது.

பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் வெளி நாடுகள் ஒன்று விடாமல் கடன்வாங்கி, கடன் வாங்கி, இன்று கடனைத் திருப்பிக் கொடுக்கும் காலம் வரும் போது, அந்தக் கடன்களுக்குரிய வட்டி செலுத்த முடியாத நிலையை அடைந்து விட்டோம். அவ்வட்டிக்காக வேண்டிக் கடன் வாங்கும் நிலையிலிருக்கிறோம். இத்தொகையாவது கொடுக்கலாமா என்று வெளிநாடுகள் தயங்கி வரும்போது ''கடன் வாங்கினால் சுதந்திரத்தை இழந்து விடுவோம்'' என்று கூறுவது வேடிக்கை.

முதலிலேயே இத்தகைய நிலையை அடைய நேரும் என்று நாட்டில் உள்ள பெரியோர்களும் பொருளாதார நிபுணர்களும் எடுத்துச் சொன்னபோது அலட்சியப்படுத்திவிட்டு, இப்பொழுது நன்றியுணர்ச்சியின்றிப் பேசுவது வெளியுலக நட்பை வளர்க்கும் மார்க்கமல்ல.


ஸ்ரீ வேங்கடராஜுலு நாயுடு

## நாயுடு அவர்கள் பிரிவு

ஸ்ரீ வேங்கடராஜுலு நாயுடு அவர்களின் மறைவு பத்திரிகை உலகைச் சேர்ந்தவர்களுக்கு ஓர் அதிர்ச்சியைத் தந்தது. தமிழ் நாட்டுப் பத்திரிகை உலகில் அடிநாளிலிருந்து தொடர்பு கொண்டு அரும்பணியாற்றியவர் நாயுடு அவர்கள். ''தமிழ் நாடு'' பத்திரிகை தொடங்கி நடத்தப்பட்டு வந்த காலத்திலிருந்து பத்தி



சென்ற ஆறு மாதகாலமாக அரசியல் வாழ்விலிருந்து விலகியிருந்த சீக்கிய மக்களின் பெருந்தலைவர் மாஸ்டர் தாராசிங் அவர்கள், மீண்டும் அரசியலில் புகுமுன் ராஜாஜியுடன் ஆலோசனை நடத்தச் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தார்.

ரிகை உலகில் இருந்து வந்தவர். பின்னர் தினமணியிலும், அதற்குப் பிறகு நவசக்தியிலும் பணியாற்றினார். சமீப காலத்தில் காந்தி மகானின் நூல்களை நல்ல தமிழில் மொழிபெயர்த்து வெளியிடும் அரிய பணியில் ஈடுபட்டிருந்தார். அவருடைய மறைவினால் தமிழ் எழுத்துலகம் அடக்கமும் சீரிய பண்பும் கொண்ட நல்ல எழுத்தாளரை இழந்து விட்டது. அவருடைய குடும்பத்தாருக்கு நமது அநுதாபங்கள்.

## டோக்கியோவில் துரோகி

இந்திய சர்க்காரின் போக்கு விசித்திரமாக இருக்கிறது. நமது நாட்டில் அக்கறையுள்ள ஷேக் அப்துல்லா போன்றவர்களைச் சிறையில் அடைத்தும், நம் நாட்டின் உள் நாட்டு வெளி நாட்டுக் கொள்கைகளை வெளி நாட்டில் போய்த் தூற்றும் நபர்களை, வெளி நாடுகளில் சர்வ சுதந்திரத்துடன் சுற்ற விடுவதையும் பார்க்க வியப்பாக இருக்கிறது. ஜப்பான் தலைநகரான டோக்கியோவில் அணு ஆயுதத் தடை மகாநாட்டுக்கு இந்தியப் பிரதிநிதியாகச் சென்றுள்ள ஸோஹன் சிங் ஜோஷ் என்பவர் இந்திய அரசாங்கத்தைக் கண்டபடி தூற்றிச் சீனாவுடன் இந்தியா நேசம் வளர்த்துக்கொள்ள மறுக்கிறது என்று வேறு பேசியிருக்கிறார். இப்படிப்பட்டவர்களின் "சமாதானக் குழுவை" நம்பி அந்தக் குழுவுக்குச் சலுகைகள் கொடுப்பது பெருந்தவறு. அரசாங்கம் எல்லா வகையிலும் எல்லாத் துறைகளிலும் தவறுகளுக்கு மேல் தவறுகள் செய்துகொண்டே வருகின்றது என்பது மிகத் தெளிவாகி வருகிறது!

## கதர் விலை ஏற்றம்

இவ்வாண்டு ஏப்ரில் மாதத்தில் கதர்த் துணிகளின் விலை பதினைந்து சதவிகிதம் உயர்த்தப்பட்டது: இப்போது மேலும் முப்பது சதம் உயர்த்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இது குறித்து, நீண்ட காலக் கதர் பிரசாரகரான ஸ்ரீ இளையாழ்வார் அவர்கள் கவலை தெரிவிக்கிறார். நூற்பவர்களுக்கும், நெசவாளிகளுக்கும் அதிகக் கூலி கொடுக்கவேண்டியிருப்பதைக் காரணம் காட்டிக் கதர்த் துணியின் விலையை உயர்த்திக் கொண்டே போனால் விற்பனை குறையத் தொடங்கி விடும் என்று அவர் கூறுவது மிகவும் சரியானதே. கதர் அணிய வேண்டும் என்பதைக் கட்டாய விதியாகக் கொண்ட காங்கிரஸ்காரர்கள் எவ்வளவு விலையானாலும் வாங்குவதற்கு வசதி பெற்றிருக்கக் கூடும். ஆனால் காந்திஜி கூறியதன் பேரில் கதரே அணிவது என்ற வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்ட மற்றவர்கள் காங்கிரஸ்காரர்கள் போல் அவ்வளவு வசதியாக இருக்க வில்லை. விலை உயர்வினால் அவர்கள் கஷ்டப்படுவார்கள்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

பெங்களூரில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தைப் பற்றி விமரிசிக்கும் ஒரு பிரபல பத்திரிகை, 'இடியோசையாகத் தொடங்கியது முனகலாக முடிந்தது' என்று கூறியுள்ளது. காங்கிரஸின் இன்றையப் போக்கை அறிந்தவர்கள் இதனால் ஆச்சரியப்படவில்லை. முதலில் வெளியான பலத்த சத்தம் வெறும் பயமுறுத்தல்தான். அது கைமேல் பலனைக் கண்டுவிட்டது.

மக்களின் சுதந்திரத்தைப் பறித்துச் சர்க்காரிடம் கொடுப்பதோடு மட்டும் இப்போது காங்கிரஸார் நின்று விடவில்லை. சர்க்கார், மத்திய மந்திரி சபை, உத்தியோக வர்க்கம் இவற்றின் அதிகாரம் முழுவதையும் காங்கிரஸ் கட்சியின் கைக்கு மாற்றுவதில் நேருவின் மறைவுக்குப் பின் அவர்கள் தீவிரமாக இருக்கிறார்கள். இதுவே இப்போது அவர்களுடைய இலட்சியமும், நோக்கமும் ஆகும். அரசியல் சாசனத்தைச் சிதைக்கும் இந்த முறை காங்கிரஸ் தலைவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்தாலே தான் முடியும். இதனால் தான் 'ஐக்கியம்' என்ற கோஷத்தின்கீழ் காங்கிரஸ் கூட்டத்துக்குள் கிளம்பும் மாற்று அபிப்பிராயங்கள் வெளியாகாமல் அடக்கி வருகிறார்கள். இடைக்காலத் தேர்தல்களைத் தள்ளிப்போடும் யோசனை, காங்கிரஸ் தலையாரிகளின் நற்பெயர் எப்படி நாசமாகியுள்ளது என்பதற்கு ஓர் உதாரணமாகவே விளங்குகிறது. அரசியல் சாஸனத்தின்படி இடைத் தேர்தல் நடைபெற வேண்டும். அதனைத் தள்ளிப் போடுவதால் மக்கள் காங்கிரஸ் ஊழலை மறந்து விடுவார்கள் என்றும் பிற்பாடு ஏதாவதொரு 'ஐக்கிய' கோஷத்தை எழுப்பி மக்களை வசப்படுத்திக் கொள்ளலாம் என்றும் காங்கிரஸார் நம்புகிறார்கள்.

* * *

மந்திரிகளும், உத்தியோகஸ்தர்களும் தங்களுடைய பெர்மிட் — லைசென்ஸ் வாடிக்கைக்காரர்களிடமிருந்து நினைவு நிதிக்குப் பண வசூல் செய்வது தவறு என்று சிலரேனும் தைரியமாக எடுத்துச் சொல்வது மகிழ்ச்சிக்குரிய செய்தி. ''குறிப்பிட்ட ஒரு தேதிக்குள் இவ்வளவு தொகை வசூல் செய்தாக வேண்டும் என்று ஜில்லாக் கலெக்டர்களுக்கு 'இலக்கு' விதிக்கப்பட்டிருக்கிறது. இதை மேலும் வகுத்துப் பல உப இலாகாக்களுக்கும் இதே போல் இலக்குகள் விதிக்கப்பட்டிருக்கின்றன'' என்று 'ஹிந்து' பத்திரிகையில் ஒருவர் எழுதியிருக்கிறார்.

இரண்டு உலக யுத்தங்களின் போதும் பிரிட்டிஷ் அரசாங்கம் போர் நிதி வசூலித்த முறையை நாடு பலமாக ஆட்சேபித்தது. ஆனால் தற்போது கையாளப்படும் வெட்கக்கேடான கட்டாய வசூல் முறைக்கு அவை ஒரு தசாம்சம்கூட ஆகா.

* * *

வியாபார ஸ்தாபனங்கள் பெறுகிற லாபமானது அதர்மக் கொள்ளையல்ல; லாபத்தின் அளவைக் கொண்டே முதலீட்டையும் தொழிலாளர்களின் சம்பளத்தையும் பொறுத்த நல்ல கொள்கைகளை வகுக்க முடியும்—இந்த உண்மைகளைத் தொழிற் சங்கங்களுக்கு எடுத்துக்காட்டுகிறார் பேராசிரியர் ஒருவர். மூலதனம் என்பது ஆகாயத்திலிருந்து கொட்டுவதல்ல. லாபத்திலிருந்தே மூலதனம் கிடைக்க வேண்டும். தொழிலாளர்க்கு உரிய சம்பளம் கிடைப்பதற்கு மூலதனமே ஆதாரமாகும்.

* * *

இடுக்கியின் இருபுறத்தாலும் நெரிப்பது போல் இறக்குமதியைக் குறைப்பது, பாங்கிக் கடனைக் குறைப்பது என்ற இரட்டை நடவடிக்கைகளால் தொழில்துறையை ரிஸர்வ் பாங்கி நெரித்திருப்பதைச் 'சித்திரா' கம்பெனியின் அறிக்கை எடுத்துக் காட்டுகிறது. ''இறக்குமதிச் சரக்கின் மதிப்பில் 25 சதவிகிதத்தை ரிஸர்வ் பாங்கில் டிபாஸிட் செய்ய வேண்டும் என்றும், குறிப்பிட்ட ஒரு இனத்தில் தொழில் நிறுவனங்களுக்கு அளித்த தொகைக்கு மேலாக எந்த பாங்கும் கடன் உதவக் கூடாது என்றும் ரிஸர்வ் பாங்கு உத்தரவிட்டிருக்கிறது. ஒருவனுடைய கையையும் காலையும் கட்டி ஆழ்கடலில் தள்ளிவிட்டு அவனை நீந்துமாறு சொல்லுவது போன்றதே இந்நடவடிக்கை'' என்கிறது அந்த அறிக்கை.

* * *

தமிழ் மக்கள் டில்லிக்குப் பணிந்து ஆங்கிலத்தின் இடத்தில் ஹிந்தியை ஏற்க வேண்டும் என்று ஸ்ரீ காமராஜ் அவர்கள் கூறியிருக்கிறார். தமது தைரியத்தையும் பகுத்தறிவையும் கட்சி விசுவாசத்துக்காக அவர் கைவிட்டது வருத்தமளிக்கிறது. காங்கிரஸ் மகாநாட்டில் ஏகோபித்த வாக்குப் பதிவு ஆவதால் மட்டும் உண்மையாகவே எல்லா அங்கத்தினர்களும் ஏகோபித்த கருத்துக் கொண்டிருப்பதாக எண்ணலாகாது. கட்சிக் கட்டுப்பாடு மிகவும் வலுவாக இருப்பதே ஏகமனதான முடிவுகளுக்குக் காரணம். இந்தியாவின் ஒரு பகுதி மக்கள் தமது எண்ணிக்கை பலத்தால் மற்றவரைப் போரில் வென்றதாக எண்ணித் தங்களுடைய மொழியை நாடு முழுவதிலும் திணிப்பது நியாயமாகாது. ஜனநாயகமும் நீதியும் வாழ வேண்டுமாயின் இவ்வளவு நாட்கள் வழக்கத்திலிருந்து வந்த ஆங்கிலம் நீடித்தேயாக வேண்டும். ஸ்ரீ காமராஜ் தோல்வியை ஒப்புக் கொண்டு ஹிந்தியருக்கு] சரணாகதி செய்திருப்பது துர்ப்பாக்கியம்.

* * *

எண் குறிப்புக்கள் சர்வதேச முறையைப் பின்பற்ற வேண்டுமென அரசியல் சாசனம் விதித்திருக்கிறது. ஆனால் சாஸனம் அமுலுக்கு வந்து பதினைந்தாண்டுகள் ஆன பின்னரும் உத்தரப் பிரதேசத்தினரும், மற்ற ஹிந்தி ராஜ்யத்தினரும் சர்வதேச எண்களைக் கற்றபாடாகவோ, ஒப்புக்கொண்ட பாடாகவோ இல்லை. ஆனால் இதே மக்கள் ஒரு புதிய மொழி முழுவதையும் தென்னிந்தியர் ஏற்றுக் கற்க வேண்டுமென எதிர்பார்க்கிறார்கள்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



சிறுகதைச் சிறப்பு மலரைப் பாராட்டி நேயர்களிடமிருந்து வந்திருக்கும் கடிதங்களை காணும்பொழுது, இலக்கியப்பணியில் மேலும் மேலும் உற்சாகத்தோடு இறங்கத் தூண்டுகிறது. இவ்வெள்ளி விழா ஆண்டில் 'கல்கி' இன்னும் சிறப்பாகத் தமிழ்த் தொண்டாற்றவிருக்கிறது என்பதைச் சிறப்பு மலர் வெளியிட்ட மகிழ்ச்சியோடு மகிழ்ச்சியாகத் தெரிவித்துக் கொள்கிறோம்.

'சம்பவாமி யுகே யுகே' 'மனம் ஒரு குரங்கு' போன்ற ஹாஸ்ய நாடகங்கள் மூலம் பிரபலமடைந்துள்ள திரு 'சோ' அவர்கள், எழுதும் திறமையும் நடிப்புக் கலையும் ஒருங்கே அமையப்பெற்றவர். அவரது நகைச் சுவை நாடகம் ஒன்று ஆகஸ்ட் மாதம் பதினைந்தாம் தேதி இதழிலிருந்து வாரந்தோறும் தொடர்ந்து வெளிவரவிருக்கிறது. நாடகத்தின் தலைப்பே கூறுகிறது. நகைச்சுவைக்கு ஓர் அணிகலனாக நாடகம் திகழப்போகிறது என்று - 'சாதல் இல்லையேல் காதல்!'

சகோதரி சுப்புலட்சுமி அம்மையார் சேவைக்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்பவர். தம் வாழ்வில் ஏற்பட்ட துயரத்தையே பெரும் இன்பமாக மாற்றி மாதர் குலத்தின் துயரைத் துடைத்த பெருமை சகோதரி சுப்புலட்சுமி அம்மையாருக்குத்தான் உண்டு. அவரது சேவை வாழ்வை மோனிக்கா பெல்டன் என்னும் அம்மையார் காவிய நயம் ததும்ப ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். அதைத் தமிழாக்கிக் 'கல்கி' வாசகர்களுக்கு வழங்கும் பொறுப்பை ஸ்ரீமதி 'அநுத்தமா' ஏற்றுக் கொண்டுள்ளார். இரு சிறந்த பெண் எழுத்தாளர்களின் கூட்டுப் பணியினால் 'சேவைக்கு ஒரு சகோதரி'யின் வரலாறு சுவை மிகுந்து விளங்கப் போகிறது.

இதுமட்டுமல்ல. இந்த ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி இதழிலேயே, இன்னும் பல புதிய அம்சங்களைக் காணலாம்: இந்த இதழும் ஒரு சிறு மலர்; மணம் மிக்க மலர்.

ஆள் பலே எத்தன் என்று கூறுவதுண்டல்லவா? எத்தனுக்கும் எத்தனாக, ஆளை விழுங்கி ஏப்பம் விடும் ஆசாமிகள் உலகில் வலைய வருகிறார்கள். ஆனால் போலிகள் இவர்கள். இப்படிப் புகழ் பெற்ற போலிகள் பற்றிய சுவை ததும்பும் உண்மைக் கதைகளும் இந்த இதழில்தான் தொடங்கவிருக்கிறது.

தற்கால வாழ்வில் நாம் எத்தனையோ அதிசயப் பிரகிருதிகளைக் காண்கிறோம். அவர்களிடம் பழகும்பொழுது ஏற்படும் சிக்கல்களையும் சிரமங்களையும் சௌகர்யங்களையும் கூட அநுபவிக்கிறோம். இத்தகையவர்களோடு ஏற்படும் காரசாரமான சர்ச்சைகள், சுவை மிகுந்ததாயிருக்குமல்லவா? அவற்றைச் சுவையான சர்ச்சைகள் என்ற தலைப்பிலேயே கண்டு களிக்கப் போகிறீர்கள்.

தனித் தனிக் கறிகளுக்குத் தனித் தனிச் சுவையுண்டு. ஆனால் எல்லாக் கறிகளையும் சேர்த்துச் சமைக்கப்படும் அவியலுக்கும் தனி ருசி உண்டு. இல்லாவிட்டால் பெரிய விருந்துகளில் அவியலுக்கு ஒரு தனி இடம் ஏற்பட்டிருக்குமா? 'பல்சுவைப் பக்கங்கள்' என்னும் பகுதி அத்தகைய சுவை மிகுந்த அவியலின் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு உங்களை மகிழ்விக்கப் போகிறது.

ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி இதழே மலரின் பெருமையைப் பெறுகிறது என்பது ஒருபுறமிருக்கட்டும். இதையொட்டி இன்னுமோர் இன்பம் தரும் செய்தியையும் இப்பொழுதே சொல்லி வைக்கிறோம். இந்த வெள்ளி விழா ஆண்டில் உங்கள் அபிமான எழுத்தாளரான அகிலன் அவர்கள் சுவை மிகுந்த ஒரு சரித்திரத் தொடர் கதையை வழங்கவிருக்கிறார்.

அடுத்து வரும் இதழ்களை மேலும் பல சுவாரஸ்யமான புதிய அம்சங்களும் அலங்கரிக்கும்.

சுருங்கச் சொன்னால் விநாயகப் பெருமானின் அருளாலும், முருகப் பெருமானின் கருணையினாலும் இன்னும் எத்தனையோ சிறந்த இலக்கியப் பணிகளைக் 'கல்கி' செய்யக் காத்திருக்கிறது. நேயர்களும் மன நிறைவுடன் 'கல்கி'யின் பணியை மெச்சப் போகிறார்கள்.

அகிலன



'சோ'



மோனிகா ஃபெல்டன்



அநுத்தமா



# காலச்சக்கரம்

## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 21

## மாருதியின் ஆதரவு

மனம் விட்டு மாருதியிடம் ஒரு நாள் தங்கப்பன் பேசினான். ''ஏதோ உயர்ந்த உத்தியோகத்தைத் தேடி உட்கார்ந்து மாதச் சம்பளம் பெற்றுத் திருப்தியடைய என் மனசு இடம் தரவில்லை; என்னுடைய நீண்ட நாள் ஆசை இது.....'' என்று தொடங்கித் தொழிலகம் பற்றிய தனது திட்டங்களைக் கூறி அவரது ஆசீர்வாதத்தைக் கோரினான். கேட்கக் கேட்க மாருதிக்கு அவனிடம் என்றுமிருந்த அபிமானமும் நன்மதிப்பும் மேலும் அதிகரித்திருக்க வேண்டும்.

புன்னகையில் குவிந்தன கன்னங்கள்; மன நிறைவில் மூடின கண்கள்; உள்ள நெகிழ்ச்சியில் துடித்தது நரை விழுந்த மீசை. தங்கப்பனை அன்புடன் தோளில் தட்டிக் கொடுத்தார் அவர். தங்கப்பன் கூறினான்: ''என்னுடைய அபிப்பிராயத்தில் விவசாயமும் தொழில்களும் பக்கத்தில் பக்கத்தில் வளர வேண்டும். குடும்பத்தில் ஒருவர் வயலில் பயிர் செய்ய வேறு ஒருவரோ இருவரோ தொழிற்சாலையில் வேலையில் அமர வாய்ப்பு இருக்கும். விவசாயிக்கு வருஷத்தில் சில மாதங்கள்தான் வேலை. மற்ற தினங்களிலும் அவர்கள் உழைப்பை நாட்டு நலனுக்காகப் பயன்படுத்திக் கொண்டதாகும். நான் விற்கப் போகும் நிலம் எங்கேயும் ஓடிப் போய் விடப் போவதில்லை. ஆகவே அதனால் பிழைத்து வந்தவர்களும் பாதிக்கப்படப் போவதில்லை. அதற்கு அதிகமாக மேலும் பல குடும்பங்களுக்கு நல்லது செய்ததாகும். என்ன ஸார், என் யோசனை பிடித்திருக்குதா உங்களுக்கு?''

''தம்பி! இளைய பாரதத்தினர் ஒவ்வொருவரும் உன்னைப் போல் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த விவகாரங்களைச் சிந்திக்கவும் சர்ச்சை செய்யவும் தொடங்கினால்தான் இந்த நாட்டுக்கு நல்ல எதிர்காலம் இருக்கும்; ஜனநாயகம் தழைக்கும். ஆனால் இப்போது அவர்களில் ஒரு பகுதியைப் பிடித்திருப்பது சினிமா வியாதிதான்! அந்த வியாதி வேகமாக மற்றவர்களிடம் தொத்திக் கொண்டு பரவியும் வருகிறது.''

''ஜனநாயகம் என்பது ராஜ்ய சட்டசபைகளிலும் டில்லி பாராளுமன்றத்திலும் முடிந்து போகிற காரியமில்லை; மக்களும் முக்கியமாக இளைஞர்களும் விஷயங்களை விவாதித்துத் தேர்ந்த அபிப்பிராயங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்று ஒப்புக் கொள்கிறேன், ஸார்! ஆனால் சினிமா பற்றியும் இளைஞர்கள் வார்த்தையாடுவதில் என்ன தவறு? அது ஓர் அருங்கலையில்லையா? அது நன்றாக வளர வேண்டாமா?''

''நல்லா வளரட்டும், தம்பி! அப்படி முன்னேற்றம் காணத் தூண்டும் மாதிரி இளைஞர்களுடைய பேச்சும் தர்க்கமும் நடைபெற்றால் மகிழ்ச்சி அடைவேன். 'இந்தப் படத்தில் ஹாஸ்யம் சம்பந்தமில்லாமல் திணிக்கப்பட்டிருக்கிறது; இதில் நடிப்பு மோசம், இதில் வசனம் ஆபாசம் என்றெல்லாம் பேசுவோர் ரொம்பக் கம்மி. 'என்ன வாத்தியாரே, எழுச்சி நடிகரோட கார்நெம்பர் என்னன்னுசொல்லு பார்க்கலாம்' என்கிறான் ஒருவன். பலான பிரபல நடிகை பம்பாய்க்குப் போய்ச் சொன்னபடி கேட்கிற ஒரு வெகுளிப் பையனை யாருக்கும் தெரியாமல் கல்யாணம் பண்ணிக் கொண்டு ஏழாவது மாதத்தில் எட்டு பவுண்டு எடையுள்ள மகவைப் பெற்றெடுத்தாளென்று கூறி, அதன் தந்தை யாராயிருப்பான் என்று ஆராய்ச்சி நடத்துகிறார்கள். அண்ணல் காந்தியின் புனிதப் பெயரைத் தாங்கி விளங்கும் பூங்காவிலேதான் அந்தி மயங்குகிற வேளையில் இவர்களுடைய அரட்டைக் கச்சேரியும் ஆரம்பமாகிறது!''

''எல்லாருமே அப்படி இருந்து விடுவதில்லை, ஸார்!''

''நான் மட்டும் என்ன சொல்கிறேனாம்? தமிழகத்துக்கு வந்த ஒரு

வங்காளி தனக்குச் சிபாரிசு செய்யப்பட்ட ஒரு தமிழ்ப் படத்தைப் பார்த்துத் தொலைத்துவிட்டு மூந்தா நாள் ஹிந்துப் பத்திரிகையிலே ஒரு கடிதாசு எழுதியிருக்கான், பார்! புராதனமான உயர்ந்த பண்பாடுகளையும் கலைகளையும் கொண்ட தமிழகத்தில் சினிமாக்களில் 'டுவிஸ்டும், பெல்லி டான்சும், ராக் அண்டு ரோலும் பொருத்தமில்லாத வகையில் புகுவானேன்? இந்த ஆபாசங்களைத் தமிழர்கள் எப்படிப் பொறுத்துக் கொள்கிறார்கள்' என்று அவன் கேட்கும்போது அவமானத்தால் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல் தோன்றுகிறது. சென்ஸார் போர்டுகளுக்கு இவற்றையெல்லாம் கட்டுப்படுத்தும் அதிகாரம் கிடையாது. ஆனால் வங்கத்தில் மக்களின் அபிப்பிராயமே படாதிபதிகளை ஒழுங்கான வழியில் செல்லச் செய்கிறது; வங்கச் சூழ்நிலைக்கு ஒத்து வராத இத்தகைய ஆபாச நடனங்களும் ஹாஸ்யங்களும் இடம் பெற்றால் அப் படத்தை மக்கள் அறவே புறக்கணித்துப் பாடம் கற்பிப்பார்கள் என்கிறான் அவன் கடிதத்திலே.''

''சினிமா உலகத்தின் பேரில் உங்களுக்கு ஏன் சார், இத்தனை வெறுப்பு? கிடக்கட்டும், நம்ம விஷயத்துக்கு வாங்க'' என்றான் தங்கப்பன்.

''திரைப் படங்களுக்கு நான் விரோதியில்லை, தங்கப்பா! நல்ல படங்களும் வரத்தான் செய்கின்றன. நமது மாணவர் குலத்திலும் மணியானவர்கள் ஏராளமாயிருக்கிறார்கள். ஆனால் எனக்குத் தெரிஞ்சே சுற்று வட்டாரத்திலே நாலுபேர் இருக்கிற நிலத்தை ஜாடாவா விற்று சினிமா எடுக்கிறேன்னு கிளம்பி உள்ளதையெல்லாம் தீர்த்துக் கட்டிப்புட்டு இன்னும் கொண்டா கொண்டான்னு அந்தச் சினிமா பூதம் கேட்க இவங்க அதை விட்டுத் தொலைக்கவும் முடியாமெ கூட இருக்கவும் முடியாமெ தவிச்சதைப் பார்த்திருக்கிறேன். அப்படி இருக்க நீ நிலத்தை விற்றும் கிடைப்பதை வைச்சு உருப்படியா ஒரு தொழிற்சாலை ஆரம்பிக்கிறேன்னு சொல்றதே பெரிய காரியம். பேஷா செய்துப்புடு. சத்தியபுரி போன்ற சின்ன ஊர்களிலேதான் முக்கியமா சிறு தொழில்கள் ஏராளமாப் பெருகணும். சென்னை மாதிரி பெரிய நகரங்களிலேயே எல்லாத் தொழில்களையும் ஏற்படுத்திவிடறது; அப்புறமா 'நகரங்களிலே ஜன நெருக்கடி மிகுதியாகிடுச்சு; வாழ்க்கைச் செலவுகள் உயர்ந்து போச்சு'ன்னு அடிச்சுக்கிடறது: பிறகு கிராமத்துக்குத் திரும்பிப் போன்னு நடக்குமா அது?''

''சரி சார், என்ன தொழிலை ஆரம்பித்து நடத்தலாம், அதைச் சொல்லுங்க!'' என்றான் தங்கப்பன்.

''எவ்வளவோ துறைகள். வேர்க் கடலை உடைத்துத் தோலியை விசி



விடுகிறோம்; அதிலே இருந்து 'ஹார்டு போர்டு' என்கிற பலகை தயாரிக்கிறாங்க. ரம்பத்தை வைச்சு மரமறுக்கிறனிலே அப்போ விழுகிற மரத்துகள்களிலேயிருந்து கனமான, அழுத்தமான கட்டை உருவாக்கறாங்க. மரம் போலவே அதுக்கும் பல உபயோகங்கள். இப்படி வீண்னுன்னு நாம் நினைக்கிறதெல்லாம் பயனுள்ள பொருளாக மாற வழி வகுத்திருக்குது விஞ்ஞானம். ஆனால் என்னைக் கேட்டால் எந்தத் தொழிலகத்தையும் அமைக்கிறப்போ முக்கியமா கவனிக்க வேண்டிய விஷயம் ஒண்ணு இருக்கு. பெரிய திட்டமாகப் போட்டு எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை, நூல்—துணி ஆலை என்றெல்லாம் உருவாகும். அதைக் கட்டிக்கிட்டு இருக்கிறப்போ 'ஆகா! நாலாயிரம் மக்களுக்கு வேலை வாய்ப்பளிக்குது'ன்னு பெருமைப்பட்டுக்கிட்டு இருப்போம். ஆனால் இயந்திரங்களெல்லாம் நிறுவியான பிறகு பார்த்தால் எல்லாம் தன்னால் இயங்குவன—ஆடோமாடிக் — என்பதால் மாதச் சம்பளத்தில் நாற்பது பேர்கள்கூட இருக்க மாட்டார்கள். அது பிரயோஜனமில்லை. நமது நாட்டின் பெரும்செல்வமான மக்கள் தொகையை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் திட்டங்களாக வகுக்க வேண்டும். சிறு சிறுதொழில்களானாலும் பரவாயில்லை.''

''பெரிதாகச் செய்ய என்னிடம் பணமேது ஸார்? சிறு தொழில்தான்'' என்றான் தங்கப்பன்.

''பணத்தைப் பிரதானமாக வைத்துப் போடும்திட்டத்தினால் பலனும் விசேஷமாயிராது தம்பி.''

பலவாறுகயோசித்து விவசாயக் கருவிகளைத் தயாரிப்பது என்று தீர்மானித்தார்கள். சுற்றுப் புறங்களில் உள்ள விவசாயக் குடும்பங்களுக்கு அது பேருபகாரமாயிருக்கும். நவீன உபகரணங்களைப் பயன்படுத்திப் பலன் காண்பார்கள். இரும்புக் கலப்பையும் 'போர் வெல்' எனப்படும் குடைகிணறுகளுக்கான கருவிகளும் பண்ணுவதில் ஆரம்பித்தாலும், ''வெகு சீக்கிரம் டிராக்டரே தயாரிக்கும் அளவுக்குத் தொழிற்சாலையை வளர்க்க வேண்டும்'' என்று ஆசிர்வதித்தார் மாருதி. ''ஏதோ நிலத்திலேயிருந்து வருகிற வருவாய் போதும்னு கையைக் கட்டிக்கிட்டுச் சும்மா உட்கார்ந்திராமல் இன்னும் முன்னேற நினைக்கிற உன் ஆர்வம் வளரட்டும். சிறு துளி பெருவெள்ளம் என்பது போல் உன்னைப் போன்ற இளைஞர்களுடைய உயர்வுதான் நாட்டின் வளம்.''

''இப்படியெல்லாம் பொதுப்படையாகப் பேசியே நீங்க தப்பிச்சுக்கிடப் பார்க்கிறீங்க. அது முடியாது ஸார்! உங்க ஆசிப்படி என்னுடைய தொழி



லகம் வளர நீங்கதான் பக்கபலமா இருந்து உதவணும் எனக்கு'' என்றான் தங்கப்பன்.

மாருதி தாம் பார்த்து வந்த உபாத்தியாயர் தொழிலில் — நகரசபையைச் சேர்ந்த அந்தப் பள்ளியில் அரசியல் புகுந்து விளையாடியதன் காரணமாக—பல ஏமாற்றங்களைக் கண்டிருக்கிறார் என்பது ஏற்கனவே தங்கப்பன் அறிந்திருந்த விஷயம்தான். அவர் ராஜிநாமாக் கொடுக்க யோசித்தது பற்றியும் ஆனால் குடும்பப் பொருளாதாரம் குறுக்கே நின்று தடுத்தது என்றும் அவன் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தான். எல்லாம் நேர்மையாக நடந்திருந்தால் மாருதி இன்று தலைமை ஆசிரியராக விளங்க வேண்டியவர். ஆனால் துணைத் தலைமை ஆசிரியர் என்ற பதவிகூட அவருக்கு இன்னும் எட்டாத தொலைவில்தான் இருந்து வந்தது. மேனாட்டுக்கு அவர் போய்த் திரும்பியது அவர் தகுதியை அதிகரிப்பதற்குப் பதில் அதுவே அவருக்குக் குழி பறித்தது! உலகின் மறு பக்கத்தை அவர் கண்டு வந்து பலனென்ன? பேராசையும், பொறாமையும் சூழ்ச்சியும் நிறைந்த மற்றொரு குறுகிய உலகிலல்லவா அவர் சிக்கிக் கொண்டிருந்தார்! இந்தப் புதிய ஏற்பாட்டின் மூலம் அவருக்கும் நிம்மதி, தனக்கும் நம்பகமான துணை என்பதாகக் கணக்குப் போட்டான் தங்கப்பன்.

''தம்பி! இருபது வருஷமா பார்த்துக்கிட்டு வருகிற வாத்தியார் உத்தியோகத்தை உதறித் தள்ளி விடுறதென்பது இலகுவான காரியமில்லே. யோசித்துச் சொல்கிறேன்'' என்றவர் நான்கு நாட்கள் கழித்து மிகுந்த மன வருத்தத்துடன் சம்மதம் தெரிவித்ததும் ஏதோ அன்றைக்கே தொழிலகத்தைக் கட்டி முடித்துப் பார்த்து விட்டது போல் பூரித்தான் தங்கப்பன்.

அந்தப் பூரிப்பு கொடுத்த உற்சாகத்துடன், முழுமூச்சுடன் உழைக்க, இன்று நிஜமாகவே 'தாமரைத் தொழிலகம்' அவன் முன்னே நின்றது. அதனை மந்திரி தீனதயாளுவே திறந்து வைக்கவும் போகிறார். தான் சிறுவனாக இருந்த போது பொதுக்கூட்டம் ஒன்றில் தன்னைப் பற்றி இளக்காரமாகப் பேசி மக்களைச் சிரிக்க வைத்த அதே தீனதயாளு இன்று மக்கள் தன்னை வாழ்த்துவதைக் கேட்கப் போகிறார். 'எத்தனை பேர்களுடைய சொத்தைக் கரைச்சக் குடிச்ச குடும்பம்' என்று சிறுவனாயிருந்த தன்னைக் கேட்டுச் சொல்லொணாத துயரத்தை ஏற்படுத்திய மகேசுவரி, இன்று நூறு பேர்களுக்கு மேல் வேலை வாய்ப்பளிப்பதும் இன்னும் விரிவடைந்து மேலும் பலரை ஏற்றுக் கொள்ளக் காத்திருப்பதுமான இந்தத் தொழிலகத்தைப் பார்த்து வாயடைத்துத்தானே நிற்க வேண்டும்!

இவ்விதம் ஓரளவு இறுமாந்திருந்த தங்கப்பனுக்கு 'இந்த விழாவையெல்லாம் தீனதயாளு சாமர்த்தியமாகத் தமது சொந்த வெற்றியாக மாற்றிக் கொண்டு விடுவார்' என்று மாருதி கூறக் கேட்டதிலிருந்து கரத்துக் குறைந்துதான் போயிருந்தது.

## அத்தியாயம் 22

# பரிகாசச் சிரிப்பு

சலனமுற்ற இத்தகைய மன நிலையுடனேயேதான் அவன் மந்திரியின் வீட்டு வாசற்படிகளில் அடியெடுத்து வைத்து ஏறினான்.

''யார் வேணும்?'' என்ற அதிகாரத் தொனியுடன் கூடிய குரல் வரவே திரும்பிப் பார்த்தான்.

வராந்தாவில் நிழலுக்காகத் தட்டிகளை இறக்கி விட்டு விட்டு மேலே சுழலும் மின் விசிறிக்கடியில் அமர்ந்து கொண்டு 'ஃபெமினா' பத்திரிகையின் 'ஃபாஷன்' பக்கங்களைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள் உஷா.

அவனைக் கண்டதும் வியப்புற்ற போதிலும் எழுந்திருக்கவோ அல்லது அவனை உட்காரச் சொல்லவோ இல்லை. ''நீயா?'' என்று மட்டும் கேட்டாள்.

''ஆமாம், நான்தான். ஊட்டியில் என்னை முன்பின் பார்த்திராதவள்போல போய் விட்டாயே, அதே தங்கப்பன் தான். காலை அன்று உந்தி உந்தி நடந்தாயே, இப்போது தேவலாமா?''

உதகையில் அவனை இன்னாரென்று நன்கு அடையாளம் புரிந்து கொண்டிருந்த போதிலும் அவனுடன் பேசுவதோ பழகுவதோ தனக்கு இழுக்கு, கௌரவக் குறைவு என்று கருதியவளாக அங்கிருந்து விரைந்து சென்று விட்ட உஷா, பின்னால் தான் விம்மி விம்மி அழ நேர்ந்ததை இப்போது நினைவு

**ஆண்டவன் துணை**

இலண்டனில் ஒரு பயிற்சிக் கல்லூரியில் பேசிய லோக சபா தலைவர் ஸர்தார் ஹுகம் ஸிங் சொன்னார்: ''அனந்தசயனம் ஐயங்கார் சபாநாயகராக இருக்கும்காலத்தில் ஒவ்வொரு தடவையும் பார்லிமெண்ட் தொடங்கும் போதும், ஹரேராம்! என்று சொல்லிக் கொண்டே தம் ஆசனத்தில் அமர்வார். ஏன் அப்படி என்று இப்பொழுது புரிகிறது.

''ஐந்நூறுபேர்கள் கொண்ட இந்த மாபெரும் சபையில் நம்முடைய சாமர்த்தியத்தைக் கொண்டும், புத்தி சாதுர்யத்தைக் கொண்டும் மட்டும் காலம் தள்ளிவிட முடியாது. ஆண்டவன் துணையும் வேண்டும் என்பது தான் அதற்குப் பொருள்.''

---கொடை



---

சூர்ந்தாள். வாழ்நாளில் அது வரை துன்பம், அழுகை என்பதையே உணர்ந்திராதவள் தொடர்ந்து பல நாட்கள் கண்ணீர் பெருக்கினாள். தங்கப்பனின் எதிரே தான் தைரியமாக இருப்பது போல் காண்பித்துக் கொள்வதும், அவர் தலை மறைந்ததும் கோழையாக மாறிக் கதறுவதுமாக இருந்ததை இப்போது அவள் ஞாபகப்படுத்திக் கொண்டாள். மகேசுவரி எவ்வளவோ சொல்லித் தேற்றியும் அவள் புலம்பல் ஓயவில்லை. எலும்பு முறிவு ஏற்பட்ட காலில் இருந்த உபாதையால் அவள் அழவில்லை. அந்தக் காலில் நிரந்தரமாக ஊனம் விழுந்து விடுமோ என்று நினைத்துப் பீதியில் அரற்றியதுதான் அதிகம். ஆனால் கட்டுக்கள் பிரிக்கப்பட்டு, தான் மீண்டும் பழையபடியே நடக்க முடியும், தன் அழகுக்கு எந்தக் குறையும் உண்டாகவில்லை என்பது உறுதியானதும் அவளிடம் முன் போலவே அதிகார தோரணையும் அலட்சிய சுபாவமும் குடிபுகுந்து கொண்டு விட்டன. அப்போது கண்ணீர் பெருக்கியதற்கெல்லாம் சேர்த்து வைத்து இப்போது தங்கப்பனை நேரில் பார்த்ததும் அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. தன் காலைப் பற்றி அவன் விசாரித்ததும், ''நீபாட்டுக்கு உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போகாமல் பிறர் விஷயங்களில் குறுக்கிடும்போது, அதனால் ஏற்படும் துன்பங்களை அவர்கள் அநுபவித்துத்தானே தீர வேண்டும்?'' என்று சீறினாள் அவள்.

''நீ என்ன சொல்லுகிறாய், உஷா?''

''தமிழில்தானே பேசினேன், புரியவில்லையா? 'காண்ட்யூ மைண்ட் யுவர் ஓன் பிஸினஸ்?' அன்று கர்மசிரத்தையாக நீ கூச்சல் போட்டிராவிட்டால் நானும் திடுக்கிட்டு நிலை தடுமாறி விழுந்திருக்க மாட்டேன்; ஒரு மாதம் காலில் கட்டுப் போட்டுக் கொண்டு படுத்த படுக்கையாகக் கட்டிலில் கிடந்திருக்கவும் வேண்டாம்!''

தங்கப்பன் சிரித்தான். ''அப்படி நான் சத்தம் போட்டதால்தான் நீ கட்டிலில் கிடந்தாய். இல்லா விட்டால் உன்னை வேறு இடத்தில் கிடத்த வேண்டி நேர்ந்திருக்கும்! கார் வந்து மோதிய பிறகு உன் உடலைத்தான் ஐம்பதடி ஆழத்தில் முனீசுவரன் கோயிலருகே கண்டிருக்க முடியும். உயிர் பிரிந்து பறந்து விட்டிருக்கும்!''

''கார் வந்தால் ஒதுங்க எனக்குத் தெரியாதா? 'ஸ்டண்ட்' வேலைகள் காட்டி டார்ஜான் போல் மதிலைத் தாண்டியும் புதர்களைப் பற்றித் தொங்கியும் கீழே உள்ள மலைப் பாதையில் குதித்து வந்து நீதான் கட்டிக் காத்தாயாக்கும், என் உயிரை!''

தங்கப்பன் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். ''இப்போது பேசுவதற்கு என்ன; உயிர் பிழைத்த தைரியத்தில் எதை வேணுமானாலும் சொல்லலாம். ஆனால் ஆபத்துக்கு உதவ எப்போதுமே யாராவது காத்துக்கிட்டிருப்பாங்கன்னு நம்பறதற்கில்லை. ஜாக்கிரதையாக இருக்கணும் நீ! உன் அப்பாவின் விருப்பத்துக்கு விரோதமா உன் இச்சைப்படி நீ குதிரையை அடித்து விரட்டிக் கொண்டு போனாய்; அதற்காக அந்தக் குதிரைக்காரனுக்கு லஞ்சம் கூடக் கொடுத்தாய் என்பதை உன் அப்பாவிடம் இப்போது நான் சொன்னால் என்ன ஆகும்?''

உஷா வசீகரப் புன்னகையுடன் அவனை நோக்கினாள். '' 'பிளாக் மெயில்' செய்யப் பார்க்கிறாயா?'' என்று கேட்டுச் சிரித்தாள். ''தயவு செய்து அதைச் சொல்லு அப்பாவிடம்! அவர் ரொம்ப சந்தோஷப்படுவார். அந்த மகிழ்ச்சியில் உன் தொழிற்சாலை சம்பந்தமாக மேலும் உதவிகள் ஏதேனும் தேவையாயிருந்தால் செய்து கொடுப்பார்! பெர்மிட்டு — லைசென்ஸ்; கடன் — வட்டி; அது — இது என்று ஏதாவது தேவைகள் இருக்குமே!''

தங்கப்பன் அவள் கூறுவது மெய் யென்று உணர்ந்தான். தன் பெண்ணுடைய துணிச்சலைப்பற்றித் தங்கப்பன் கூறக் கேட்டுப் பெருமிதமுறத்தான்

செய்வார் தினதயாளு. இந்தச் செய்தியைச் சொன்ன வாய்க்குச் சர்க்கரை போடத்தான் நினைப்பார். தமது மகள் செய்யும் எதையும் தவறு என்று கனவிலும் கருத முடியாது அவரால்!

"அவரைப் பார்க்கத்தான் வந்தேன், மாலை விழாவுக்கு நேரில் அழைக்க. தலைக்கு மேலே வேலைகள் இருக்கின்றன எனக்கு" என்ற தங்கப்பன் கைக் கடிகாரத்தை நோட்டமிட்டான். "நேரமாகிறது."

"அவர் 'ரெஸ்ட்' எடுத்துக் கொண்டிருக்கிறார், தொந்தரவு செய்வதற்கில்லை" என்றாள் உஷா.

"சரி, நான் போய் வருகிறேன். அவர் எழுந்ததும் நான் வந்து போன விவரம் சொல்லு...... அப்புறம்...."

"அப்புறம்?"

அவள் பகட்டையும் ஆணவத்தையும் அவள் தன்னிடம் நடந்து கொண்ட விதத்தையும் — எல்லாவற்றையும் மறந்து நட்புக் கரம் நீட்ட விரும்புபவன்போல் தங்கப்பன் உண்மையான கனிவு ததும்பும் குரலில், "நீயும் சாயந்திரம் விழாவுக்கு வா, உஷா. எனக்கு சந்தோஷமாய் இருக்கும்" என்றான்.

"உன்னை சந்தோஷப்படுத்துவதுதான் எனக்குக் காரியமா?" என்றாள் அவள்.

விருட்டென்று எழுந்து நடந்தான் தங்கப்பன். கலகல வென்ற பரிகாசச் சிரிப்பு அவனைப் பின் தொடர்ந்தது.

கேட்டை அவன் தாண்டி வெளியேறுகையில் அவன் மாமா முருகேசன் அதே கேட்டினுள்ளே நுழைந்து கொண்டிருந்தார்.

(தொடரும்)

# கடல் படும் பாடு

விஜயம்



**துறவி:** இறைவனின் அருட்பிரவாகம்போல் பொங்கும் கடலே, அடுத்தடுத்து ஓயாமல் வரும் உன் அலைகள் எதைக் குறிக்கின்றன? பிறப்பும், இறப்பும் ஓயாமல் வரும் என்பதையா? இந்த உடம்பு தோன்றித் தோன்றி அழியும் என்பதையா? சுகமும் துக்கமும் மாறி மாறி வரும் என்பதையா? இளமையும் முதுமையும் ஓடி ஓடி வரும் என்பதையா?



**இளங் காதலன்:** அன்பே, அலைகடலைப் பார்! நம் இருவருடைய தூய காதலையும் தன் அலைக் கரங்களைக் கொட்டி ஆரவாரம் செய்து எப்படி வரவேற்கிறது! அத்துடன் கட்டுக்கு அடங்காமல் பொங்கி எழும் தன் மகிழ்ச்சிப் பெருக்கில் நம் இருவர் மீதும் குளிர்ந்த அலைத் திவலைகளாகிய பன்னீரைத் தெளித்தும் புளகாங்கிதம் அடைவதையும் கவனி. இந்த வீசும் காற்று நம் இருவரையும் சொர்க்கத்துக்குத் தூக்கிச் செல்கிறது!

**காதலி:** அதெல்லாம் சரிதான். யார் இல்லை என்றீர்கள்? எனக்கு இந்தக் காற்றினால் ஒரே குளிராக இருக்கிறது. இந்தக் குளிரில் மேல் உலகம் போக முடியாது. வீட்டுக்குப் போகலாம், வாருங்கள்.



**சம்சாரி:** கடலிலிருந்து கிளம்பும் ஒவ்வோர் அலையும் கரையைத் தகர்த்து விடத்தான் முயல்கிறது. ஆனால் முடியவில்லையே! நானும் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு என் மூத்த பெண் ஜகதாவின் கல்யாணத்தைக் கடன்பட்டுச் சிரமப்பட்டு முடித்தேன். அதுதான் ஆரம்பம். அதிலிருந்து பின்னர் புவனாவின் கல்யாணம், விஜயத்தின் கல்யாணம், சரசுவின் கல்யாணம், கிரிஜாவின் கல்யாணம் என்று தொடர்ந்து அலை அலையாக எழுந்த ஏழு கல்யாணங்களையும் எப்படியோ இறைவன் அருளால் முடித்து விட்டேன். ஒவ்வொரு கல்யாணத்தின்போதும் விரைவில் கடனைத் தீர்த்து விடலாம் என்று நம்பிக் கொண்டே வந்திருக்கிறேன். ஆனால் அது தீர்ந்தபாடாயில்லை. இதோ பிரேமா வளர்ந்து விட்டாள். அவளுக்கு மணம் முடிக்க வேண்டும். அது மட்டுமா? அடுத்து எழும் அலையாக வத்ஸலா கல்யாணத்துக்குத் தயாராயிருக்கிறாள். எப்போது அலைகள் ஓயுமோ, எப்பொழுது என் பிரச்னைகள் தீருமோ! ஈசுவரா! சம்சாரத்தை சாகரம் என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்!



**மனைவி:** என்ன, அப்படியே பித்துப் பிடித்த மாதிரி குத்துக் கல்லாக உட்கார்ந்து யோசிக்க ஆரம்பித்து விட்டீர்கள்! இந்த அலைகளெல்லாம் எத்தனை அழகாக ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டிருக்கின்றன. இவைகளையெல்லாம் பார்க்கவேயில்லையா?

**கணவன்:** பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். அலைகளைப் பார்த்ததும் எனக்கு அவைகளைப் போலவே அடுக்கடுக்காக வரும் வீட்டுச் செலவுகள் ஞாபகத்துக்கு வந்து விட்டன. அவைகளும் இப்படித்தானே ஓயாமல் வருகின்றன!



**கடல்:** ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு விதமாக வர்ணிக்கிறார்கள். வர்ணிக்கிறார்களா? அல்லது கேலி செய்கிறார்களா? யாருக்கு வேணும்? கேட்டுக் கேட்டு அலுத்து விட்டது. காலமெல்லாம் முடிவின்றிப் பொங்கியும் தணிந்தும் நான் படும் அவஸ்தை எனக்கல்லவா தெரியும்! ஆண்டவனே, என்னை ஏன் படைத்தாய்? போதும் இந்தத் துன்பம் எனக்கு! இதிலிருந்து மீ[illegible]வழியே இல்லையா?

குறும்புக்காரச் சித்தப்பா ஊரிலிருந்து வந்திருந்தார். பையன்களுக்குப் பல வேடிக்கை வித்தைகளையெல்லாம் அவர் செய்து காட்டினார். "இதோ பார்! இந்தப் பேனாவை மறையச் செய்து பென்சிலை வர வழைக்கிறேன்" என்று கூறி, அப்படியே

வரவழைத்துக் காட்டினார். பையன்கள் அதைக் கண்டு ஆச்சர்யமடைந்தார்கள். "எதையுமே மாற்றுவீர்களா, சித்தப்பா!" என்றார்கள் பையன்கள். "ஓ! மாற்றுவேன். ஆனால் உங்களைப் போல் விளையாடும்

பையன்களைப் படிக்கும் பையன்களாகத் தான் என்னால் மாற்ற முடியாது!" என்றார். பையன்கள் முகத்தில் அசடு வழிந்தது. "இதோ இந்த நயாபைசாவை ரூபாயாக மாற்றுங்கள்!" என்றார்கள் பையன்கள்.

"சரி!" என்று கூறிய சித்தப்பா அதைத் தம் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு "சூ! மந்திரக்காளி! இதோ ரூபாய்" என்று அவர்களிடம் ரூபாயை எடுத்துக் கொடுத்தார். "இதோ பாருங்கள். இதை வைத்துக் கொண்டு இனி மேல் படியுங்கள்" என்றார் சித்தப்பா.

"டேய்! ரூபாயைச் சுண்டிப் போடுவோம். தலை விழுந்தால் சினிமா போவோம். பூ விழுந்தால் ஹோட்டலுக்குப் போவோம். இரண்டுமில்லாமல் செங்குத்தாக நின்றால் நாம் சித்தப்பா சொன்னபடி படிப்போம்!" என்று கூறி ரூபாயைச் சுண்டினார்கள்.

அப்பப்பா! அந்தப் பையன்களுக்குத் தான் என்ன ஏமாற்றம்! சுண்டிய ரூபாய் தரையில் உருண்டு போய்ச் சுவரின் மேல் சாய்ந்தவாறு செங்குத்தாக நின்றது. சித்தப்பா சிரித்தபடியே, "நாணயம் செய்த வேலை எப்படி! நாணயத்தோடு போய்ப் படியுங்கள்" என்றார். பையன்கள் அயர்ந்து விட்டார்கள்.

பாப்பா மலர்

சாமா

ஏன்

# 6,00,000

# மக்களுக்குமேல் கனரா பாங்கை உபயோகிக் கிறார்கள்

ஆறுலட்ச மக்களுக்கு மேல் கனரா பாங்கை உபயோகிப்பதற்குக் காரணம், கனரா பாங்கின் உதவி மனப்பான்மை, சிநேகபாவ சேவை முன்னேற்ற நோக்கம் இவை மட்டுமல்ல இவற்றோடு, கனரா பாங்கின்

- ரூ. 90 கோடிக்கு அதிகமான அலுவல் நிதி
- 59 வருட தேர்ந்த அனுபவம்
- பல திறப்பட்ட பரந்த சேவைகள்
- உலக முழுதும் சேவை அளிக்கும் பிரதிநிதிகள்
- இந்தியாவில் இயங்கும் 235 மேற்பட்ட கிளைகள்

உங்களால் ஒரு பாங்கை உபயோகிக்க முடியுமானால், கனரா பாங்கை உபயோகியுங்கள்

**முன்னேறுங்கள்—கனரா பாங்குடன் முன்னேறுங்கள்**

## கனரா பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: பெங்களூர் [ஸ்தாபிதம்: 1906] பதிவுக் காரியாலயம்: மங்களூ



பிரெஞ்சு தேசியத் திருநாளன்று பிரஞ்சுத் தூதுவர் திரு ரோஸ் அளித்த விருந்தில் ராஜாஜி.

ஹைதராபாத்தில் பாரதீய வித்யாபவன் ஆந்திரப் பிரதேசக் கேந்திரத்தை டாக்டர் ராதாகிருஷ்ணன் குத்துவிளக்கேற்றித் தொடங்கி வைத்தார். ▼





அளசிங்கப் பெருமாள் நூற்றாண்டு விழாவில் அவரது திருவுருவத்தைத் திரு டி. எஸ். வேங்கடராமையர் திறந்து வைத்தார்.

*

தமிழ்நாடு வாலிபர் விழா கருத்தரங்கில் திரு ம. பொ. சி. பேசுகிறார்.

எண்ணூர் உரத் தொழிற்சாலை விஸ்தரிப்புத் திட்டத்துக்கான ஒப்பந்தத்தில் ஈ. ஐ. டி. பாரி ஸ்தாபனத்தாரும் ஜப்பான் சோஷி கைஸா ஸ்தாபனத்தாரும் கையெழுத்திடுகின்றனர். ▼





மைசூர் மன்னர்கள் தங்கள் பெயரோடு 'ஒடெயரு' என்னும் பட்டத்தைத் தாங்கி நிற்பதற்கு ஒரு சுவையான வரலாறு இருக்கிறது. பொருளுக்கு ஆசைப்படாது 'ஜங்கமர்'கள் மன்னர் பரம்பரைக்கு இந்தப் பட்டத்தைச் சூட்டித் தாமும் புகழ்பெற்ற கதையைக் கன்னடத்திலும் தமிழிலும் சிறந்த எழுத்தாளரான திரு சேஷநாராயணா சுவைபடத் தந்துள்ளார்: —ஆசிரியர்

# பட்டம் பெற்ற மன்னர் பரம்பரை

— சேஷ நாராயணா —

சென்னை கவர்னரின் பெயரைத் தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் தவறுதலாக, "ஜெயசாமராஜ உடையார்" என்று எழுதிக் கொண்டிருக்கின்றன.

உடையார் என்பது ஓர் இனத்தாரைக் குறிக்கும் சொல் ஆகும். ஆனால் மைசூர் அரசர்கள் பெயருக்குப் பின்னால் இருக்கும் இந்த 'ஒடெயர்' இனத்தைக் குறிக்கும் சொல் அல்ல.

கன்னடத்தில் 'ஒடெயரு' என்றால் 'பிரபுக்கள்' என்று பொருள். ஆங்கிலத்தில் லார்டு (லார்ட்) என்று சொல்வார்களே- லார்டு மௌண்ட் பாட்டன் - அது மாதிரி. இந்த 'ஒடெயரு' என்பதை ஆங்கிலத்தில் எழுதும் பொழுது 'ஒடெயர்' என்று மாற்றினார்கள் (Wodiyar). தமிழ்ப் பத்திரிகைகளோ இதை முற்றிலும் மாற்றி 'உடையார்' ஆக்கி விட்டன.

'பிரபு' என்று குறிக்கும் சொல் ஓர் இனத்தாரின் பெயர் ஆகிவிட்டால், அது எவ்வளவு தவறாயிருக்கிறது?

தற்பொழுது சென்னை கவர்னராக விருக்கும் திரு ஜெயசாமராஜரும் கன்னடத்தில் கையெழுத்திடும்போது 'ஜயசாமராஜ ஒடெயரு' என்றே ஸ்பஷ்டமாக எழுதுகிறார். ஆங்கிலக் கையெழுத்தில் கையெழுத்திடும் பொழுது மட்டும் Wodiyar என்று குறிக்கிறார். ஆங்கிலேயர்களுக்கு நம் பெயர்களை மூக்கு, முனை உடையாமல் சொல்லத் தெரியாததினால் நம் நாட்டு நகரங்கள், நதிகள் முதலியவற்றின் பெயர்களெல்லாம் விசித்திரமாக மாறி விட்டன. தஞ்சாவூர் 'டாஞ்சூர்' ஆனது போல.

இந்த 'ஒடெயரு' அதாவது பிரபுக்கள் என்னும் பட்டப் பெயரை மைசூர் அரசர்கள் வைத்துக் கொள்வதற்கும் ஓர் இதிகாசம் இருக்கிறது.

அதன் வரலாறு:

ஒரு காலத்தில் பாரதம் முழுவதும் போற்றப்பட்டிருந்த விஜயநகர சாம்ராஜ்யம், தாளிகோட்டைப் போரில் முகம்மதியர்களால் தோல்வியடைந்து பெரும் சூறாவளிக்கு இரையான பிறகு, தென்னாட்டில் பெரும் மாறுதல் ஏற்பட்டு விட்டது. ஒரே குடையின் கீழ் விஜயநகரத்து அரசர்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த சாம்ராஜ்யம், எத்தனையோ சிறுசிறு சமஸ்தானங்களாக அப்பொழுது தலைதூக்கி நின்றன. அவைகளில் மைசூரும் ஒன்று.

மைசூர் இதற்கு முன்பும் ஒரு சமஸ்தானமாகவே இருந்தது. அதன் வரலாறு மிகவும் பழையது. ஆனால் விஜயநகரத்து அரசர்களின் காலத்தில் அவர்களின் ஆட்சிக்குட்பட்டுக் கப்பம் செலுத்திக் கொண்டிருந்தது.

விஜயநகரத்தின் வீழ்ச்சிக்குப் பிறகு மைசூரும் சுதந்திர நாடாயிற்று. சாமராஜர் என்பவர் அப்பொழுது மைசூரின் அரசராயிருந்தார்.

திடீரென்று சாமராஜர் ஒரு நாள் இறந்து விட்டார். அவருக்கு ஆண் சந்ததி இல்லை. ஒரே பெண்; அவள் மிக அழகி.

கணவனை இழந்த மகாராணி மிக்க துயரத்துடன், தன் ஒரே மகளுடன் ஆட்சி பீடத்தில் அமர்ந்து ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்தாள். அப்பொழுது மைசூரிலிருந்து சில மைல்கள் தொலைவிலிருக்கும் ஹாதினாரு என்னுமிடத்தில் மகாராணி வசித்து வந்தாள்.

சாமராஜர் காலத்திலேயே அவர் சேனையில் ஒரு சிப்பாயாக இருந்த மாரநாயக்கன் என்னும் இளைஞன், தன் பராக்கிரமத்தால் படிப்படியாக முன்னேறி, சேனைக்குத் தலைவனும் ஆகி விட்டான்.

அரசர் இறந்தாரோ இல்லையோ, நாயக்கன் பிரபலமாகத் தலை தூக்கினான்; சேனை அவன் சொற்படி கேட்டது; அரச குடும்பத்தார் மீது நிர்ப்பந்தம் விதித்துத் தானே 'மைசூர் அரசன்' என்று அவன் பறைசாற்றிக் கொண்டு விட்டான்.

அத்துடன் அவன் செய்கை நின்றதா என்ன? கட்டழகியான அரசகுமாரியின் மீதும் அவனுடைய காமக் கண் விழுந்தது. உடனே தனக்கு அவளை மணம் செய்து கொடுக்க வேண்டும் என்று மகாராணிக்குச் செய்தி விடுத்தான்.

மகாராணி கதி கலங்கினாள்; என்ன செய்வதென்று தெரியாமல் திணறினாள். உயர் குலத்தவரான தன் மகள் கீழ் இனத்தானாகிய மாரநாயக்கனுடன் வாழ்வதா? அரச குடும்பத்தாருக்கு என்ன சோதனைக் காலம் வந்திருக்கிறது? மாரநாயக்கனோ மகாராணிக்கு ஒரு கெடு கொடுத்தது. அதற்குள்ளாக ராஜகுமாரியை ஒப்படைக்காவிட்டால் பலவந்தமாக அரண்மனைக்குள் புகுந்து அவளைத் தூக்கிச் செல்லப் போவதாக மிரட்டியிருந்தான்.

அந்தச் சமயத்தில் அவமானகரமாக இப்படி வாழ்வதைவிட உயிர் துறப்பதே மேல் என்று மகாராணி முடிவு செய்தாள். மகளுக்குத் தெரியப்படுத்தாமல் நெருப்பை

மூட்டி அதில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்வது என்று முடிவு செய்தாள்.

ஆனால் அப்படி அசம்பாவிதமான காரியம் ஏதும் நடைபெறவில்லை. தெய்வத்தின் அருள் அரச குடும்பத்தாருக்கு இருக்கத்தான் செய்தது.

இந்தத் தருணத்தில்தான் வடக்கிலிருந்து தெற்கே இரு அரச குமாரர்கள் நாடோடிகளாக வந்தனர். அவர்கள் வீரர்களாகவும், பராக்கிரமசாலிகளாகவும் இருந்தபோதிலும், தெய்வ அருள் இல்லாமல் துர்ப்பாக்கிய நிலையை அடைந்திருந்தனர்.

முகம்மதியர்கள் பாரத நாட்டில் ஓங்கியிருந்த காலம் அது. ஏறக்குறைய வடநாடு முழுதும் மொகலாயர்களால் அடக்கப்பட்டுக் கொள்ளையடிக்கப்பட்டிருந்த சமயம் போரில் தோற்றுப் போய், தங்கள் தாய் நாடான கத்தியவாரை (ராஜஸ்தான்) அன்னியருக்குப் பறி கொடுத்து விட்டு, யதுராயர் கிருஷ்ணராயர் என்ற அந்த இரு சகோதரர்களும் மனமுடைந்து நாடோடிகளாகத் தெற்கே வந்து விட்டனர். அவர்களே மைசூருக்கு அருகில் உள்ள மேலு கோட்டையில் தங்கினர். (மேலுகோட்டை ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் பல வருஷங்கள் வாழ்ந்த புண்ணிய ஸ்தலமாகும்.) அப்படி அவர்கள் வந்தது 1399ம் ஆண்டில்.

மைசூர் அரச குடும்பத்தாருக்கு நேர்ந்திருந்த அல்லல் இந்தச் சகோதரர்களின் காதுகளுக்கு எட்டியது. அப்பொழுது அரச குடும்பத்துக்காக உயிர் விடவும் சித்தமாயிருந்த ராஜ பக்தியுள்ள நால்வர் எப்பொழுதும் மகாராணிக்குத் துணையாக இருந்தனர். அரண்மனையின் விசுவாச ஊழியர்களான இவர்கள்தாம் அந்தச் சமயத்தில் அரண்மனைக்குள் கவிழ்ந்திருந்த துயரத்தைப் போக்கடித்தவர்கள் என்று தாராளமாகச் சொல்லலாம்.

அந்த நால்வரில் இருவர் பெயர் திம்மரசய்யா, நாரணய்யா என்பதாகும். மற்ற இருவர் ஜங்கமர்கள். ஜங்கமர் என்பவர் சைவர்களின் புரோகிதர் ஆவார்.

ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ இராமானுஜர், ஸ்ரீமத்துவரைப் போலவே கன்னட நாட்டில் மற்றொரு மதாச்சாரியார் தோன்றியிருந்தார். அவர்தான் ஸ்ரீ பசவேசுவரர். அவர் சிஷ்யர்கள் லிங்காயதர் (Lingayat) என்று அழைக்கப்படும் சைவர்கள். இந்தச் சைவர்களின் வைதீகக் கிரியைகளை நடத்தும் புரோகிதர்களுக்கு ஜங்கமர் என்று பெயர்.

திம்மரசய்யா, நாரணய்யாவுடன் அந்த இரு ஜங்கமர்களும் இப்பொழுது மேலு கோட்டைக்கு விரைந்தனர். மைசூரின் நிலையைப் பற்றி அந்த இராஜ குமாரர்களுக்கு விவரமாக எடுத்துரைத்தனர். என்னசெய்ய வேண்டும் என்ற பேச்சு வார்த்தை நடந்தது.

பிறகு மகாராணி இரகசியமாக அந்த இராஜகுமாரர்களை அரண்மனைக்குள் வரவழைத்துக் கொண்டாள். அந்தச் சமயத்தில் இந்த நால்வரும் சுறுசுறுப்பாக வேலை செய்தனர். பேச்சு வார்த்தைகளெல்லாம் இவர்கள் மூலமாகத்தான் நடந்தன.



கடைசியாக அந்த இராஜகுமாரர்களுக்கும் மகாராணிக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி உபாயமாக யதுராயர், மார நாயக்கனைச் சிறைப் பிடிக்க வேண்டும். பிறகு அரசகுமாரியை யதுராயருக்கு விவாகம் செய்யவும் வேண்டும். மகாராணிக்கு ஆண் குழந்தைகள் இல்லாததினால் யதுராயரே மைசூருக்கு அரசர் ஆவார். மகாராணி யதுராயருக்குப் பட்டம் அளித்து முடி சூட்ட வேண்டும்.

ஏற்பாடுகள் மும்முரமாக நடந்தன. அந்தச் சமயத்தில் இந்த நான்கு இராஜ பக்தர்களும் திறமையாக வேலை செய்தனர். தங்களைப் போலவே விசுவாசமுள்ள ஊழியர்களைக் கொண்டு அரண்மனையில் என்ன நடத்த முடியுமோ அதன்படி திட்டம் வகுத்தனர்.

மகாராணி மார நாயக்கனுக்குச் செய்தியை அனுப்பினாள். தன் குமாரியை நாயக்கருக்குக் கலியாணம் செய்யத் தான் மட்டற்ற மகிழ்ச்சி அடைவதாகவும், ஆகையால் நல்ல நாளில் வந்து நாயக்கர் அரண்மனையில் அரச குமாரியை மணம் செய்து கொள்ளவேண்டுமென்றும், அரண்மனையில் இதற்கான வேலைகள் நடந்து கொண்டிருப்பதாகவும், நாயக்கர் சேனை முதலியவற்றை அழைத்து வந்து அரண்மனையில் அமர்க்களம் செய்யாமல் தமது பந்துக்களுடன் மட்டும் வந்து இந்தத் திருமணத்தை முடித்துக் கொள்ள வேண்டும் என்றும் மகாராணி தன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாள்.

மாரநாயக்கன் இதைக் கேட்டு மிகுந்த பரவசமடைந்தான். அரண்மனைக்குள் இரு சிங்கக்குட்டிகள் பதுங்கியிருக்கின்றன என்



## தப்பும் பாம்பு!

நச்சுப் பாம்பு கடித்துத்தான் விஷம் ஏற வேண்டும் என்பதில்லை. தென் ஆப்பிரிக்காவில் பியூஸ் லான்க் என்று ஒரு வகைப் பாம்பு இருக்கிறது. கன்னங் கரேலென்று, கழுத்தைச் சுற்றி வட்டக் கோடுகள் உள்ள இப்பிராணிதான் உலகத்திலே மிகச் சிறிய நாகப் பாம்பாம். இலேசாக இது அதிரப்பட்டாலும் சரிதான்; தலையை நிமிர்த்தி அண்ணாந்து பார்க்கும். அதே நேரத்தில் இதன் நச்சுச் சுரப்பிகள் அழுத்தப்பட்டு, விஷம் தயாராகிவிடும்.... எதிரியின் கண்களை நோக்கி விஷத்தைத் துப்பும். ஐந்நூறு அடிகளுக்கு அப்பாலும் இதன் விஷம் எதிரியின் கண்களைக் குறி தப்பாது தாக்கும். பியூஸ்லான்க் துப்பும் விஷத்திலிருந்து உயிர் தப்பாது.

--துராப்

பதை அவன் கனவிலும் நினைக்கவில்லை. மேலாக 'நாயக்கருடன் அரசகுமாரியின் விவாகம்' என்று அரண்மனையில் திருமண ஏற்பாடுகள் விமரிசையாக நடந்து கொண்டிருந்தன. ஊரெல்லாம் இதே செய்தி; அமர்க்களப்பட்டது.

அந்த நன்னாளும் வந்தது. மாரநாயக்கன் மணமகன் அணிய வேண்டிய ஆடைகளை அணிந்து, குதிரையின் மீது உட்கார்ந்து, தன் உற்றார் உறவினர்களை அழைத்துக் கொண்டு, ''மாரநாயக்கருக்கு ஜே ஜே ஜே'' என்று வந்திமாகதர்கள் பராக் சொல்ல, கோட்டை வாசலைத் தாண்டி மரணத்தின் குகைக்குத் தான் அடி வைத்துக் கொண்டிருப்பது தெரியாமல் அரண்மனையை நோக்கி விரைந்தான். சேனை கோட்டைக்கு வெளியே நின்று விட்டது.

அவன் கோட்டைக்குள் பிரவேசித்தானோ இல்லையோ, உடனே கோட்டையின் கதவு 'தடார்' என்று சாத்தப்பட்டது. இப்போது தான் ஏதோ சூழ்ச்சியில் அகப்பட்டு விட்டதை நாயக்கன் உணர்ந்தான். காரியம் கெட்டு விட்டது. சேனை வெளியே இருந்து விட்டது. உடனே அவன் குதிரையின் மீதிருந்து கீழே குதித்து, ''அடே, யாரடா, அது? கதவைத் திறவுங்கள்'' என்று உரக்கக் கத்தினான்.

மின்னல் வேகத்தில் நூற்றுக்கணக்கான வீரர்கள் நாயக்கனைச் சூழ்ந்து கொண்டனர். அவர்களுக்குள் சூரிய குமாரர்களைப் போல அந்த இராஜபுத்திரர்கள் காட்சியளித்து, அந்த வீரர்களுக்குத் தலைமை தாங்கி நாயக்கனின் கண்களைப் பறித்தனர்.

போர் மூண்டது. சில மணி நேரத்திலேயே முடிந்தும் விட்டது. யதுராயரின் வாளுக்கு நாயக்கன் இரையானான். தேகத்திலிருந்து துண்டிக்கப்பட்ட அவன் சிரத்தை ஒரு மூங்கிலில் செருகிக் கோட்டைக் கதவைத் திறந்து வெளியில் கொண்டு வரவே, இந்தக் கோரமான காட்சியைப் பார்த்துப் பயந்த நாயக்கனின் சேனை திக்குத் திசை தெரியாமல் ஓடத் தொடங்கி விட்டது.

யதுராயர் தம் திறமையால் வெற்றி மாலையை அணிந்து, வினயத்துடன் ஆட்சியை மகாராணியிடமே ஒப்படைத்து விட்டார்.

மகாராணிக்கும் அரண்மனையில் உள்ள இராஜ பக்தர்களுக்கும் சொல்லொணா மகிழ்ச்சி. கடவுள் தம்மைச் சோதனையிலிருந்து விடுவித்து விட்டார் என்று அவர்கள் ஆனந்த வெள்ளத்தில் மிதந்தனர்.

அரண்மனையில் கோலாகலம் எழுந்தது. முறைப்படி யதுராயர் அரசகுமாரியைக் கைப்பிடித்தார். முடிசூட்டு விழாவும் நடந்தது. இக்கற்றிருந்த அரச பீடத்தில் அவர் அமர்ந்து மணிமகுடம் அணிந்து மக்களால் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அது சரி, தங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல் இந்த வெற்றிக்கு வழி தேடின அந்த நான்கு இராஜ பக்தர்களுக்கும் ஏதாவது கைம்மாறு செய்ய வேண்டுமே! என்ன செய்வது?

யதுராயர் அரச சபையைக் கூட்டினார். என்ன செய்ய வேண்டும் என்று அவர்களையே கேட்டார். அப்பொழுது திம்மராசய்யாவும், நாரணய்யாவும் ஏதோ ஜாகிர்களைக் கேட்டுப் பெற்றுக் கொண்டனர்.

ஆனால் மற்ற இருவர்களான அந்த ஜங்கமர்களுக்கு மட்டும் நிலபுலன், பணம் இவற்றின் மீது மோகம் இருக்கவில்லை. செல்வமும் சீரும் வைத்துக் கொண்டு அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?

அதனால் அவர்கள் அரசனிடம் இரண்டு வாக்குகளைப் பெற்றனர். அதாவது:

நாட்டுக் கொடியின் பக்கம் சைவர்களின் சின்னமான காஷாயக் கொடியையும் உடன் பறக்கவிட வேண்டும். இரண்டாவதாக, சைவர்களால் அதாவது ஜங்கமர்களால் விசேஷமாக வழங்கப்படும் 'ஒடெயரு' அல்லது 'பிரபுக்கள்' என்னும் சொல்லை அரச வம்சத்தினர் வாழையடி வாழையாகத் தங்கள் பெயருடன் இணைத்துக் கொள்ள வேண்டும்.

அரசர் இந்தக் கோரிக்கைக்கு இசைந்தார். அப்பொழுது அவர் 'யதுராய ஒடெயரு' ஆனார். கிருஷ்ணராயர் யுவராஜர் ஆனார்.

பிறகு மைசூர் அரசர்கள் தலைமுறை தலைமுறையாக இந்த 'ஒடெயரை'த் தமது பெயருடனேயே இணைத்துக் கொண்டனர். சிக்கதேவராஜ ஒடெயரு, மும்மடி கிருஷ்ணராஜ ஒடெயரு, நால்மடி கிருஷ்ணராஜ ஒடெயரு, ரணதீர கண்டீரவ நரசராஜ ஒடெயரு—இப்படியாக வழங்கி வந்தனர்.

சென்னை கவர்னரின் சரியான பெயர் திரு ஜெயசாமராஜ ஒடெயரு என்பதாகும்.

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள் நாள்முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடிப்பான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 40. யுத்தம் வலுக்கிறது!

யுத்த களத்தில் அசுர வீரர்கள் பூத சேனையைச் சூழ்ந்தனர். போர் தொடங்கிற்று. பூதர்களில் பலர் கைகால்களை இழந்தனர். பூத சேனைத் தலைவர்கள் அசுர வீரர்களில் பலரை அழித்தனர். அவர்கள் இறந்துவிழுந்ததால் பிணங்கள் மலைபோல் குவிந்து கிடந்தன. உதிர வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அப்போது, சூரனின் படையில் சிறந்ததொரு வீரனை அதிசூரன் கோபத்துடன் பாணங்களை மழை போல் பொழிந்தான். அவனது வில் லாற்றலைக் கண்ட பூத சேனைகள் திகைத்து நின்றன. உக்கிரன் என்ற பூத சேனைத் தலைவன் தண்டாயுதத்தை எடுத்துச் சுழற்றி அதி சூரனின் மார்பில் எறிந்தான். அதைக் கண்ட அசுர வீரர்கள் ''அதிசூரன் இறந்தான்'' என்று அலறினார்கள். உக்கிரன் எறிந்த தண்டாயுதம் அதிசூரன் மார்பிலிருந்த கவசத்தை அழித்தது. ஆயினும் அவனது உயிர் போகவில்லை. ஆத்திர மடைந்த அதிசூரன் உக்கிரன் மீது ஆயிரம் பாணங்களை விடுத்தான். அந்தப் பாணங்கள் தைத்ததால் உக்கிரனின் உடலிலிருந்து உதிரம் பெருகிப் பாய்ந்தது; அவன் உடலெல்லாம் புண்ணாகியது. பெரிதும் ஆத்திர மடைந்த உக்கிரன் ஒரு பெரிய மலையைப் பெயர்த்து அதிசூரன் ஏறிவந்த தேர்

மீது வீசினான். அவனது தேர் சுக்கு நூறாக உடைந்து அழிந்தது. அதிசூரன் மற்றொரு தேரில் ஏறிப் போர் புரிந்தான். அந்தத் தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளை அழித்தான் உக்கிரன். அதிசூரன் உக்கிரனின் உடலில் நூறு பாணங்களை விடுத்தான். அவற்



றைத் தண்டாயுதத்தால் தடுத்து நிறுத்தினான் உக்கிரன். உக்கிரன் மீது தெய்வாஸ்திரத்தைச் செலுத்தவேண்டுமென்று முடிவு செய்த அதிசூரன் ஆக்கினேயாஸ்திரத்தை விடுத்தான். அதன் உக்கிரத்தைக் கண்ட உக்கிரன் கந்தவேளின் திருவடிகளைத் தியானித்தான். கந்தக் கடவுள் அவனுக்கு அருள் புரிந்தார். அதிசூரன் வருணாஸ்திரத்தையும், வாயு அஸ்திரத்தையும், நாராயணாஸ்திரத்தையும் விடுத்தான். அவற்றையெல்லாம் தன் இரு கைகளாலும் வாரி விழுங்கிவிட்டான் உக்கிரன். அதனைக் கண்டு அதிசூரன் அதிசயித்து நின்ற போது உக்கிரன் வேகமாகப் பாய்ந்து அசுர சேனையைச் சேர்ந்த வீரர்கள் பலரைக் கொன்றான். எஞ்சிய அசுர வீரர்கள் ஓடினர். உக்கிரனின் செயலைக் கண்ட தேவர்கள் அவனது ஆற்றலை வியந்து பாராட்டினர்.

இந்திரன் பிரம்மனை நோக்கி, ''அதிசூரன் ஏவிய தெய்வாஸ்திரங்களையெல்லாம் உக்கிரன் வாரி விழுங்கிவிட்டானே அதற்குக் காரணம் என்ன?'' என்ற டான்.

''உக்கிரன் அரிய தவம் செய்து சிவபெருமானிடம் வரம் பல பெற்றவன். கந்தவேளின் திருவருள் பெற்றவன். திருமாலின் சக்கராயுதத்தை விழுங்கிய ததீசி முனிவரைவிட ஆற்றல் மிக்கவன். ஆகவே, இவன் தெய்வாஸ்திரங்களை விழுங்கியது வியப்புக்குரியதல்ல'' என்று பிரம்மதேவர் விடை கூறினார்.

யுத்த களத்தில் உக்கிரமாகப் போர் செய்த உக்கிரன் மீது அதிசூரன் பாசுபதாஸ்திரத்தை விடுத்தான். இந்த

அஸ்திரம் சிவபெருமானால் அதிசூரனுக்கு வழங்கப்பட்டது.

தருமமே உருவமான பரமனின் பெயரைத் தாங்கிய அந்த திவ்வியப்படை அறவழியின்று அணுவளவும் பிறழாது. இந்தப் பாசுபதாஸ்திரத்தை அதிசூரனிடம் வழங்கிய போது, "கையில் ஆயுதம் இல்லாதவர் மீது செலுத்தினால் அது அவர்களைத் தாக்காமலும் உன்னிடம் திரும்பாமலும் நம்மிடம் வந்து விடும்" என்று சிவபெருமான் அருளியிருந்தார். இப்போது அந்த அஸ்திரம் சீறிக் கொண்டு உக்கிரனைத் தாக்க நெருங்கியது. உடனே அதன் மர்மத்தை அறிந்த உக்கிரன் தன் கையிலிருந்த ஆயுதத்தைத் தூர எறிந்து விட்டு நிராயுதபாணியாகக் கைகுவித்து நின்று பஞ்சாட்சர மந்திரத்தை ஜபித்து அதனைத் தொழுதான். பாசுபதாஸ்திரம் அவனைத் தாக்காமல் சிவபெருமானிடமே சென்றுவிட்டது. அதிசூரன் வியப்பிலாழ்ந்தான். தன் தேரை விரைவாகச் செலுத்தி உக்கிரனுக்கு அருகே வந்து தேரிலிருந்து இறங்கி தண்டாயுதத்தைச் சுழற்றி உக்கிரன் தோள் மீது வீசியெறிந்தான். அந்தத் தண்டாயுதத்தைப் பிடுங்கிய உக்கிரன் அதனாலேயே அதிசூரனின் மார்பில் ஓங்கி அடித்தான். அதிசூரனின் மார்பு பிளந்தது. பெயருக்கேற்ப அதிசூரனாகவே இருந்த வீரனும் மரணமடைந்தான்.

அதிசூரன் இறந்ததைக் கண்ட அசுரேந்திரன் சீறிப் பாய்ந்து பூத சேனைகளைத் தாக்கத் தொடங்கினான். அவன் விடுத்த பாணங்களால் பூதர்களில் பலர் இறந்தனர். பூதப் படையைச் சேர்ந்த கனகன் அசுரேந்திரனுடன் போர் செய்தான். அசுரேந்திரன் ஆயிரக் கணக்கில் பாணங்களை விடுத்ததால் கனகன் மயங்கி விழுந்தான். உடனே பூதப் படையைச் சேர்ந்த உன்மத்தன் என்பவன் யுத்த களத்தில் இறங்கினான். அசுரேந்திரனின் பாண மழையில் அவனும் மயங்கி விழுந்தான். பூதப் படையைச் சேர்ந்த மந்தன், சிங்கன், தண்டகன், கோமுகன், விசயன் ஆகியோர் அசுரேந்திரனுடன் போர் செய்து தோற்றார்கள். இதனைக் கண்ட வீரவாகு தேவர் தாமே கோபத்துடன் அசுரேந்திரனுடன் போர் செய்ய முன்வந்தார். ஆக்ரோசமாகப் போரிட்டு அவனது தலையை அறுத்தார். தேவர்கள் மலர் மாரி பொழிந்து மகிழ்ந்தனர். அசுரப் படைகள் சிதறியோடின. (தொடரும்)

## எப்படி முடியும்?

ஒரு கிராமத்தில் ஒரு கிழவி இருந்தாள். நாலு பேருக்குச் சாப்பாடு போட்டு ஜீவனம் நடத்தி வந்தாள். அவள் வீட்டில் எப்போதும் சாப்பிட வரும் ஆட்கள் கூட்டம் இருந்து கொண்டே யிருக்கும்.

ஒரு நாள் இரவு மணி பத்துக்கு மேல் இருக்கும். யாரோ வெளியூர்க்காரர்கள் நால்வர் பாட்டி வீடு தேடி வந்தனர். அந்தக் கிழவியும் அவசரம் அவசரமாக வந்தவர்களுக்குச் சமையல் தயார் செய்து முடித்தாள். அந்த நால்வரைத் தவிர வேறு யாரும் இல்லை அப்போது.

மங்கிய லாந்தர் விளக்கின் ஒளியில் அவள் சமைத்த சுவையான உணவில் பல்லி விழுந்த விவரம் அவளுக்குத் தெரியவில்லை. பலன்...? உணவையுண்ட நால்வரும் சவமானார்கள்.

கிழவி நடுநடுங்கி விட்டாள். விருந்து. விஷயம் தெரிந்தால் அவளுக்கு ஆபத்தல்லவா? நாலு பிணங்களையும் அகற்ற வேண்டுமே! கிழவி கெட்டிக்காரி.

கிழவியின் வீடு ஊருக்கு வெளியே சற்றுத் தொலைவில் இருந்தது. சுடுகாடு வெட்டியான் ஒருவனை அவளுக்குத் தெரியும். அவன் ஒரு சுத்த மக்கு. அவனைத் தேடிப் போனாள் கிழவி.

"ஊரிலிருந்து என் உறவினர் ஒருவர் வந்தார். திடீரென மாரடைப்பினால் இறந்து விட்டார். காலை வரை பிணத்தை வைத்திருந்தால் என் வீட்டில் யாரும் சாப்பிட மாட்டார்கள். என் பிழைப்பு கெட்டு விடும். தயவுசெய்து பிணத்தை எடுத்துக் கொண்டு போய் இப்போதே புதைத்து விடு. பணம் தருகிறேன்" என்றாள் கிழவி.

வெட்டியானும் பிணத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினான். அடையாளம் தெரியாமல் இருப்பதற்காகப் பிணங்களின் நெற்றியில் பட்டையாகப் பெரிய நாமம் தீட்டியிருந்தாள் கிழவி.

முதல் பிணத்தைக் கொண்டு போய்ப் புதைத்து விட்டுத் திரும்பி வந்த வெட்டியானிடம் கிழவி, 'ஐயோ இதென்ன அநியாயம்! நீ எடுத்துக் கொண்டு போன பிணம் மறுபடியும் வந்து இங்கு கிடக்கிறதே' என்று கூவினாள்.

திடுக்கிட்ட வெட்டியானும் அந்தப் பிணத்தைப் பார்த்தான். அவனுக்கு அடையாளம் தெரியவில்லை! ஒரே நாமம்தானே! மூளை கெட்ட அவன் இரண்டாவது பிணத்தையும் தூக்கிக் கொண்டு போனான். இப்படியே நான்கு பிணங்களையும் அப்புறப்படுத்தி விட்டாள் கிழவி! இதற்குள் விடிந்து விட்டது. அப்போதுதான் நாலாவது பிணத்தைப் புதைக்கக் குழி வெட்டிக் கொண்டிருந்தான். அதே சமயம்......

(எப்படி முடியும்?
சிந்திக்க. பிறகு 33-ம் பக்கம் பார்க்க.)

பாட்டியின் சாமர்த்தியம்

## அத்தியாயம் முப்பத்திரண்டு

# இங்கும் அங்கும்

“நாப்பது, நாப்பத்தைஞ்சு வருசங்களுக்கு முன்னால் இந்த ஊர்லே தங்கவேல் வாத்தியார்னு ஒருத்தர் இருந்தாரு...” என்று நீட்டி இழுத்துக் கதை சொல்வது போல் ஆரம்பித்தாள் கன்னியம்மாள்: பேரு மாதிரியே அவர் குணமும் நடத்தையும் தங்கம்தான். பெரிய படிப்பாளி. படிப்பு இருந்து இன்னா பண்றது? வாத்தியார் வேலே; வருமானம் கம்மி. ரொம்பக் கஷ்ட சீவியம். அவரோட மனுசாளெல்லாம் இன்னா பண்ணுவாரு? ரௌடின்னு பேரு எடுத்துட்ட நீம் புள்ளையை நினைச்சு நினைச்சு அதே கஸ்தியிலே சீக்கிரமா செத்தும் போயிட்டாரு: அதுக்கப்புறமும் இந்தத் தறிதலைப் புள்ளை திருந்தலே. வேளைக்கு ஒரு தெருச் சண்டை, நாளைக்கொரு போலீஸ் கேசு. பெத்தவளுக்குப் பெரிய ரோதனையாப் போச்சு. அந்த அம்மா ஒரு பூமாதேவி. தங்கமான குணம். அவங்க வவுத்திலே இப்படி

# ஜீவநதி

நல்ல நிலைமையிலே இருந்தாங்க. உசந்த சாதிக்காரங்கதான். மனசும் உசந்து இருக்க வேணுமா? இவரை யாரும் சட்டை பண்ணிக்கலே. பணக்காரங்களோட புத்தியே அது தானே? அவங்க நடுவிலே கெடந்து அவமானப் படறதைக் காட்டிலும், ஏழைபாழைகளோடு சேர்ந்து நிம்மதியா வாழலாம்னு பொண்டாட்டிப் புள்ளைகுட்டிகளோடு இந்தப் பேட்டைக்கு அவர் குடிவந்திட்டாரு. அவருக்கு இருந்தது மூணும் ஆண் புள்ளைங்க. மூத்தது ரெண்டும் ரத்தினங்கள்: அப்பாரை மாதிரியே குணம், நடத்தை, பேச்சு, பயக்க வயக்கம் எல்லாம். படிப்பிலும் கெட்டி. ஆனா, கடைக்குட்டியான இந்தத் தம்பையா மாத்திரம் அதுகளுக்கு நேர் எதிரிடையா இருந்துச்சு. இருக்க வேண்டிய இடத்திலே இருந்து, பயக வேண்டிய இடத்திலே பயகியிருந்தா இதுவும் நல்லாத்தான் வளர்ந்திருக்கும். சின்னப் புள்ளையிலேயே இந்தப் பேட்டைக்கு வந்துடிச்சே? இஸ்கூலுக்குப் போறதில்லே; ஊட்டுக்கு அடங்கிறதில்லே; அப்பன், ஆத்தா பேச்சைக் கேட்கிறதில்லே. எப்பவும் தெருப் பொறுக்கிப் பசங்களோடு வெளையாட்டு. ஊர் சுத்தறது. எவ்வளவோ அடக்கிப் பார்த்தும் அடங்கலே. 'ஒய்ஞ்சுப் போ கய்தே'ன்னு விட்டாச்சு. வாத்தியாருக்கு இந்தப் புள்ளையைப் பத்தி ஒரே கவலே. ஒரு புள்ளை பொறந்துச்சேன்னு ஊரே அங்கலாய்ச்சுது. பெரிய புள்ளைகள் ரெண்டும் பெரிய படிப்புப் படிச்சு, பெரிய உத்தியோகத்திலே அமர்ந்து, பெரிய இடங்களிலே பொண் பார்த்துக் கண்ணாலமும் செய்ஞ்சுக்கிட்டு மாம்பலத்திலே ஒருத்தரும் அடையாத்திலே ஒருத்தரும் பங்களாக் கட்டிக்கிட்டுப் போயிட்டாங்க. இது மாத்திரம் அடங்காப் பிடாரியா ஊரைச் சுத்திக் குடும்பப் பேரைக் கெடுத்துக்கிட்டுக் கெடந்துச்சு. அண்ணங்காரங்களாலே இந்த அவமானத்தைப் பொறுக்க முடியலே. 'இனிமே எங்க மூஞ்சிலே முழிக்காதேடா'ன்னு சொல்லிப்பிட்டாங்க. தாயார்க்காரிக்கு மட்டும் கடைசிப் புள்ளையை விட்டுப் போவ மனசு வரலே; இத்தோடு கூடவே இந்த வீட்டில் கொஞ்ச காலம் இருந்து பார்த்துச்சு. அப்புறம் இது பண்ணின அக்குறும்புகளைச் சகிக்க முடியாம பெரிய புள்ளைங்களோடு போய்ச் சேர்ந்துடுச்சு. ஆனாலும் வருசத்துக்கு ஒரு தபாவோ, ரெண்டு தபாவோ இங்கே வந்து இந்தப் புள்ளையைப் பார்க்கும். நல்ல புத்தி சொல்லி அண்ணங்காரங்க ஊட்டுக்கு அழைச்சுக்கிட்டுப் போவும். அங்கே இது அஞ்சாறு நாள் குறியா இருந்துட்டு, திடீர்னு யார்கிட்டேயும் சொல்லிக்காம ஊட்லே இருக்கிற பணம் காசு, நகை நட்டுகளைத் தூக்கிக்கிட்டு ஓடியாந்துடும். அதனாலே பெரிய

ஜெகசிற்பியன்



புள்ளைங்களுக்கும்
தாயார்க்காரிக்கும்
ஜகடம் மூட்டிக்கும்.
இந்தத்தொல்லை எதுக்
குன்னு இப்பவெல்
லாம் அந்த அம்மா
இங்கே வர்றதே
இல்லை. ஆனாக்கா ஒரு
விசயம்: மொரட்டுக்
காளையா கண்டபடி
சுத்திக்கிட்டுக் கிடந்த
இது. பதினைஞ்சு பதி
னாறு வருசங்களுக்கு
முன்னால் ஒரு தெருச்
சண்டையிலே யாரோ
ஒருத்தனை அறுத்துப்
பிட்டு ஆறு மாசம்
ஜெயிலுக்குப் போய்
வந்தப்புறம் ஆளே
மாறிப்போச்சு. எந்தத்
தப்பு தண்டாவுக்கும்
போறதில்லே; அடா
வடித்தனம் பண்ற
இல்லே. ஒயுங்கா,
குறியா அடங்கி ஒக்

காந்துடுச்சு. இது பெரிய அதிசயம் தான். இருந்து இன்ன புரோசனம்? முந்தியைவிட இப்ப ரொம்பக் குடிக்க ஆரம்பிச்சுடுச்சு. சல்பேட்டா, கலக்கல், சொண்டிச் சோறு எதையும் விடற தில்லே. அதெல்லாம் சேர்ந்துதான் இப்ப ஆளைக் கீயே கெடத்திடுச்சு...''

வாசலில் பெரிய கார் வந்து நின்ற சப்தம் கேட்டுக் கன்னியம்மாள் பேச்சை நிறுத்தினாள். ஜனக் கூட்டத் திடையே பரபரப்பு. எல்லாரும் ஒதுங்கி நின்றனர். வயது முதிர்ந்த மூதாட்டியொருத்தி கண்ணீர் வழிந்த முகத்துடன் காரிலிருந்து இறங்கித் தட்டுத் தடுமாறியபடி உள்ளே வந் தாள். அந்த அம்மாள்தான் தம்பையா வின் அன்னை.

இவ்வளவு நேரம் பிரக்ஞையின்றிப் படுத்துக் கிடந்த தம்பையா தன் தாயின் ஸ்பரிசக் காற்று பட்டதாலோ என்னவோ திடுமென ஒரு நெம்பி நெம்பி எழுந்து உட்கார்ந்தான். சுற்றி லும் நின்ற ஜனங்கள் அவனை வியப் புடன் பார்த்தனர்.

''இன்னும்மா? சௌக்கியமா இருக் கிறியா ?'' என்று கம்பீரமாகச் சிரித் துக் கேட்ட தம்பையா, ''ஆமாம்; நீ எதுக்கு இங்கே வந்தே? உன்னை யார் வரச் சொன்னது?'' என்றான் முரட்டுத் தனமான குரலில். அடுத்த கணம் அவன் உடல் தொய்ந்து துவண்டு கட்டிலில் சரிந்தது.

''அட, சும்மாக் கெட அண் ணாத்தே !'' என்று அதட்டிய கன்னி யம்மாள் அவனுடைய தோளைப் பிடித்துக் கட்டிலிலிருந்து கீழே இறக்கி, வாசலில் நின்ற காரை நோக்கி நடத்தி அழைத்துச் சென்றாள்.

'' இன்னா கன்னிம்மா ! உன் பொண்ணு வேதம்மா எப்படி இருக் குது? அந்தக் குழந்தைப் புள்ளைக் கிட்ட எதனாச்சும் 'ராங்' பண்ணினே, அப்புறம் நான் ரொம்பப் பொல் லாதவனாயிடுவேன்; தெரிஞ்சுதா ?'' என்று கையை உயர்த்தி ஆட்டிக் குழறிக்கொண்டே காரினுள் சாய்ந் தான் தம்பையா. அவனது அன்னை பக்கத்திலே வந்து அமர, கார் புறப் பட்டுச் சென்றது.

இவ்வளவையும் திண்ணையோரமாகக் கூனிக் குறுகி நின்று கவனித்துக்கொண் டிருந்த வேதாவின் கண்கள் கலங்கிக் குளமாயின.

காலை ஏழு மணியளவில் கோய முத்தூர் ஜங்ஷனை அடைந்த கொச்சி எக்ஸ்பிரஸ் ரயிலை விட்டு இறங்கி வெளியே வந்த சபேசனுக்குத் தான் சென்னையில் இருப்பது போன்ற பிரமையே ஏற்பட்டது. ஆறேழு வயது சிறுவனாயிருந்தபோது பண்டிகை நாட் களில் துணிமணிகள் வாங்குவதற்காகக் கிராமத்திலிருந்து தன் தாயாருடன் இரண்டொரு முறையும், தந்தை யுடன் ஒரு முறையும் மாட்டு வண்டியில் இந்நகருக்கு வந்து போன ஞாபகம். அது வெறும் பகற் கனவு போன்ற ஆழப் பதிவில்லாத ஞாபகம்தான். ஆகவே, சென்னையை முதன் முதலாகப் பார்த்த போது ஏற்பட்ட திகைப்பும், பிரமிப்பும் அவனுக்கு இப்போதும் ஏற் பட்டன.

எவ்விடத்தில் போய் எந்த பஸ்ஸில் ஏறிக் கவுண்டன்பாளையத்துக்குச் செல் வது என்று தெரியாமல் தயங்கி நின்ற அவன், சாலையின் எதிர்ப்புறமாகச் சென்று தெற்கு நோக்கி மெல்ல நடக்கலானான். ரயில்வே பாலத்தடி முச்சந்தியை நெருங்கின சமயம், ஏதோ 'பட்'டென்று சத்தம் கேட் டது. அதைத் தொடர்ந்து சிலர் சிரிக்கும் ஒலியும் எழுந்தது. திகிலுற்று நின்ற சபேசன் பின்னால் திரும்பிப் பார்த்தான். சாலையின் மறுபக்க நடை பாதையில் வரிசையாகக் கடை பரப்பிக் கொண்டிருந்த செருப்புத் தைக்கும் தொழிலாளிகள் அவனைப் பார்த்துக் குறும்பாக நகைத்தனர். ''என்னங்க சார்! மெட்ராஸிலே வாங்கினதா ?'' என்று கேட்டான் ஒருவன்.

அவனுடைய சிரிப்பையும் கேள்வி யையும் புரிந்துகொள்ள முடியாமல், ''என்னது?'' என்று நடைபாதையை விட்டு இறங்கிய சபேசனின் வலது கால் பாதத்திலிருந்து மேல் வார் அறுந்த நிலையில் தானாகவே கழன்று விழுந்தது செருப்பு. ஆமாம்; புதிதாக வாங்கிய அந்த ஹவாய்க் காலணி பன்னிரண்டு மணி நேரத்துக்கு மேல் உழைக்க மறுத் துத் தன் ஆயுளை முடித்துக் கொண்டு விட்டிருந்தது !

பெரியதொரு சொத்துப் பறி போய் விட்டாற் போன்ற பதற்றத்துடன் அதைக் குனிந்து எடுத்து, அறுந்த பகுதியைப் பரிதாபமாகத் தடவிப் பார்த்த சபேசனின் மனம் கலங் கியது. 'அநியாயமாக இரண்டு ரூபாய் நஷ்டமாகி விட்டதே!' என்ற கவலை ஒருபுறமும், 'இந்த எதிர்பாராத இழப்பு ஏதேனும் அபசகுனமாயிருக் குமோ?' என்ற திகில் இன்னொருபுறமு மாகச் சேர்ந்து அவனுடைய உற் சாகத்தை ஒரேயடியாகக் கலக்கிக் குலைத்து விட்டன.



""சென்னையிலிருந்து மதுரைக்கு டிக்கட் வாங்கி விட்டு, தாம்பரம் வரை தள்ளுவதற்குள் அலுத்துக் கொள்கிறீர்களே!""

தோல் செருப்பாயிருந்தால் அறுந்த வாரைத் தைத்துக் கொள்ளலாம்; அல்லது ஆணி அடித்துச் செப்பனிட்டு விடலாம். இது ரப்பர்ச் செருப்பாயிற்றே? இதைக் கண்டாலுமே செருப்புத் தைக்கும் தொழிலாளிகளுக்கு ஒரே ஆத்திரம், அலட்சியம்! அதனால்தான் அந்தக் காலணிக் கலைஞர்கள் அவனைப் பார்த்து அத்தனை குறும்பாக நகைத்தார்கள் போலும்.

அவனுக்கு ரொம்பவும் வெட்கமாகி விட்டது. பயனற்றுப் போன செருப்பை வீசியெறிந்து விடவும் மனம் வரவில்லை. எப்போதாவது சமயம் வாய்க்கும் போது மேல் வாரை மட்டும் தனியே புதிதாக விலைக்கு வாங்கி அதில் பொருத்திக் கொள்ளலாம் என்ற நைப்பாசை. ஆனால் அதன் அளவு, நிறம், அமைப்பு எல்லாம் சரியாகச் சேர்ந்து கிடைக்கவேண்டுமே? 'பார்க்கலாம்' என்று தனக்குள் முனகியபடி இடது காலில் இருந்ததையும் கழற்றித் தன் கான்வாஸ் பைக்குள் திணித்துக் கொண்டு திரும்பிப் பார்க்காமல் வேகமாக நடந்தான்.

சற்றுத் தூரம் சென்ற பிறகுதான், 'என்ன இப்படிக் குருட்டாம்போக்கில் சும்மா நடந்து கொண்டிருக்கிறேனே' என்று எண்ணித் தயங்கி நின்று அங்குமிங்குமாக நிமிர்ந்து நோக்கினான். மேட்டுப்பாளையம் போகும் பஸ் ஒன்று வந்து ஸ்டாண்டில் நின்றது. ஓடிப் போய்க் கண்டக்டரிடம், "கவுண்டன்பாளையத்துக்குப் போக இதில் ஏறலாமா, ஐயா?" என்று வினவினான். "ஏறுங்க, தம்பி!" என்றார் கண்டக்டர்.

சபேசன் ஏறியமர்ந்ததும் பஸ் புறப்பட்டது.

பிரும்மாண்டமான பஞ்சாலைகளும் பெரிய பெரிய தொழிற்சாலைகளும் நிரம்பிய அந்த அழகிய நகரின் சுறுசுறுப்பான தோற்றத்தைக் காணக் காண அவன் மனத்தின் ஒரு பகுதி பெருமையால் பூரித்ததென்றாலும், இன்னொரு பகுதியில் ஏக்கம் செறிந்த கவலையும் புகைச்சலிடவே செய்தது.

'இவ்வளவு பெரிய தொழில் நகரத்தில் என் தந்தையாருக்கு ஒரு வேலை கிடைக்காமலா போயிருக்கும்? அப்படிப் பார்த்துக்கொண்டு அவர் இங்கேயே இருந்திருந்தால் நானும் என் தாயாரும் இப்போது எத்தனை மகிழ்ச்சியோடும் நிம்மதியாகவும் இருந்திருப்போம்! கேவலம், இருநூற்றைம்பது ரூபாய் சம்பளத்துக்காகச் சொந்த நாடு, பிறந்த ஊர், வீடு வாசல் முதலானவற்றையும்; கட்டிய மனைவி, உற்றார் உறவினர் ஆகியோரையும் விட்டுப் பிரிந்து கடல் கடந்து போய், காலமெல்லாம் அயல் தேசத்தின் அயலவருக்காக உழைத்துத் தம் வாழ்நாளை வீணாக்கிக் கொண்டதோடு அல்லாமல் எங்களையும் அநாதரவாகத் தவிக்க விட்டு விட்டாரே!' என்றெல்லாம் எண்ணி நெஞ்சம் குமுறிய அவன், சட்டென்று தன் சிந்தனையை வேறு பக்கம் திருப்பினான்:

'இல்லை; இப்படி நான் நினைப்பது தவறு. இருபது, இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் இந்நகரம் இந்தக் கோலத்திலா இருந்திருக்கும்? அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில பஞ்சாலைகளும் தொழிற்சாலைகளும் இருந்திருக்கலாம். அப்போது மக்களின் நிலை என்ன? அந்நியரின் ஆட்சியில் அடிமைகளாய் வாழ்ந்த காலம் அது. உரிமையற்ற நாட்டில் வறுமை அரக்கன் நடைபாவாடை விரித்து நர்த்தனம் போடுவது இயற்கைதானே? அரை வயிற்றுக் கஞ்சிக்காக வெள்ளைத் துரைமார்களிடம் மட்டுமல்லாது, அவர்களுக்கு வால் பிடித்துத் தாளம் போட்டுத் தம் வாழ்க்கையை உயர்த்திக்கொண்ட கறுப்புத் துரைமார்களிடமும் மக்கள் கை கட்டி வாய் புதைத்துச் சேவகம் செய்ய வேண்டியிருந்த அவல நிலை. அந்த நரக வேதனையான வாழ்க்கைப் போராட்டத்தைச் சகிக்க முடியாமல் தான் மலேயா, சிங்கப்பூர், பர்மா, இலங்கை என்று கப்பலேறி ஓடினார்கள் மக்கள். அப்படி வாழையடி வாழையாக ஓடிக்கொண்டிருந்த பாட்டாளி

அடுத்த இதழில்



# சேவைக்கு ஒரு சகோதரி

ஆங்கிலம்: மோனிகா ஃபெல்டன்
தமிழாக்கம்: அநுத்தமா



'சோ' எழுதும்
ஹாஸ்யத்
தொடர் நாடக[ம்]

# சாதல் இல்லையேல் காதல்

**புதிய அம்சங்கள்**

புகழ் பெற்ற போல்கள்
பல்சுவைப் பக்கங்கள்
சுவையான சர்ச்சைகள்



எல்லாம்'

இன்றுதான்

கோபுரம் போலக் குவிந்து கிடந்தன. எலும்புத் துண்டுகள். அந்தக் குவியலைக் கூர்ந்து கவனித்த தத்துவ ஞானி டையோஜனஸ் சிந்தனையில் ஆழ்ந்தார். தம் தந்தை பிலிப்பின் வெற்றிச் சின்னமாக விளங்கிய அக்காட்சியைக் கண்டு பெருமிதப்பட்டுக் கொண்டிருந்த மாமன்னர் அலெக்ஸாண்டர்,

"என்ன இவ்வளவு கூர்ந்து பார்க்கிறீர்கள்?" என்று டையோஜனவிடம் கேட்டார்.

"உன் தந்தையின் எலும்புகளும் இந்தக் குவியலில் கிடக்கின்றனவா என்று கவனித்தேன். ஆனால் உன் தந்தையுடைய எலும்புகளுக்கும், அவனுடைய அடிமைகளின் எலும்புகளுக்கும் வித்தியாசமே தெரியவில்லையே! அதுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று அந்த வேதாந்தி பதிலளித்தாராம்!

—பாருகவிக்

கூட்டத்துள் என் தந்தையாரும் ஒருவராஞர்: அவருக்கு அப்போது, இந்த நாடு சுதந்திரம் அடையும் என்றோ, அடைந்த பின் இவ்வூர் இத்தனை தொழில் வளம் பெற்றுச் சிறக்கும் என்றோ கனவுகூடக் காண முடிந்திருக்காது. ஆகவே அவரைக் குறை கூறி என்ன பயன்?'

சபேசனின் சிந்தனைக் கயிறு இன்னமும் நீண்டு சென்றது. 'ஆகா, சுதந்திரம்தான் ஒரு தேசத்தின் முன்னேற்றத்துக்கு எவ்வளவு அத்தியாவசியத் தேவையாக இருக்கிறது! அதன் ஜீவ ஒளி எத்தனை விரைவாக விரிந்து பரந்து அந்தத் தேசத்தின் தோற்றத்தையே மாற்றிப் பொலிவு பெறச் செய்கிறது! நேற்று மாலை சென்னையில் ரயில் ஏறி, இன்று காலை இந்தக் கோவை நகருக்கு வந்து இறங்கிய இக் குறுகிய நேரப் பயணத்தில் — அது இரவுப் போதுதான் என்றாலும் — வழி நெடுக எத்தனையெத்தனை தொழிற்சாலைகளையும் கல்விக் கூடங்களையும், வளம் செறிந்த விளைநிலங்களையும் பார்த்துக்கொண்டு வந்தேன்! இவற்றில் பெரும்பாலானவை சுதந்திரத்துக்குப் பின் கடந்த பதினேழு ஆண்டு காலத்தில் தோன்றி வளர்ந்து சிரடைந்தவைதாம் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை! இங்கு மட்டுமா இந்த வளர்ச்சிக் கோலங்கள்? தேசம் முழுவதுமே இப்போது விநாடிக்கு விநாடி இத்தகைய வளமைப் புரட்சி நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது.!...ஆனால்?... நேற்றிரவு, ரயில் வண்டி என்னும் அந்தச் சிறிய உலகத்தில்—ஒரு மூன்றாம் வகுப்புப் பெட்டியில் பன்னிரண்டு மணி நேரம் 'வாழ்ந்து' வந்த நான், என்னைப்போல் அதில் 'வாழ' வந்த நூற்றுக்கணக்கான மக்களைப் பல பல கோணங்களில் ஊன்றிப் பார்த்தபோது?... தமிழகத்தின் பல மாவட்டங்களைச் சேர்ந்த மக்கள் மட்டுமல்லாமல் மற்ற ராஜ்யங்களைச் சேர்ந்தவர்களும் அந்த ரயில் பெட்டியில் இருந்தார்கள். அவர்களது பேச்சு, பேச்சிலிருந்து வெளிப்பட்ட எண்ணங்கள், இலட்சியங்கள், மனோபாவங்கள், ஆசா பாசங்கள், அபிலாஷைகள் ஆகியவற்றைக் கொண்டு இந்தத் தேசத்தின் இப்போதைய முழு மக்கள் தொகுதிக்குரிய ஒரு வடிவ நிலையை என்னால் ஓரளவு ஊகித்தறியக் கூடியதாகவே இருந்தது. ஆமாம்: சுதந்திரம் கிடைத்துப் பதினேழு ஆண்டு காலமாகியும், மக்களின் வாழ்க்கைத் தரம்—சுதந்திரத்துக்கு முன்னால் நாம் கற்பனை செய்திருந்தது போல்—அப்படியொன்றும் அபிவிருத்தியடைந்து விடவில்லை. வறுமை, வேலையின்மை, பிணி, பற்றாக்குறை—இந்தப் பீடைகள் இன்னமும் நாட்டு மக்களை விட்டு நீங்கினபாடில்லை. கீழ்த் தளத்தில் இருந்தவர்களுக்குத் தாம் இன்னும் கீழே இறங்கிக் கொண்டிருப்பது போன்ற பிரமை; மேல் தளத்திலிருந்தவர்களுக்குத் தம்மைக் கீழே உருட்டித் தள்ளுவது போன்ற அச்சம்; இடைத் தளத்தில் இருந்த சிறுபான்மையோரில் சிலர் தாம் எப்படியோ திடீரென்று மேலே போய் உட்கார்ந்து விட்டிருக்கிறார்கள். சுதந்திரத்துக்குப் பின் தேசத்தில் ஏற்பட்டுள்ள ஒரு விசித்திர நிலை இது. அடிமைகளாய்க் கிடந்தபோது, சுதந்திரம் பெற்றால் சுபிட்சம் வரும் என்ற நம்பிக்கையாவது இருந்தது. இப்போதோ அந்த நம்பிக்கைகூட நலிந்து போய்க் கொண்டிருக்கிறது. ஏழை எளிய மக்களுக்கு வாழ்க்கை ஒரு சுமையாகி விட்டது. நடுத்தர வர்க்கத்தினருக்கோ அது ஒரு பயங்கரப் போராட்டமாயிருக்கிறது. அவர்கள் ஏனோ, எதனாலோ ஏமாந்துகொண்டிருக்கிறார்கள்: ஏமாற்றப்பட்டும் வருகிறார்கள். இதனால் அவர்களது மனவளமே வறட்சியடைய ஆரம்பித்து விட்டிருக்கிறது. சுதந்திரத்துக்கு முன்

இந்த நாட்டு மக்களின் புற வளம் குன்றிப் போயிருந்ததென்னவோ உண்மைதான்; ஆனால் மன வளம் நிரம்பித் ததும்பிக் கொண்டிருந்தது. அதன் சக்தியைக் கொண்டுதான் சுதந்திரத்தைப் போராடிப் பெறவும் முடிந்தது. ஆயிரங் காலத்துப் பயிராக வளர்ந்து வந்த அந்த மன வளம் இப்போது எங்கே? பாரதத்தின் மக்கள் அதை மெல்ல மெல்ல இழந்து வருகிறார்கள். அதுதான் இன்றைய நலிவுக்கெல்லாம் அடிப்படைக் காரணமாகவும் இருக்கிறது. மக்களிடம் அந்தப் பழைய மன வளம் மட்டும் குன்றாமல் குறையாமல் இருந்திருந்தால், சுதந்திரத்துக்குப் பின் இன்று அடைந்துள்ள முன்னேற்றம் இரண்டு மடங்கு ஆகியிருக்கும். சாண் ஏறினால் முழம் நழுவி விழ்வது ஒரு முன்னேற்றமா?... இந்த நாட்டில் வேறு எந்தச் சக்திகளுக்குப் பஞ்சமிருந்தாலும் மனித சக்திக்கு மாத்திரம் பஞ்சமே இல்லை. மற்ற சக்திகளைவிட இதுவே விலை மதிப்பற்றது; பலம் வாய்ந்தது. ஆனால் இதனைச் சரியாகவும் முழுமையாகவும் பயன்படுத்திக் கொள்ளத்தான் இங்கு இன்னும் வாய்ப்பு ஏற்படவில்லை; வழியும் பிறக்கவில்லை. இதனால் இந்தச் சக்தி வீணாவதோடு அல்லாமல் அபாயகரமானதொரு போக்கிலும் திரும்பிக் கொண்டிருக்கிறது. இதுவே பாரதத்தின் துரித முன்னேற்றத்துக்குத் தடைச் சுவராகவும் எழும்பி நிற்கிறது. எனவே, இப்போது ஏற்பட்டிருக்கும் தொழிற்சாலைகள், மின்சார நிலையங்கள், அணைக்கட்டுகள், விவசாயப் பண்ணைகள், கல்விக் கூடங்கள் — இவையெல்லாம் இன்னும் நூறுநூறாக, ஆயிரம் ஆயிரமாக, இலட்சம் இலட்சமாகப் பல்கிப் பெருக வேண்டும். அவற்றுடன் பழைய மன வளமும் மக்களிடத்தே திரும்பி வரவேண்டும்...'

**ப**ஸ் நின்றது. ''தம்பி, நீங்க கவுண்டம்பாளையத்தில்தானே இறங்கணும்? இறங்கிக்கிடுங்க!''—கண்டக்டர் குரல் கொடுத்தார். சிந்தனைவயப்பட்டிருந்த சபேசன் அவசரமாக எழுந்து தன் பையை எடுத்துக்கொண்டு கீழே இறங்கினான்.

தார் போட்ட அந்த விசாலமான மேட்டுப்பாளையம் சாலையின் இருபுறமும் புளிய மரங்கள் வரிசையாக வளர்ந்து நின்று பச்சைப் பந்தலிட்டாற்போல் பாங்குறக் காட்சியளித்தன. அவ்வினிய காட்சியைப் பார்த்துக்கொண்டே சற்றுத் தூரம் சென்ற சபேசன், சாலையோரமிருந்த ஒரு சிற்றுண்டிக் கடைக்குள் நுழைந்து "சுடச் சுடத் தேநீர் அருந்திவிட்டுச் சுறுசுறுப்பாக வெளியே வந்து, கசங்கிக் கிடந்த தன் உடைகளை இழுத்துத் தட்டிச் சரி செய்துகொண்டு கலைந்து கிடந்த கிராப்புக் கேசத்தை விரல்களால் கோதி ஒதுக்கிக்கொண்டான். அப்படிக் கோதியபோது, ரயில் எஞ்சினின் கரிப் புகைத் தூள் அவன் கையில் மசியாக அப்பிக்கொண்டு வந்தது. 'வீட்டுக்குப் போனதும் முதல் வேலையாக அம்மாவை வெந்நீர் போடச் சொல்லிக் குளித்துவிட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டும்' என்று குஷியாகத் தனக்குள் எண்ணியவாறு சிறிது தூரம் நடந்தவன், இடது புறச்சாலையோரம் 'கவுண்டன்பாளையம் பஞ்சாயத்து யூனியன்' என்ற பெரியதொரு போர்டு நாட்டப்பட்டிருந்ததைக் கண்டு சட்டென்று நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய பால்ய நினைவுகளில் பசுமையாகப் பதிந்திருந்த சில மரங்கள், பாதைகள், வீடுகள், தோட்டங்கள், கிணறுகள் முதலானவற்றை அங்கு அடையாளம் கண்டுகொள்ள அவனால் முடிந்தது.

அந்த நெடுஞ்சாலையிலிருந்து மேற்கு நோக்கிப் பிரிந்த வண்டிப் பாட்டையொன்றில் இறங்கி வேக நடை போட்டான் சபேசன். கொஞ்ச தூரம் சென்றதும், 'மீனாட்சி நகர்' என்று ஓர் ஊர் தென்பட்டது. அது அவனுக்குப் புதிய ஊராகவும் தோன்றியது. அதைக் கடந்து இன்னும் சற்று அப்பால் சென்றதும் ஒரு பழைமையான சிறு கோயிலும், அதைச் சுற்றி ஐம்பது, அறுபது வீடுகளும் காணப்பட்டன. அதுதான் பழைய கவுண்டன் பாளையம். அந்த ஊர் இப்போது முழுமையாக மாறிப் போய்விட்டிருந்தது.

(தொடரும்)

### இப்படி முடியும்

பெருமாள் கோயில் அர்ச்சகர் பெரிய நாமத்தைத் தீட்டியபடி பூஜைக்குப் பூப் பறிப்பதற்காகச் சென்று கொண்டிருந்தார். அவரை வெட்டியான் பார்த்தானோ இல்லையோ? மறுகணம்——

''இன்னுமா நீ உயிர் பெற்று எழுந்து வரே?''—என்று கத்தியபடி பயந்து ஓடும் அவரைத் துரத்திக் கொண்டு பின்னாலேயே ஓடுனான் அவன்!

—விமலா ரமணி



# இது போன்ற காபியை நீங்கள் குடித்திருக்க மாட்டீர்கள்




## நெஸ்கா:.பே

மட்டுமே
காபியின் தனிச் சிறப்பை
முற்றிலும் பெற்றுள்ளது



நெஸ்கா:.பே உயர்ந்த ரக காபிக்கொட்டையிலிருந்து தயாரானது. அது தனிப்பட்ட முறையில் வறுக்கப்பட்டு, நவீன வழியில் திறம்பட தயாரிக்கப்படுகிறது. டின்னைத் திறந்தவுடன் புத்தம் புதிய காபியின் நறுமணம் உங்கள் மனதைக் கவரும். சுவைத்தால் தான் தெரியும், அதன் தனி ருசியும், மணமும். இன்றே வாங்கிப் பருகுங்கள்!



**5**
விநாடிகளில்
காபி
தயார்

நெஸ்கா:.பே உடனே கரையக் கூடிய தூய்மையான காபி. அது, கொதிக்க வைத்தல் முதலிய வழி முறைகளுக்கு முன்னதாகவே உள்ளாகிவிட்டது. ஒரு டீஸ்பூன் நெஸ்காபேயை கோப்பையில் போட்டு வெந்நீர் ஊற்றுங்கள். அருமையான காபி உடனே தயார்! கொதிக்க வைப்பது, வடிகட்டுவது போன்ற எவ்வித கஷ்டமும் இல்லை. ஆகா, எத்தனை எளிமை—எவ்வளவு இனிமை!

**நெஸ்கா:.பே*** இந்தியாவின் இணையற்ற காபி ...
100% தூய்மையானது




ஒரு நெஸ்லே தயாரிப்பு

*நெஸ்கா:.பே, நெஸ்லே இன்ஸ்டன்ட் காபியைக் குறிப்பிடும் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

## மூன்று கன்னிகள்

(ஹிந்தி)

தீன் தேவியான் என்னும் ஹிந்திப் படத்தில் வரும் கதாநாயகன் தேவ் ஆனந்துக்கு மூன்று கன்னிகள் காதலிகளாகக் கிடைக்கிறார்கள். நந்தா, கல்பனா, சிமி என்னும் மூவரும் அவன் உள்ளத்தில் இடம்பெற முயல்கிறார்கள். இத்தனை கன்னிகள் கிடைத்தவன்பாடு கொண்டாட்டம்தான் என்று எண்ணத் தோன்றும். உண்மையில் அவன் பாடு திண்டாட்டமாகப் போகிறது; அதைக் காட்டுவதும் பொறுமையாகப் படம் பார்க்கிறவர்களின் பாடு பெரும் திண்டாட்டமாகிறது. இந்தப் படத்துக்குத்தான் எத்தனை விளம்பரம்? படாடோபக் கடை; மட்டச் சரக்கு என்ற கதையாகப் படம் உப்புச் சப்பற்று ஓடுகிறது.

கதாநாயகன் தனக்கு ஏற்ற நாயகியைத் தேர்ந்தெடுக்கலாம் என்பதற்கு மனோவியல் நிபுணரின் உதவியை நாடுகிறான். இக்காட்சியிலிருந்து படம் வண்ணப் படமாகக் காட்டப்படுகிறது. ஒளிப்பதிவும் காமிராவைக் கையாண்ட முறையும் நன்றாக இருந்தாலும் வண்ணம் பார்த்துப் பெருமைப்படும் வண்ணமாக இல்லை. கதாநாயகனுக்கு நாயகியைத் தேர்ந்தெடுக்க மனோவியல் நிபுணரை அண்டியவர்கள், வேஷக்கார மனோவியல் நிபுணரை விட்டு உண்மையான மனோவியல்காரரை அணுகி ஒரு நல்ல கதையை உருவாக்கியிருந்தால், ஒருவேளை பார்ப்பவர்களின் மனத்தைப் படம் வசியப்படுத்தியிருக்கலாம்.

## ரோஸி

(மலையாளம்)



விளையும் பயிர் முளையில் தெரியும் என்பார்கள். ரோஸி என்னும் இந்த மலையாளப் படம், காட்சியமைப்பையும் ஒலிப்பதிவையும் பார்க்கும்போது பிள்ளைப் பிராயத்தில் இருக்கும் மலையாளத் திரையுலகத்தின் வருங்காலம் சிறப்பாக அமையலாம் என்று கூறும்படியாக அமைந்திருக்கிறது.

ஆனால் கதையமைப்பில் சரியானபடி கவனம் செலுத்தாதது கவலையைத் தருகிறது. திருமணக் காட்சியில் இயேசு பெருமான் கரந்தூக்கி ஆசீர்வாதம் செய்வது போலக் காட்டி, எங்கோ தொலைவில் கரந்தூக்கி நிற்கும் தந்தையோடு கலந்திருப்பது அழகாக இருக்கிறது.

போலீசுக்குப் பயந்து தம்பதிகள் வெளியூருக்குச் செல்லும்பொழுது, கானகத்துக்குச் செல்லும் ராமனை நினைவூட்டி ஒலிக்கும் பாடலும் மனத்துக்கு நிறைவு தருகிறது.

இத்தனை இருந்தும் எந்தப் பாவமும் செய்யாத கதாநாயகியைத் தீர்த்துக் கட்டிக் கதாநாயகனைச் சிறைப்படுத்திக் கதையை முடித்திருப்பதை எப்படிப் பாராட்டுவது ?



## புரந்தரதாஸா (நாடகம்)

சமீப காலத்தில் நாடகக் கலை, பலப்பல அமெச்சூர் நாடகக் குழுக்கள் மூலம் புத்துயிர் பெற்று வருவதைக் கண்டு பெரு மகிழ்ச்சி அடைந்து வந்தனர் நாடகக் கலை ரசிகர்கள். எனினும் அவர்களுக்கு ஒரு குறை இருந்து வந்தது. பல கலைகள் கொண்ட நாடகங்கள் அரங்கேறுவதில்லையே என்று குறைப்பட்டு வந்தார்கள். அந்தக் குறையை நீக்கி உண்மையான நாடகக் கலைக்கும் புத்துயிர் அளித்து விட்டார்கள் ஜோதாஞ்சலி குழுவினர் என்று சொல்ல வேண்டும். அவர்கள் சமீபத்தில் நடத்திவரும் புரந்தரதாஸர் என்ற நாடகம் பக்தி, சோகம், நகைச்சுவை, சங்கீதம் எல்லாம் கொண்டுள்ள சிறந்த நாடகமாக விளங்குகிறது.

புரந்தரதாஸராக நடிக்கும் ஸ்ரீ எஸ். சந்தானம் அவர்கள் புரந்தரதாஸர் கிருதிகளை பாவ பூர்வமாகப் பாடி, நல்லபடியாக வசனங்களைப் பேசி நடிக்கிறார். அப்படியே மற்றப் பாத்திரங்களை ஏற்றுள்ளவர்களும் தத்தம் பாத்திரங்களின் குணச் சித்திரத்தைப் புரிந்துகொண்டு நடிக்கின்றனர்.

கதை அமைப்பு மிக நேர்த்தியாக இருக்கிறது. நவரஸங்களுடன் கூடிய நல்ல சங்கீத அம்சம் கொண்ட நாடகம்.

## சரசா பி. ஏ.

"எப்படி சார் இருக்கிறது?"

கண்ணிலும் கருத்திலும் கலையைத் தேக்கிக் கேட்குமளவுக்கும் படத் தயாரிப்பாளர்களுக்கு ஓர் அக்கறையும், கவலையும் ஏற்பட்டு விட்டால் தமிழ்த் திரையுலகம் பிழைத்துக் கொள்வதோடு மட்டும் நிற்காது; புகழேணியிலும் ஏறி நிற்கும்.

சரசா பி. ஏ. என்னும் இந்தப் படம் அத்தகைய தகுதி பெற்று விட்டதா என்று கேட்டால் சட்டென்று ஆம் என்று ஒப்புக் கொள்ள முடியவில்லை. ஏனெனில், கதையில், அப்படி ஒன்றும் விசேஷம் இல்லை. பல கதைகளையும் போலவே காதலனுக்கும் காதலிக்கும் இடையே ஒரு வில்லன் வருகிறான். அவனில்லா விட்டால் இந்தக் கதை இத்தனை நீளமாக ஓடாது. அந்தப் பாகத்தை ஏற்றிருப்பவர் எம். ஆர். ராதா. தாம் நடிகர்தாம் என்பதை நிரூபிக்கும் வகையிலே நடித்துக் காட்டியிருக்கிறார்; நடிப்பை நடிப்பாகவே கண்டு ரசிக்கச் செய்திருக்கிறார்.

பானுமதி அடக்க ஒடுக்கமாக நடித்துக் கதைக்குக் கண்ணியம் ஊட்டுகிறார். கவர்ச்சியூட்டுகிறார் என்றெல்லாம் சொல்ல முடியாது.

வில்லன், கதாநாயகன் என்று வந்து விட்டால், நம் தமிழ்ப் படங்களில் ஒரு ஜதைச் சண்டையை யாரும் எதிர்பார்ப்பது சகஜம்.

கதை முன்னே பின்னே இருந்தாலும், ஆபாசக் குறைவான இந்தப் படத்தைப் பார்த்துவிட்டு எழும்போழுது ஒரு ஜதைச் சண்டையைப் பார்த்த மனநிறைவுடன் வெளியே வரலாம்.



## இந்தத் தியேட்டரைக் கட்டியவர்

இவர்தான்!

லட்சம் லட்சமாகப் பணத்தைக் கொட்டி எல்லா வசதிகள் நிறைந்ததும் நவநாகரிகமானதுமான இந்த எழிலார்ந்த தியேட்டரை மவுண்ட் ரோடிலல்லவா கட்டியிருக்க வேண்டும். போயும் போயும் தாம்பரத்தில் கட்டியிருக்கிறாரே! போட்ட முதலுக்குத் தக்க வருமானம் இவருக்கு எங்கே கிடைக்கப் போகிறது? என்று நினைத்தவர் பலர்.

அதில் உண்மையும் இருக்கலாம். ஆனால் முனுசாமி முதலியாருக்கு அது தெரியாதா? சைக்கிளில் ஏறிப் போய்க் கட்டட வேலைகளை மேற்பார்வையிட்டுக் கண்ட்ராக்ட் தொழிலை அந்த நாளில் தொடங்கியவராயிற்றே இரு என். எம். முதலியார்! எத்தனையோ வருஷ உழைப்புக்கும் அனுபவத்துக்கும் பிறகு, இன்று பெரும் செல்வந்தராக விளங்கும் அவர் தாம் ஒருவேளை நஷ்டப்பட நேரலாம் என்பது தெரிந்தும் ஏன் இப்படிச் செய்தார் என்றால் அவருக்குள்ள மனிதாபிமானம்தான் காரணம் என்பது தவிர வேறு என்ன சொல்ல முடியும்? ஏன், கிராமப் புறங்களிலும் சென்னையின் சுற்றுப் புறங்களிலும் வாழ்வோரும்தான் வசதியாக உட்கார்ந்து சினிமாப் பார்க்கட்டுமே என்று எண்ணுகிற மனம் அவருடையது.

நேஷனல் தியேட்டரைக் கட்ட இவர் கையாண்டுள்ள நூதன உத்திகளை இன்ஜினியரிங் சாதனை என்று புகழ்கிறார்கள் விஷயமறிந்தவர்கள்.





## ஸவுத் பஸிபிக் (ஆங்கிலம்)

அலுக்காமல் சலிக்காமல் ஐந்து வருஷங்கள் தொடர்ந்து மேடையிலே நடிக்கப்பட்டதோர் ஆடல்பாடல்கள் நிறைந்த நாடகத்தைத் திரைப் படமாக்கி யிருக்கிறார்கள், டுவென்டியத் சென்சுரி பாக்ஸ் கம்பெனியார். சாதாரணமாக அல்ல, அசாதாரணமான அளவில் - அதாவது எழுபது மில்லிமீட்டர் படமாக. சங்கீத சல்லாப உல்லாசப் படம் என்றுதான் சவுத் பஸிபிக்கை விளம்பரம் படுத்தியிருக்கிறார்கள். ஆகவே படம் பார்க்கும்போது விநாடிக்கொரு பாட்டாக உதிர்க்கிறார்களே என்று வேதனைப்படுவதில் அர்த்தமில்லை. தரமுயர்ந்த ஐரோப்பிய சங்கீதம்.

படத்தில் கதையம்சம் என்று குறிப்பிடும்படியாக எதுவும் இல்லை. தென் பஸிபிக் தீவு ஒன்றில் பாடி இறங்கியுள்ள அமெரிக்க ராணுவத்தினரில் ஒரு நர்ஸ், ஒரு கடற்படை அதிகாரி இவர்களின் காதலைச் சுற்றிப் பின்னப்பட்டிருக்கிறது கதை. நர்ஸாக மிட்ஸி கெய்னரும் மரீன் ஆபீஸராக ஜான் கெர், சுதேசிப் பெண்ணாக பிரான்ஸ் நூயென்னும் வருகிறார்கள். ஆடல் பாடல் கதை அம்சங்களைவிட இந்தப் படத்தின் தரத்தை உயர்த்துவது கண்ணுக்கினிய வண்ணங்களில் அற்புதமான இயற்கை அழகுகளைப் படமாக்கி இருப்பதுதான். கவிஞன் கற்பனையிலே காணும் அழகுகளை, இயற்கை அற்புதங்களை வண்ணங்களை வாரியிறைத்து வடித்திருக்கிறார்கள். இந்தப் படத்தின் ஒரு விசேஷம், இதில் ஒலிக்கும் பாடல்களையும், பின்னணி இசையையும் இந்தப் படப் பிடிப்பை ஆரம்பிப்பதற்கு முன்னதாகவே ரிகார்டு செய்து கொண்டு விட்டதுதான். முன்னதாகவே பதிவு செய்த ஒலிகளுக்கு ஏற்ப அத்துடன் நடிகர்கள் ஒன்றிப் போய் இயற்கையாக நடிப்பதற்கு இந்த முறையில் வாய்ப்பு உண்டு என்கிறார் டைரக்டர். இந்தப் படத்துடன், தி மிரகிள் ஆப் டோட் ஏஓ என்ற துண்டுப் படமொன்று காட்டுகிறார்கள். எழுபது எம். எம். படத்தைக் காணும்போது சம்பவங்கள் நிகழும் ஸ்தலத்திலேயே இருப்பது போன்றதோர் அநுபவத்தை நாம் அடைகிறோமில்லையா? இப்படி இதைப் படமாக்குவது எப்படி? அதன் சாதனங்கள் என்ன என்பதை விளக்குகிறது இத் துண்டுப் படம். இதற்காகத் தயாரிக்கப்பட்ட சில காட்சிகள் நம்மைப் பிரமிப்பூட்டுவதோடு, கடைசியில் அதை முடிக்கும் உத்தி நம்மை மயிர்க்கூச்செறியவும் வைக்கிறது.

## ஆயிரத்தில் ஒருவன்

ஒரு சர்வாதிகாரி. அவனை எதிர்க்கும் புரட்சிக்காரர்கள், அவர்கள் நல்லவன் மணிமாறன் (வைத்தியன்) இவர்கள் கன்னித் தீவில் அடிமைகளாக விற்கப்படுகின்றனர். பிறகு, காதல், மோதல், சாதல் எல்லாம் நடக்கின்றன. கதாநாயகனுக்கு மூன்று வில்லன்களுடன் போர் புரியும் வாய்ப்புக் கிட்டுகிறது.

எம். ஜி. ஆர்.தான் ஆயிரத்தில் ஒருவன் -- அதாவது கதாநாயகன் மணிமாறன். அதனால் தான் பயங்கரமான வாட்போர்களில் ஒரு கீறல் காயம்கூட இல்லாமல் தப்ப முடிகிறது. களைக்காமல் சண்டையிட்டு வெற்றிவாகை சூடவும் முடிகிறது. களையான முகத்தோடும் கையில் கத்தியோடும், எம். ஜி. ஆர். தோன்றும்போதெல்லாம் ரஸிகப் பெருமக்களின் கரகோஷம் தியேட்டரைப் பிளக்கிறதைப் பார்த்தவர்கள் அவர் மக்கள் திலகம்தான் என்பதை ஒப்புக் கொள்வார்கள். விறுவிறுப்பும் சுறுசுறுப்பும் கொண்ட நடிப்பு.

ஜெயலலிதா கவர்ச்சியாகத் தோன்றி, கவனமாக நடித்திருக்கிறார். முதலில், காதலனைத் திரஸ்கரிக்கும் போதும், பிறகு பிழையுணர்ந்து வருந்தி மன்னிப்புக் கோரும் போதும் அவர் நடிப்பு நன்றாயிருக்கிறது.

எம். என். நம்பியார், மனோகர், எஸ். வி. ராமதாஸ் ஆகிய மூன்று வில்லன்களில் நம்பியார் தான் காரமும், வீரமும், தீரமும் ததும்பும் அசல் வில்லனாக விளங்குகிறார். சண்டைக் காட்சிகளில் அபாரமாய் நடிக்கிறார்.

நடனப் பதுமை எல். விஜயலட்சுமியை நடனம் ஆடவிடாமல் கட்டிப் போட்டு விட்டார்கள். ஆகவே சோபிக்கவில்லை.

நாகேஷ் - மாதவி தமாஷ்கள் சினிமா உலகின் ஆதிகாலக் காட்சிகள். ஏற்கனவே பலமுறை பார்த்தவை. ஆகவே ரஸிக்க முடியவில்லை.

ஆரம்பத்தில் ஈஸ்ட்மென் கலர் எடுப்பாயில்லை. பிற்பகுதியில் நன்றாயிருக்கிறது.

வெளிப்புறக் காட்சிகளில் மிகவும் அருமையாகக் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். மேல் நாட்டுப் படம் போல் தோன்றுகிறது. பாடல்கள்: சுமாராயிருக்கின்றன. கதை: நல்லவன் வாழ்வான் என்ற அடிப்படையில், தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும், தருமம் மறுபடி வெல்லும்-என்னும் கருத்தை வலியுறுத்தும் பலமுறை வந்து அலுத்துப் போன பழைய கதை.

பழைய கதையை விறுவிறுப்பாகச் செய்திருக்கும் பத்மினி பிக்சர்ஸார் பாராட்டுக்குரியவர்கள்தான்.



# அவள் எங்கே?

கதை: கௌசிகன்

சித்திரம்: ரமணி

18















# படித்துப் பாருங்கள்

## அறிவுக்கனலே அருட்புனலே

கல்கியில் தொடர்ந்து வெளிவந்த 'அறிவுக் கனலே அருட்புனலே' இன்று 'கலைமகள்' வாயிலாகப் புத்தக வடிவில் வெளி வந்துள்ளது. கைநிறைந்த புத்தகம்; அதோடு உள்ளம் நிறைவு பெற வைக்கும் எழுத்தும்கூட.

சாமான்யர்களின் வாழ்க்கை வரலாறுகளில் இங்கொரு சம்பவம் மற்றவர்களுக்கு இருப்பதை விட மேலோங்கியதாகவோ அல்லது ஆச்சரியம் விளைவிக்கவல்லதாகவோ மற்றும் ஒரு நிகழ்ச்சி அதிர்ச்சியை உண்டாக்கக் கூடியதாகவோ இருந்துவிட்டால் நம் இதயங்கள் அடையும் தனிப்பட்ட இன்பமோ, பிரமையோ சாதாரணமா யிருப்பதில்லை. மகான்களாயுள்ளவர்களின் வரலாறுகளில் அதிலும் ஒழுங்காய் வாழ்க்கைக் குறிப்புகளும் இதர விவரங்களும் பாதுகாக்கப்பட்டவர்களின் சரிதங்களாயின் அவையூட்டும் மனத் திருப்தி அலாதியாயிருப்பதற்குக் கேட்க வேண்டுமா? அவ்விதம் உருவாகியுள்ளவைகளே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய திவ்ய சரித்திரமும், சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கை வரலாறும். ஏற்கனவே வங்காளத்திலும், ஆங்கிலத்திலும் விரிவான வரலாற்றுத் தொகுப்புகள் இவ்விருவர்களைப் பற்றியும் உள்ளன. படிப்பதற்கு மிகவும் சுவையூட்டுகின்ற அளவிலும் குரு மகாராஜரின் சிறந்த சீடர்களாலும், இதர எழுத்தாளர்களாலும் உலகிற்கு அளிக்கப்பட்டு, பல நாடுகளிலும் பரவி, அதிகமான மனவெழுச்சியையும் மக்களிடையே உண்டாக்கியுள்ளன.

தமிழில் சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றை வெகு விரிவாய் எழுதிப் பிரசுரித்தது மயிலை ராமகிருஷ்ண மடம். சென்ற ஆண்டில் விவேகானந்தரின் நூற்றாண்டு நிறைவின்பொழுது நண்பர் ரா. கணபதி இப்பணியைச் செவ்வனே செய்து பெரும் பெயரையும் நன்றியையும் தமிழ் நாட்டின் பெருமக்களிடமிருந்து அடைந்தார். அதனை ஒரு தவச் செயலாகவே நான் கருதினேன். ஏனெனில் எத்தனையோ புத்தகங்களின் விவரங்களையெல்லாம் சேர்த்து ஒரே இடத்தில் சுவாரஸ்யம் சிறிதும் குறையாத வகையில் உருவாக்கும் ஆற்றலும் அறிவும் எல்லோரிடமும் காண முடியாது. முப்பது வயதுகூட முடியாத சிறுவராயினும், இவ்வளவு பெரிய காரியத்தை எவ்விதம் செய்தார் என்றே வியப்பை மூட்டியது கணபதியின் சாதனை.

இன்று இப்புத்தகத்தை வாசிக்கையிலேயே என்னையும் மீறி ஒரொரு சமயம், "இவர் என்ன, உண்மையிலேயே சாதகரா? எப்படி இவ்வளவு பெரிய இரண்டு தெய்வ மனிதர்களை நம் கண் முன்னே துளியும் ஆயாசமின்றி இவரால் நிறுத்த இயலுகிறது! இதற்கும் ஒரு தனி சக்தி வேண்டுமே! இவரும் ஏதாவது யோகம் செய்கிறாரா?" என்று மனப் பிரமை ஏற்பட்டதுண்டு. "ஏதோ ஒரு நிச்சயம் இவருடைய உள்ளத்தில் குடிகொண்டிருப்பதால் மட்டுமே இவ்விதமான ஓர் அதிசயத்தைத் துணிவுடன் நிறைவேற்றியுள்ளார்" என்று முடிவுக்கு வந்தேன். என்னுடைய தீர்மானம் சரியா, தவறு என்பதை நேயர்கள் இப்புத்தகத்தை ஊன்றி வாசிப்பவர்கள், சந்தேகமின்றி ஒப்புக் கொள்வார்கள்.

'இவ்விருவரைப் பற்றியும் ஏற்கனவே வரலாறுகள் உள்ளனவே, அவைகளையெல்லாம் திரட்டி ஓரிடத்தில்தானே தரவேண்டும்? இதில் என்ன புதுமை உள்ளது?' எனலாம் அறியாதவர்கள். கவனித்தால் விளங்கும், எழுதியவருக்குச் சொந்தத்தில் சமய வாழ்க்கையிலும் நம் புராதன மணமேறிய பண்பாட்டிலும் அளவு கடந்த ஈடுபாடு இல்லாவிடில் முதலில் இவ்வித முயற்சியில் மனத்தைச் செலுத்தவே முடியாது. அப்படி இயன்றாலும், பரந்த படிப்பும், உள்ளுணர்வும் ஒருமிக்கச் சேர்ந்து உருவாகும் உண்மைக் காவியமாய் ஒன்றைச் சமைக்கச் சாத்தியமாகாது. எந்த இடத்தை எடுத்தாலும் துளியும் சலிப்போ, மனத்தைக் கவராத உணர்ச்சியோ ஏற்படாது காத்து வந்திருக்கும் கலை அநுபவமும் கலந்து கிடப்பதை, நுட்பமான தத்துவ ஆராய்ச்சி ரீதியில் பல இடங்களில் வெளிவந்துள்ள இவருடைய கருத்துக்களில் காண்கிறோம். பண்டை முனிவர்களின் வரலாறுகளில் காணும் சூட்சுமமான சம்பவங்களை ஏதோ கட்டுக்கதை என எண்ணும் விருப்பதற்காகவேகூட, நண்பர் கணபதியின்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



"என்ன சார் உங்க இடது கையில்? ஏதா வது காயமா?"

"இல்லே. நீங்கள் ஏதோ நன்கொடை கேட்கவந்தீங்களோ? வலது கை கொடுப்பதை, இடது கை பார்த்துச் சங்கடப்படாமல் இருக்க, நானே துணியைச் சுற்றி வச்சேன்."

தீவிர நம்பிக்கையும், சமய உணர்ச்சியும் இந்தப் பெரும் பணியில் இறங்கினவோ என்றே சிற்சில இடங்களில் நமக்கு வியக்கத் தோன்றுகிறது.

❦ ❦ ❦

தேரொன்றை இழுத்து அதன் நிலைக்குக் கொணர்ந்து சேர்த்த மன விச்ராந்தி இவருள்ளத்தில் நிலவியுள்ளதோ என்பதை இவர் சொற்களிலேயே நாம் அறிய இயலும்.

'இந்தச் சரிதத்தில் 'நரேன் சிவன்; நான் சக்தி' என்று பரமஹம்ஸ தேவர் கூறியிருப்பதை நினைவுகூர்ந்தால் சுகவரன் — அம்பிகை என்ற உவமை பொருத்தமாகவே தோன்றும். முதலில் சுகவரனுடைய தேரை இழுத்து வந்து ஓரிடத்தில் நிறுத்தினோம். பிறகு தேவியின் தேரையே நீண்ட நாட்களாக இழுத்து வருகிறோம். இனி அன்னை — ஐயன் இருவரையும் ஒரே ரதத்தில் ஆரோகணிக்கச் செய்ய வேண்டும். அப்படிச் சிறிது தூரம் சரித்திரம் நகரவேண்டும். பிறகு சக்தி மறைந்துவிடுவாள். எங்கே? சிவத்திலுள்தான். அப்புறம் இது சிவத்தின் சரிதமாகவே — அதனில் உள்ளடங்கிய சக்தியின் பிரபாவத்தை ஆங்காங்கு வெளிப்படுத்திக் கொண்டு — நகர்ந்து செல்லும்' (பக்கம் 256).

ரதத்திற்கு ஒப்பிட்டதும் பொருத்தமாக இருக்கிறது. தெருவில் உற்சவத்தில் தேர் ஊர்ந்து நகருவதன் கம்பீரமே தனி அல்லவா? தேர்ச் சிலைகள் இரு பக்கங்களிலும் ஊசலாடிட முட்டுக்கட்டை கொடுப்பதன் விசை வாய்த் தேர் பிரு சொருகுடன் வருவதைக் காண்பதில் புல்லரிக்கும் உணர்ச்சிகள்தாம் மேம்படும். அருமையான ராக ஆலாபனம் கேட்கையில் தேரின் காம்பீர்யமும், தொண்டையிலிருந்து கிளம்பும் நாதம் பிருவாயும் கார்வையுடனும் வெளிப்படுகையில் தேரசைவதின் ஞாபகமும் ரசிகருள்ளங்களில் எழுவதுண்டு. இந்தக் காவியத்தையும் — சரித்திரங்கள் காவியங்கள்தாம், சரியான அளவிலும், அழகிலும் உருவாயின் — தேருடன் தான் உவமையாக்க வேண்டும்.

ஸ்ரீ கணபதியின் ஆர்வமெல்லாம் சொந்தத் திருப்திக்காகவே ஏற்பட்டதெனத் தமது பூர்வ பீடிகையில் சொல்லுகிறார். பிறரும் திருப்திப்படுவதில் அவருக்கு வெறுப்பொன்றுமிராது. இருப்பின் இந்த நீண்ட 640 பக்கங்கள் கொண்ட அறுசுவை உண்டியைப் படைத்திருப்பாரா? யாரை நினைத்துக் கொண்டு மனத்தை அளவிட்டுக் கொண்டாரோ. அவருக்கே அளவு தெரியாத பிரமையை ஊட்டியிருக்கிறார்.

ஆனால் ஒரே ஒரு சந்தேகம் எனக்கு. பானையின் நயத்தைவிட அது நிறைய பூஷணங்கள் சுமந்திருப்பதை ஒரு சிறு குறையாகவே சிலர் கருதலாம். கருதுகிறவர்கள் மிக மிகக் குறைவானவர்களாயும் இருப்பார்கள். அவர்களுக்கு உள்ளுணர்வைத் தட்டி எழுப்பும் பரம ரகசியங்கள் சில, இந்த நகை நட்டு அலங்காரங்கள் செய்யும் ஓசையில் எங்காவது செவியில் புகாமல் இருந்துவிடுமோ என்ற பயமேகூடக் காரணமாகலாம்.

இரண்டு வரலாறுகள் இங்கே நெருங்கிய பிணைப்புடன் நன்கு உருவாகியுள்ளன. மங்களமான ஒரு பிணைப்பு, குரு சிஷ்யர்களின் சேர்க்கை. அன்றொரு நாள் பாரதத்தை விழிப்பெய்தச் செய்த நருஷ்ணர்ஜுனர்களின் பிணைப்பை மறு முறை உலகுக்கு ஞாபகப்படுத்திய திவ்விய இரட்டையர்கள் இவ்விருவரும். உலகம் உய்ய வந்த மகான்களின் வாழ்க்கைகள் இவ்விதமே தனிச் சோபையுடன் மிளிர்கின்றன. அறிவுக் கண் கொண்டு நுகர்வதற்கு மனிதனிடம் மட்டுமே ஞானம் பிறக்கிறது. பிறந்த ஞானத்தைப் பிரயோகிக்கத் தெரிந்த வழிகளில் மகான்களின் வாழ்க்கை நுட்பங்களை அலசிப் பார்த்துப் பிறருக்கும் பரிமாறுவதற்கான இயல்பும் திறமையும் பெறுவது கடினம்.

அதனை வரமாக, தேவியின் பூர்ண கடாட்சத்துடன் பெற்றுள்ள ஸ்ரீ ரா. கணபதியை வாழ்த்துவதொன்றே என்போன்றவர்களுக்கு உகந்ததொரு முறை. மனமும் உள்ளமும் ஒருங்கே சேர்த்து என் ஆசிகளையெல்லாம் அவருக்கு வழங்குவதில் எனது நிறைவையே நான் தேடிக் கொள்கிறேன்.

— வி. சந்திரசேகரன்

நூலின் ஆசிரியர்: ரா. கணபதி; பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை — 4; விலை: ரூ. 12.

சகல வீட்டு வசதிகளுடனும் சுகமான பிரயாணத்திற்கு




## தி ஷிப்பிங் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்

(ஒரு இந்திய அரசாங்கத்தின் நிறுவனம்)

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:

ஸ்டீல் கிரீட் ஹவுஸ் 4வது மாடி, தின்ஷாவாச்சா ரோடு, பம்பாய்-1

சென்னை - நாகப்பட்டினம் - ஸ்ட்ரெயிட்ஸ்




# t. S. S. ஸ்டேட் ஆப் மதராஸ்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 16-8-1965 | 17-8-1965 |

அன்று புறப்படும்

இதர விவரங்களுக்கு மேற்கண்ட ஏஜண்டுகளை அணுகவும்

# K. P. V. ஷேக் முகம்மது ராவுத்தர் & கோ.

**41, லிங்கி செட்டித் தெரு, சென்னை-1**
தபால் பெட்டி நெ. 1264
போன்: 22761-3 தந்தி: "SHIPINDIA".

பண்டகசாலை
நாகப்பட்டினம்
போன்: 72 தந்தி: "SHIPINDIA".





## சித்திரக் களஞ்சியம்



''எரால் பிளினுக்கு அப்புறம் நான்தான் 'ஸ்வாஷ் பக்ளிங்' சாம்பியன்.''

''ஏன்! எம்ஜியாருக்கு நான்தான் வாத்தி யார்; தெரியும் இன்னுனுன்!''



* * * * * * * * *

''நீங்க சொல்றபடி என்னாலே எப்படி உங்க பிள்ளைக்கு ஆறுதல் கூற முடியும்? அது முடியாதுங்க!''

''ஹெட்மாஸ்டர் சார். உங்களால் நிச்சயம் முடியும். ப்ளீஸ்! 'உனக்குப் பிறக் இருக்கும் இரட்டைக் குழந்தைகளுக்கும் ஸ்கூலில் சேர்க்கும்போது கட்டாயம் அட் மிஷன் தருகிறேன்' என்று நீங்கள் ஒரு வார்த்தை சொல்லுங்கள். போதும்!''







"என்னது? ஆபீசுக்கு எலியைக் கொண்டு போகிறீர்களே!"

"திடீர் திடீரென்று, பத்து வருஷத்துக்கு முந்தைய ரிகார்டுகளை யெல்லாம் கொண்டு வா என்று ஆபீசர் பிராணனை வாங்குகிறார்!"



* * * * * * * * *

"என்ன? டிராக்டர் வீல் மாடலில் ரெண்டு வளையல் வேணுமா?"

"இல்லே! டிராக்டர் வீல் சைஸுக்கு ரெண்டு வேணும். நாளை என் பெண்ணுக்கு வளைகாப்பு ஆச்சே?"





நெய்வேலி நெய்வேலி என்ற ஊர் ஒன்று இருக்கிறது. அதில் மிருதங்கம் தெரு, லைட்டர் தெரு, கூழாங்கல் தெரு, ஹைட்ரஜன் தெரு, கனதகன (கம்பஸ்ச்சன்) என்ஜின் தெரு, நைட்ரஜன் தெரு, உரியா ரசாயன எரு தெரு, பிளிபோளா தறுகணி அன்னம் தெரு என்பது போன்ற அழகான பெயர்களுள்ள தெருக்கள் இருக்கின்றன.

தெருக்களில் கண்களை மூடிக்கொண்டு செல்லும்போது பலர் மீது முட்டிக்கொள்ள

# நிலக்கரியூர்க் கல்யாணம்

துமிலன்

மாதங்கிக்கும் வசந்தனுக்கு மிடையே முதல் முதலாகக் காதல் பேச்சு ஆரம்பித்ததற்கு மறுநாள் பஸ் ஸ்டாப்பில் வசந்தன் மட்டுமே நின்றிருந்தான். மாதங்கி வரவில்லை. அடுத்த நாளும் அவளைக் காணோம். அதற்கும் அடுத்த நாளன்றும் அவள் போன்ற சாயலுள்ளவர்கள்கூட வரவில்லை. வசந்தனுக்கும் ஏன் காதல் பேச்சு ஆரம்பித்தோமென்றிருந்தது.

நான்காவது நாளன்று அவன் வீட்டு விலாசத்துக்கு அவளிடமிருந்து தபாலில் ஒரு கடிதம் வந்தது. அதில் அவள் எழுதியிருந்தாள்:

''அன்... மிஸ்டர் வச...க்கு,

சௌக்கியமென்று நம்புகிறேன். மூன்று தினங்களாக நான் ஆபீசுக்குப் போகவில்லை. இருந்தாலும் கதை சொல்லும் வழக்கம் விடமாட்டேனென்கிறது. ஆகவே அன்று ஆரம்பித்த கதையை எழுதி அனுப்பியிருக்கிறேன்.

அன்று எனக்கு ஏற்பட்ட மன... இதில் கதை எப்படி ஆரம்பித்தேன், எதுவரையில் சொன்னேன் என்பது மறந்து போய் விட்டது. நெய்வேலி என்ற ஊர் சம்பந்தப்பட்டதென்று மட்டும் ஞாபகம்.

நான் இன்னும் சில நாட்கள் வரமாட்டேன். எனக்கு என் வீட்டு விலாசத்துக்குத் தாங்கள் ஒரு கடிதமும் தயவுசெய்து போடக் கூடாது. தங்களைக் கூடிய சீக்கிரத்தில் சந்திப்பேன். அதற்குள் ஒரு புதிய கதையையும் ஆரம்பித்து வைக்கிறேன்.

பஸ் ஸ்டாப்பை நான் மிகவும் விசாரித்ததாகச் சொல்லவும்.

தங்கள்
மா....ங்கி''

இந்தக் கடிதத்துடன் ஒரு முழுக் கதையும் ஒரு கதையின் பகுதியும் இருந்தன. முழுக் கதையாவது:

நேர்ந்தால், அநேகமாக எஞ்சினீயர்கள் மீது தான் மூட்டிக் கொண்டாக வேண்டும். ஏனென்றால், அங்கே இருப்பவர்கள் மின்சார எஞ்சினீயர்களாகவோ, சுரங்க எஞ்சினீயர்களாகவோ எரு எஞ்சினீயர்களாகவோ, பழுப்பு நிலக்கரி வில்லை எஞ்சினீயர்களாகவோ ரசாயன எஞ்சினீயர்களாகவோ கனிமண் (வெள்ளை ரகம்) எஞ்சினீயர்களாகவோ அல்லது மற்ற ஏதாவதொரு வகை எஞ்சினீயர்களாகவோ இருப்பார்கள். பெரும்பாலும் வாலிபர்கள். இந்த எஞ்சினீயர்களை நூற்றுக் கணக்கில் பார்த்துப் பார்த்து அலுத்துப் போன உள்ளூர்ப் பெண்கள் எஞ்சினீயர்களல்லாதவர்களையே கல்யாணம் செய்துகொள்ள விரும்பக் கூடும்.

இங்கே வீடுகள் விஷயத்தில் சம்பள விகித சோஷலிஸம் கையாளப்படுகிறது. முந்நூறு ரூபாய் சம்பளக்காரருக்கெல்லாம் ஒரே 'டைப்' அதாவது, ஒரே விதமான வீடு; ஐந்நூறு ரூபாய் சம்பளக்காரர்களுக்கெல்லாம் ஒரே டைப் வீடு; எண்ணூறு ரூபாய் சம்பளக்காரர்களுக்கெல்லாம் ஒரே டைப் வீடு. இதே போல்தான். ஒரு சமயம் ஒரு குறிப்பிட்ட டைப் வீடு கட்டி முடிக்கப்பட்டபோது அதன் வலது பக்கச் சுவர் ஐந்து டிகிரி கோணலாக இருந்ததென்று ஒரு புகார் கிளம்பிற்று. அதற்காக மற்ற வீடுகளின் வலது பக்கச் சுவர்களையும் அந்த அளவு கோணலாக இருக்கும்படி கட்டினார்களாம். ஒன்றுக்கொன்று வித்தியாசம் இருந்தால் அடையாளம் தெரிந்து விடுமாம்! இந்த ஒரே ரக வீடுகளைப் பார்த்த மாத்திரத்தில் தற்காலம் படித்த பெண்களின் வாயிலிருந்து சுலபமாக எழும்பும் இரண்டே இரண்டு வார்த்தைகள்: ''போர் அடிக்கிறதே'' என்பதுதான்.

ஒரு நாள் இரவு சுமார் பதினொரு மணி இருக்கும். நெய்வேலி எஞ்சினீயர்கள் வசிக்கும் அந்த ஒரே டைப் ரக வீடு ஒன்றில் மட்டும் உள்ள எல்லா விளக்குகளும் எரிந்துகொண்டிருந்தன.

''மன்னி! நகைகளைக் கழற்றி விடுகிறேன். கழுத்து, இடுப்பு, கைகள் எல்லாம் வலிக்கின்றன. பட்டுப் புடவையையும் தாங்க முடியவில்லை. நழுவி நழுவிக் கொண்டே யிருக்கின்றது. அதையும்...'' என்று கூறிக் கொண்டே ஒரு பெண் தன் இடுப்பில் போட்டிருந்த ஒட்டியாணத்தைக் கழற்றப் போனாள்.

''கொஞ்சம் பொறுத்துக் கொண்டிரு, சரோஜா! பெண் பார்க்க வருகிறவர்கள் சிலர் வேண்டுமென்றே சொன்ன மணிப்படி வராமல் திடீரென்று வருவார்கள்'' என்றாள் மன்னி பிரமீளா.

''ஸி. ஐ. டி. மாதிரியாக்கும். அவர்கள் நாச...'' என்றான் பிரமீளாவின் கணவனும்,



சரோஜாவின் அண்ணனும், சுரங்க எஞ்சினீயருமான சலம். அவன் பெற்றோர்கள் வைத்த பெயர் வேங்கடாசலம்.

அப்போது வாசலில் ஒரு டாக்சி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. மறு கணம் சரோஜா பக்கத்தில் உள்ள அறைக்குள் பாய்ந்து சென்றாள். அவள் கை ஒரு பௌடர் டப்பாவை எடுத்துக் கொண்டது.

வண்டியிலிருந்து ஒரு வாலிபனும், ஒரு பெரிய அம்மாளும் இறங்கினார்கள். சலமும், பிரமீளாவும் அவர்களை வரவேற்க விரைந்து சென்றார்கள்.

"எஞ்சினீயர் சலம் வீடு, இதுதானே?" என்று வந்த வாலிபன் விசாரித்தான்.

"மிஸ்டர் ராமன்தானே, வாருங்கள்!" என்று சலம் வரவேற்றான். டெல்லி செகரட்டேரியட்டில் ஓர் உதவிக் காரியதரிசிக்கு உதவிக் காரியதரிசியான சுந்தரராமன் என்ற அந்த ராமன் என்பவரைத்தான் அவன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. அவர்கள் சந்திப்பது இதுதான் முதல் தடவை. கூட வந்திருந்தது சுந்தரராமனின் தாயார் பட்டம்மாள். அவளைப் பிரமீளா வரவேற்று உள்ளே அழைத்துக் கொண்டு போனாள்.

"நான் டாக்ஸிக்காரனை அனுப்பிவிட்டு வருகிறேன்" என்று சலம் மரியாதைக்காகக் கூறியபோது, ராமன் பரப்பிரம்மமாகப் பேசாதிருந்தான். சலம் ஐந்து ரூபாய் கக்க வேண்டியதாயிற்று.

"நாங்கள் வந்த ரயில் வண்டி திண்டிவனத்தினருகே தண்டவாளத்தை விட்டு இறங்கிவிட்டது. அந்தப் பக்கத்திலே ஒரு ராட்சதன் இருந்து கொண்டு இப்படிச் செய்கிறானாம். நாங்கள் ஒரு டாக்ஸி வைத்துக் கொண்டு வந்தோம். இந்த ஊரில் வீட்டைத் தேடி ஒரு மணி நேரமாகச் சுற்றிக்கொண்டிருந்தோம். கடைசியில் ஒரு பிள்ளையாண்டான் இந்த வீட்டைக் காண்பித்தான். வீடு எல்லாம் ஒரே மாதிரியாக இருக்கிறதா, 'திருப்பதியில் மொட்டைத் தாதனைக் கண்டாயா' என்பார்களே, அது மாதிரி இருந்தது. திண்டிவனத்திலேயே தங்கிவிட்டு நாளைக் காலையிலே வரலாம். ஆனால் நாளைக்குச் செவ்வாய்க் கிழமை. அவன் நாளைக்கே ஊருக்குப் போயாக வேண்டும். அதனால் இராத்திரி எத்தனை நாழிகையானாலும் பார்த்து விடுவதென்று பிடிவாதமாக வந்தோம்" என்று பட்டம்மாள் சொன்னாள்.

"அப்படி வந்ததில் ரொம்ப சந்தோஷம்!" என்றாள் பிரமீளா.

பெண் பார்க்கும் படலம் இனிது நடந்தேறியது.

ஊருக்குப் போய் எக்ஸ்பிரஸ் தந்தியில் முடிவு தெரிவிப்பதாகப் பட்டம்மாள் கூறினாள். தாயும், மகனும் சம்பிரதாயப்படி அந்த வீட்டில் இரவில் தங்காமல் புறப்பட்டுச் சென்றுவிட விரும்பினார்கள். ஆனால் திடீரென்று காற்றும் மழையும் கலந்தடித்ததால் பேசாமல் ஓர் அறையில் போய்ப் படுத்துக் கொண்டுவிட்டார்கள்.

அரை மணி நேரம் கழிந்தது. "மன்னி! அந்தப் பிள்ளை என் கழுத்துக்குக் கூட வராது போலிருக்கிறதே. போதாததற்கு என்னைப் பார்த்துத் திருதிருவென்று விழிக்கிறது" என்று சரோஜா கூறினாள்.

"இந்தா! அது, இது என்று பேசாதே. அவர்கள் காதில் விழப் போகிறது!" என்று பிரமீளா எச்சரித்தாள்.

அதே சமயத்தில் பட்டம்மாள் பிள்ளையிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்:

"ஏண்டா! பெண் சுமார் உயரம், சிவப்பாக இருக்கும், அழகாக இருக்கும் என்று போட்டிருந்த கல்யாண விளம்பரத்தைப் படித்துச் சொன்னாயே! இது சிவப்பாயில்லை. கோர்க்காலி மாதிரி மிக உயரமாகவும் இருக்கிறதே!"

"அதுதான் எனக்குப் புரியவில்லை அம்மா! பெண்ணைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே இந்த யோசனைதான்."

"ஏமாற்றி விட்டார்களடா. இதுக்குத்தான் கல்யாண விளம்பரங்களை நம்பிப் பெண் பார்க்க வரக்கூடாது என்று நான் அடித்துக் கொள்கிறது!" என்றாள் தாயார்.

இந்தச் சம்பாஷணை அறைக்குச் சமீபத்தில் வெளியே படுத்துக் கொண்டிருந்த வேங்கடாசலத்தின் காதில் விழுந்தது. அவன் மூளை குழம்பிற்று. இதைப் பற்றித் தீர்மானமாக யோசனை செய்து கொண்டிருந்தான்.

கடிகாரத்தில் மணி ஒன்றடித்தது. அப்போது காற்றும் மழையும் நின்றுவிட்டிருந்தன. அவனுக்கு விஷயம் புலப்பட்டது. மேலே என்ன செய்ய வேண்டுமென்று ஒரு முடிவுக்கு வந்தான். எழுந்திருந்து பிரமீளாவை எழுப்பித் தான் நைட்ரஜன் தெருவிலுள்ள வேதாசலத்தின் வீட்டுக்குச் சென்று வருவதாகக் கூறினான். இவன் வசித்து வந்தது ஹைட்ரஜன் தெரு.

தன் ஸ்கூட்டரை வீட்டுக்கு வெளியே சற்றுத் தூரம் தள்ளிக் கொண்டு போய் விட்டுப் பிறகு அதிலேறிச் சென்றான். வழியில் அந்தச் சலமே (வேதாசலமே) அவன் ஸ்கூட்டரில் வந்து கொண்டிருந்தான். ஒருவரையொருவர் பார்த்துத் தங்கள் வண்டிகளை நிறுத்தினார்கள்.

"உன்னைப் பார்க்கத்தான் வந்துகொண்டிருக்கிறேன்" என்று இருவரும் ஒரே சமயத்தில் ஒருவரிடம் ஒருவர் சொன்னார்கள்.

"டெல்லி செகரட்டேரியட்டில் ஓர் உதவிக் காரியதரிசிக்கு உதவிக் காரியதரிசியான சீதாராமன் என்ற ராமனும் அவன் தாயார் ரேவதி அம்மாளும் என் தங்கை ஜலஜாவைப் பெண் பார்க்க வந்திருக்கிறார்கள். அவர்கள் வந்த வண்டி திண்டிவனத்தில் தண்டவாளத்தில் இறங்கிப் புல் மேயப் போய்விட்டதாம்!" என்று நைட்ரஜன் தெரு சலம் என்ற வேதாசலம் ஆரம்பித்தான்.

அவன் கூறிய விவரங்கள் கிட்டத்தட்ட சரோஜாவைப் பார்க்க வந்தவர்கள் விஷயத்தில் நடந்தவை போன்றே இருந்தன. அவன் மேலும் சொன்னான்.

"தாயாரும் பிள்ளையும் பேசிக் கொண்டது என் காதில் விழுந்தது. 'பெண் நல்ல உயரம், சற்றுக் கறுப்பாக இருக்கும்' என்றுகூடப்

# கல்யாண சீஸன் ~
விசேஷ விற்பனை!

# காஞ்சீபுரம் · பனாரஸ்
# கத்தான்



**பின்னி** சாப்ட்-ஸில்க் சேலை

ரகங்கள் சோளி பீஸ்கள்
பாவாடைத் துண்டுகள்
மற்றும் இதர ஜவுளிகள்
ஒரே விலையில்

## நல்லி சின்னசாமி செட்டி

போன்: 41115
(பனகல் பார்க்)
தியாகராயநகர் · சென்னை-17

---

# கால்கேட் டூத் பிரஷ்

மேலும் துப்புரவாக உங்கள்
பற்களை சுத்தம் செய்யும்படி
அமைக்கப்பட்டிருக்கிறது!

ஹார்ட் • மீடியம் • ஸாப்ட்




புதியது
மிகவும்
கவர்ச்சியானது!!
கால்கேட்
சூபர் டீலக்ஸ்
டூத் பிரஷ்



வாய் துர்நாற்றத்தை அகற்ற கால்கேட் காட்டும் வழி



# மருந்தடித்த சில விநாடிகளில் மாண்டது இந்தக் கொசு

உள்ளபடி உல்லாச வாழ்வு வாழ்ந்தது இந்தக் கொசு... சிறியோர், பெரியோர் எவரையும் விடாமல் கடித்து இரத்தம் உறிஞ்சி சுகித்து வந்தது. இதே போக்கில் பறந்த வண்ணமாக ஓரிரவு ஃப்ளிட் தெளித்திருந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தது. அவ்வளவுதான். நொடிப் பொழுதில் உணர்வற்று விழுந்தது ஒரு சில விநாடிகளில் உயிரிழந்தது.




சிவப்பு டப்பாவில் வரும் ஃப்ளிட் கொசுக்களையும், ஈக்களையும், இதர பறக்கும் பூச்சிகளையும் கொல்கிறது. சக்தி மிகுந்த ஐந்து மருந்துகளின் ரசாயனச் சேர்க்கையான ஃப்ளிட் இரு வகைகளில் தாக்குகிறது: அப் பூச்சிகளை உடனடியாக வீழ்த்துகிறது; அதன் பின் அதிவிரைவில் சாகடித்துவிடுகிறது. பறக்கும் பூச்சியினங்களுக்காகவென்றே விசேஷமாகத் தயாரிக்கப்பட்டு சிவப்பு டப்பாவில் வரும் ஃப்ளிட் மிகக் கொடிய கொல்லி மருந்து.

## ஃப்ளிட் தெளித்து உங்கள் வீட்டைப் பாதுகாப்பீர்

சிவப்பு டப்பாவில் வரும் ஃப்ளிட் கொசுக்கள், ஈக்கள், பிறவகைப் பறக்கும் பூச்சிகள் யாவினையும் கொல்கிறது. அடக்கமான அழகுருத் தூவல் பெட்டியில் வரும் ஃப்ளிட் பவுடர் மூட்டைப் பூச்சி, கரப்பான், இதர ஊரும் பூச்சிகள் அனைத்தையும் கொல்கிறது.




எஸ்ஸோ ஸ்டாண்டர்ட் ஈஸ்டர்ன், இன்கார்ப்பொரேட்

போட்டிருந்ததே. நீ ஆறடி உயரம். உனக்கேற்ற உயரமாக இருக்க வேண்டுமென்றுதானே பெண்களைச் சல்லடை போட்டுச் சலித்துக் கொண்டிருக்கிறேன். தவிர உனக்கும் கறுப்புக்கும் ராசி என்று நம்ப ஜோசியர் சொன்னார். ஆனால் இந்தப் பெண் உயரமே இல்லை. சிவப்பாயிருக்கிறதே. விளம்பரத்தில் பொய்யாக எழுதிப் போட்டு நம்மை ஏமாற்றி விட்டார்களடா!' என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். நாம் இரண்டு பேரும் செய்திருந்த 'வரன் தேவை' விளம்பரங்களைப் பார்த்துவிட்டுத்தான் அவர்கள் வந்திருக்கிறார்கள். சலம், ராமன், ட்ரஜன் என்ற பெயர்கள், என்ஜினியர், உதவிக் காரியதரிசி உத்தியோகங்கள், ஒரே விதமான வீடு எல்லாம் சேர்ந்து இந்த வேடிக்கையான நிலைமையை உண்டு பண்ணிவிட்டன. நாம் அவர்களிடம் உண்மையைச் சொல்லிவிடலாம். உன் வீட்டில் இருப்பவர்களை நான் காலையில் வந்து என் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்துவிடுகிறேன். என் வீட்டிலிருப்பவர்களை நீ வந்து அழைத்துக்கொண்டு போ'' என்றான் வேதாசலம்.

''அப்படிச் செய்யக்கூடாது. நாம் ஏமாற்றி விட்டோம் என்று அவர்கள் சொன்னார்களல்லவா? நிஜமாகவே அவர்களை ஏமாற்ற வேண்டும்'' என்று வேங்கடாசலம் கூறினான்.

பிறகு அவன் ஒரு யோசனை சொன்னான். அதன்படி அவர்கள் இருவரும் செய்தார்கள்.

மறுநாள் காலை. ஆறு மணி இருக்கும். படுக்கையினின்று எழுந்திருந்து ஜன்னல் வழியாகத் தோட்டம் பக்கம் பார்த்துக்கொண்டிருந்த ராமன் என்கிற சுந்தரராமன் ''அம்மா, அம்மா!'' என்றான். அவள் எழுந்திருந்து வந்ததும், ''அதோ ரோஜாப்பூ பறித்துக் கொண்டிருக்கிறதே, அந்தப் பெண்ணைப் பார். நேற்று அந்தப் பெண் கட்டிக் கொண்டிருந்த நீலக்கலிப் பௌடர் வர்ணப் புடவையைக் கட்டிக் கொண்டிருக்கிறது'' என்றான்.

''சிவப்பா இருக்கு. புசுபுசுவென்று நல்ல களையோடிருக்கு. பொம்மை மாதிரி இருக்கு. உனக்கேற்ற பெண். பத்திரிகையில் விளம்பரத்தைப் படித்தபோது பெண் இதுமாதிரி தான் இருக்குமென்று நினைத்தேன். ஆனால் இந்தப் பெண்ணுக்கு அக்காளையோ யாரையோ, கறுப்பா, உயரமாக ஒரு பெண்ணைக் காண்பித்து ஏமாற்றி விட்டனர்.

''யார் மாமி உங்களை ஏமாற்றியது? பெரிய வார்த்தையாகச் சொல்கிறீர்களே?'' என்று தோட்டத்தில் ஜன்னல் பக்கம் அப்பால் நின்றுகொண்டிருந்த வேதாசலம் சிரித்த வண்ணம் கேட்டபடி வந்தான். பின்னால் அவன் மனைவி ஊர்மிளாவும் வந்தாள்.

ஏற்கனவே ஜலஜாவைப் பார்த்துத் திகைத்துப்போயிருந்த தாயும் மகனும், இந்த இருவரையும் அந்த வீட்டில் கண்டு மேலும் திகைத்துப்போய் நின்றார்கள்.

''ஏண்டா! எல்லோரும் புதிதாயிருக்கிறார்களே! நேற்று இந்த வீட்டுக்கா வந்தோம்?'' என்றாள் பட்டம்மாள் ஆச்சர்யத்தோடு.

''இதே வீடுதான் அம்மா. உன் படுக்கை பெட்டி எல்லாம் இதோ இருக்கின்றனவே!'' என்றான் சுந்தரராமன்.












அப்போது அறைக்குள் ஊர்மிளாவும் வேதாசலமும் வந்துவிட்டார்கள். "நீங்கள் திண்டிவனத்திலிருந்து டாக்ஸியில் இங்கே வந்துதானே இறங்கினீர்கள். மறந்துபோய் விட்டீர்களா?" என்றாள் ஊர்மிளா.

"இராத்திரி வந்த அசதியில் எல்லாம் உங்களுக்கு ஒன்றும் புரியவில்லை" என்றான் வேதாசலம்.

"ஊருக்குப் போய் ஜலஜாவைப் பற்றிய முடிவை எக்ஸ்பிரஸ் தந்தியில் தெரிவிக்கிறேனென்று சொன்னீர்களே!" என்றாள் ஊர்மிளா.

"அப்படிச் சொல்லியிருக்க மாட்டேனே. பக்கத்தில் யாராவது சாஸ்திரி இருந்தால் வரச் சொல்லுங்கள். முகூர்த்தத் தேதி வைத்துவிடலாம்" என்று பட்டம்மாள் கூறிவிட்டுப் பிள்ளை நின்றிருந்த பக்கம் திரும்பிப் பார்த்தாள். காணோம். "சுந்தரராமன்! எங்கேயடா போய்விட்டாய்?" என்றாள்.

"ஜலஜாவுடன் பேசிக் கொண்டிருக்கிறேன். வந்துவிட்டேன், அம்மா!" என்று பிள்ளை நிதானமாகக் கூறினான்.

வேதாசலம், அவன் மனைவி ஊர்மிளா, அவன் தங்கை ஜலஜா ஆகிய மூவரும் வேங்கடாசலத்தின் வீட்டுக்கு இரவுக்கிரவே வந்துவிட்டது போன்று சரோஜா, அவள் அண்ணன், மன்னி மூவரும் வேதாசலத்தின் வீட்டுக்குச் சென்றிருந்தார்கள். அங்கேயும் காலையில் கிட்டத் தட்ட இது போன்ற நாடகம் நடந்துகொண்டிருந்தது.

"நான் உன்னுடன் பேசுவதற்குக் குனிய வேண்டியதில்லை சரோஜா!" என்று சீதாராமன் அவளிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

நெய்வேலி, நெய்வேலி என்ற பழுப்பு நிலக்கரியூர்க் கதை இத்துடன் முடிந்து போயிற்று. மறுபடியும் நான் தங்களை எப்போது சந்திப்பேன் என்று நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை. ஆகையால் அடுத்த கதையை ஆரம்பித்து வைக்கிறேன்:

"ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு சினிமாப் படப் பிடிப்பாளர் இருந்தார். அவர் டைரக்டர் கூட. பிரபல சினிமா நட்சத்திரங்களுக்குச் சில லட்சக் கணக்கில் பணம் கொடுத்து அவருக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போலிருந்தது. தான் கொடுக்கும் பணத்துக்கேற்ப நன்றாக நடிப்பதில்லை, அந்தப் பணம் வாங்கிக் கொண்டதற்கு முழுப் பணத்திற்கும் சரியான ரசீதுகூடக் கொடுப்பதில்லை என்ற குறை அவருக்கு. ஆகையால் குறைந்த செலவில் புதிய நட்சத்திரங்களைப் போட்டுப் படம் பிடிக்கத் தீர்மானித்தார்.

அதற்காக 'சினிமா ஒரு கலை' என்று பிரசாரம் செய்தார். "சினிமாப் படம் பிடித்துப் பணம் சம்பாதிக்க நான் விரும்பவில்லை. கலை, கலை, கலை இதுதான் என் பேச்சு, மூச்சு எல்லாம். ஆகவே, நான் படித்தவர்களை முக்கியமாக இளம் பெண்களை, அதுவும் குடும்பத்தைச் சேர்ந்தவர்களை நட்சத்திரங்களாக நடிக்கச் செய்யப் போகிறேன்" என்றார் அவர்.

'குடும்பப் பெண்களை' நட்சத்திரமாக்கும் மகத்தான அரிய சேவையில் ஈடுபடலானார்.

ஒரு நாள் அவர் ஒரு படத்தை டைரக்ட் செய்து கொண்டிருந்தபோது படம் பிடிப்பதை வேடிக்கை பார்ப்பதற்காக வீரபாலா என்ற ஒரு பி. ஏ. பட்டதாரிப் பெண் வந்திருந்தாள். அவளைக் கவனித்த ஜோதிமணி பக்கத்திலிருந்த காமிராமெனிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார். வீரபாலா படப் பிடிப்பை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்து விட்டுப் போய்விட்டாள்.

இதற்குப் பிறகு இரண்டு மாதங்களாகி விட்டன. ஒரு நாள் வீரபாலா ஒரு சினிமாக் கொட்டகையில் ஒரு புதுப் படத்தைப் பார்த்துக்கொண்டிருந்தபோது அவள் பக்கத்திலிருந்த சிநேகிதிகள், "வீரபாலா! நீ எப்போது இதில் நடித்தாய்? சொல்லவேயில்லையே. ரொம்ப நன்றாக நின்றுகொண்டிருக்கிறாயே!" என்று கூறினார்கள்.

உண்மையில் வீரபாலா படத்தில் காணப்பட்டாள். அவள் முன்னொரு சமயம் ஜோதிமணி படம் பிடித்துக் கொண்டிருந்தபோது வேடிக்கை பார்க்க வந்திருந்தாளல்லவா? அப்போது ஜோதிமணி விரும்பியபடி காமிராமென் அவளையும் காமிராவுக்குள் பிடித்துப் போட்டு வைத்திருந்தார்.

வீரபாலாவின் அண்ணன் மஹேந்திரன் இதைப் பற்றி ஜோதிமணியிடம் விசாரித்தான். அவர், "தவறிப் போய்விட்டது. காமிராவை இயங்கச் செய்யும் சமயத்தில் அவள் அதன் முன் தன்னையறியாமல் வந்துவிட்டாள். அதனால் பாதகமில்லை. அவளுக்கு சினிமாப் பட முகம் இருக்கிறது. அவளைப் படத்தில் நடிக்கச் செய்துவிடலாம்" என்று கூறினார்.

வீரபாலாவுக்குக் கல்யாணம் செய்ய வரன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வீரபாலாவின் தந்தை, "கல்யாணத்துக்கென்ன அவசரம், சாவகாசமாகச் செய்துகொண்டால் போச்சு. எத்தனையோ வரன்கள் கிடைக்கும். ஆனால் பணம் கிடைக்காது. சேர்ந்தாற்போல் ஒரு முப்பது நாற்பதாயிரம் ரூபாய் கிடைப்பதை விடவேண்டாம். அதைச் சம்பாதித்தால் எதிர் ஜாமீன் கொடுப்பதற்கு உதவுமே?" என்று பிள்ளையினிடம் சொன்னார். வீரபாலாவுக்கும் படத்தில் நடிக்க ஆசையாயிருந்தது. அவள் படத்தில் நடிக்க ஒப்பந்தமாயிற்று.

ஒன்று சொல்ல மறந்துவிட்டேனே. அந்த ஜோதிமணி ஒரு பிரம்மச்சாரி. ஒருத்தியைக் கல்யாணம் செய்துகொண்டு அவளோடு மட்டும் உயிர் போகும்வரையில் வாழ்க்கை நடத்துவது 'போர்' அடிப்பதாகும் என்ற முடிவுக்கு வந்தவர். அதற்கேற்பத் தமது வாழ்க்கையை வகுத்துக் கொண்டார்..."

தபாலில் போட நேரமாகி விட்டதால் கதையை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். மறுபடியும் சந்திக்கும்போது நான் இந்தக் கதையைப் பூர்த்தி செய்து சொல்ல மாட்டேன்.

தாங்கள்தான் சொல்ல வேண்டும்.

தங்கள்
மா...ங்கி



# உலகத்துக்கு ஒரு மொழி

ஆங்கிலம் மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாகத் தொடர்ந்து இருந்துவர வேண்டும் என்று சொன்னால், "ஐயோ, இங்கிலீஷ் என்ற உடனேயே நம்மை அடக்கியாண்ட நாட்டினரின் பாஷை என்று நினைவு வருகிறதே. அதை எப்படி ஏற்றுக் கொள்வது? மனசுக்குக் கஷ்டமாக இருக்கிறதே!" என்று சொல்கிறார்கள் சிலர்.

அதற்குக் காலஞ்சென்ற நீதிபதி ஏ.எஸ்.பி. அய்யர் நறுக்குத் தெறித்தாற்போல் பதில் சொன்னார்: "இங்கிலீஷ் என்று சொல்லப் பிடிக்க வில்லையா? அப்படியானால் 'அமெரிக்கன்' என்று சொல்லிக் கொள்ளுங்களேன்!"

அமெரிக்கா நம்மை அடக்கியாளவில்லை. அதற்கு மாறாக நம் சுதந்திர உணர்ச்சிக்கு அனுதாபம் காட்டி உதவி வந்தது. சுதந்திரம் அடைந்த பிறகும் எத்தனையோ வகைகளில் உதவி வருகிறது. ஆதலால் நமது ஆட்சி மொழி 'அமெரிக்கன்' என்று சொல்லிக் கொள்வதில் வெட்கப்படுவதற்கில்லைதான்.

ஆனால் இன்று இந்த ஆங்கிலம், பிரிட்டிஷ் மக்களின் மொழியாகவோ அமெரிக்க மக்களின் மொழியாகவோ மட்டுமில்லை. ஆஸ்திரேலிய மக்களின் மொழி, நியூஸிலந்து நாட்டு மக்களின்மொழி என்று உலகின் கீழ்க் கோடியிலிருந்து மேல் கோடி வரை பரவிப் படர்ந்து உலக மொழியாக விளங்குகிறது.

அது மட்டுமல்ல, உலகில் ஜெர்மன், பிரஞ்சு, ஸ்பானிஷ் முதலிய பல்வேறு மொழிகளைப் பேசும் பல நாடுகள் அரசாங்க மொழியாகவும், வர்த்தக மொழியாகவும் ஆங்கிலத்தை ஏற்றுக் கொண்டுள்ளன. இந்த விவரத்தைச் சமீபத்தில் அமெரிக்காவிலிருந்து வெளியாகும் அகில உலக வர்த்தகத் துறைப் பத்திரிகை ஒன்று உலக நாடுகளில் பரிசீலனை செய்து ஓர் அரிய கட்டுரையாக வெளியிட்டிருக்கிறது.

ஜப்பான், ஸ்வீடன், வெனிஸுலா (தென் அமெரிக்கா) ஆகிய மூன்று தேச வர்த்தகப் பிரதிநிதிகள் காகிதப் பொருட்கள் வியாபார சம்பந்தமாக காரகாஸ் என்ற ஊரில் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பரஸ்பரம் பேசிக்கொண்ட மொழி ஆங்கிலம்.

கிழக்கு ஜெர்மனியில் ருஷ்ய அதிகாரிகளுடன் இரண்டு பிரேஸில் தேசப் பிரதிநிதிகள், காப்பி, மிஷின் சாமான்கள் வர்த்தக சம்பந்தமாகப் பேசிக் கொண்டார்கள் — அவர்கள் பேசிக்கொண்ட மொழியும் ஆங்கிலம்தான்.

எகிப்தின் தலைநகரான கெய்ரோவில், ஆப்பிரிக்க நாடுகளின் உத்தியோகஸ்தர்களும் மத்திய கேந்திர நாடுகளின் பிரதிநிதிகளும் வர்த்தக ஒப்பந்தங்கள் செய்து கொண்டார்கள் — அந்த அரசாங்கங்களின் மொழி ஆங்கிலம்தான்!

ஆங்கிலம் பேசப்படாத தேசங்களைப் பரிசீலனை செய்த போது, உள்நாட்டு மொழிகள் வெவ்வேறாக இருப்பினும் வெளிநாட்டுத் தொடர்புக்கு ஆங்கிலத்தையே அந்தந்த நாடுகளும் கையாண்டு வருகின்றன என்பது தெரிய வந்தது. இது ஏதோ ஆங்கிலம் கற்பது சுலபம் என்ற காரணத்தாலோ, அதன் இலக்கணம் அழகு வாய்ந்தது என்பதாலோ அல்ல. பொருளாதார ரீதியில் மிக மிக லாபகரமாக இருப்பதால்தான் உலக நாடுகள் ஆங்கிலத்தை மேற்கொண்டுள்ளன.

உலக வியாபாரம் ஸ்டர்லிங், டாலர் என்ற பிரிட்டிஷ் அமெரிக்கச் செலாவணியில் இயங்குகிறது. பொதுவாக நோக்குமிடத்து உலக வியாபாரத்தில் — வாங்குவது, விற்பது, முதலீடு செய்வது — ஆகியவை செய்யும் பெருங்குழு பிரிட்டிஷ், அமெரிக்க கம்பெனிகள்தாம். உலகில் உற்பத்தியாகும் பொருட்களில் பாதிக்கு மேல், ஆங்கிலத்தைப் பிரதேச மொழியாகவும் அரசாங்க மொழியாகவும் கொண்ட நாடுகளில்தான் உற்பத்தியாகின்றன.

உலகில் உள்ள சில முக்கியமான தொழில்கள் ஆங்கிலம் பேசும் நாடுகளின் உரிமையாக இருப்பதால், அவ்வியாபாரம் நடக்கும் நாடுகளில் ஆங்கிலம் எளிதாகப் பரவியிருக்கிறது. முக்கியமாக, பெட்ரோல் கப்பல் கட்டுதல், கணிதப் பொறிகள், ஆகாய விமான யந்திரங்கள் செய்தல் ஆகிய தொழில்கள் உலகில் ஆங்கிலம் பேசும் மக்களின் செல்வாக்கில் இருந்து வருகின்றன. ஏன், பெட்ரோல் கம்பெனிகளில் முக்கியமான கம்பெனியான "ஷெல்" டச்சுக்காரர்களுக்குச் சொந்தம் என்று பெயர். இருந்தாலும் அவர்கள் வியாபாரம் செய்வது முழுதும் ஆங்கிலத்தின் மூலம்தான்!

லிபியா நாட்டில் பெட்ரோல் எண்ணெய் கண்டு பிடிக்கப்பட்டது. அவர்களும் ஆங்கில மொழியைத்தான் கையாள வேண்டியதாகி விட்டது. மத்திய தரைப் பிரதேசத்தை ஒட்டியுள்ள நாடுகளில் எல்லாம் பிரெஞ்சு தான் முக்கிய ஆட்சி மொழியாக இருந்து வந்தது. ஆனால் அங்கெல்லாம் எண்ணெய்க் கிணறுகள் கண்டு பிடிக்கப்பட்டு, பிரிட்டிஷ் அமெரிக்கக் கம்பெனிகள் தோன்றிய பிறகு பிரெஞ்சு ஒதுங்கி ஆங்கிலமே முக்கிய விவகார மொழியாகி விட்டது.

கப்பல் கட்டும் தொழிலில் பிரிட்டிஷார் தான் முன்னோடிகள். அவர்களுக்கு ஒரு நீண்ட பாரம்பரியமே உண்டு. இன்றும் நார்வே நாட்டில், கப்பற்படைச் சாமான் கணக்குகள் ஆங்கிலத்தில் வைக்கப்படுகின்றன. இந்தோனேசியக் கப்பற்படையில் உத்தரவுகள் ஆங்கிலத்தில்தான் சொல்லப்படுகின்றன. ஏனெனில், ஆங்கிலச் சொற்களுக்குச் சமமான உத்தரவுச் சொற்கள் இந்தோனேசிய மொழியில் இல்லையாம்.

அடுத்தது உணவுப் பண்டங்கள். உலக நாடுகளுக்கு வேண்டிய கோதுமையும், அரிசியும், பால் பண்டங்களும் ஏற்றுமதி செய்யும் அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா — ஆகிய மூன்று நாடும் ஆங்கிலம் பேசும் நாடுகள்! ஆங்கிலம் பரவக் கேட்பானேன்?

உலக நாடுகளின் விமான தளங்களில் விமான ஓட்டிகளிடையேயும் விமானக் கம்பெனிகளிடையேயும் வழங்கும் மொழி தன்னாட்டு மொழியுடன் ஆங்கிலம்!

ஸ்விடன், நார்வே, டேனிஷ் நாட்டினர் சேர்ந்து நடத்தும் ஸ்காண்டிநேவியன் ஏர்லைனில் ஆங்கிலத்தையே அலுவலக மொழியாகப் பயன்படுத்தி வருகிறார்கள். பிரெஞ்சு, இங்கிலீஷ், ஜெர்மன் மூன்று மொழிகளும் அலுவலக மொழியாக வழங்கும் பாரிஸ் நகர விமான நிலையத்தில் பொறிஇயல் வார்த்தைகள் யாவும் ஆங்கிலமாகவே இருப்பதால், விவாதங்களும் பேச்சுக்களும் ஆங்கிலத்திலேயே நடத்தி விடுகிறார்கள் என்கிறார் அங்கிருக்கும் விமான நிலைய அதிகாரி.

இன்று பொறி இயல் கலை பெரிதும் வளர்ந்திருக்கிறது. இன்றைய விஞ்ஞான, பொறி இயல் வளர்ச்சியில் ஒருவர் பரிச்சயம் பெற்றிருக்க வேண்டுமெனில் பிரெஞ்சு, ஜெர்மன், இங்கிலீஷ், ருஷ்யன் ஆகிய நான்கு மொழிகளும் தெரிந்திருக்க வேண்டியதுதான். ஆனால் மொத்த ஆராய்ச்சி நூல்களில் எழுபது சதவிகித விஷயங்கள் முதன் முறையாக ஆங்கிலத்தில் வந்து விடுகின்றன!

இந்தோனேசியா, டச்சு ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட போது, டச்சு மொழியையும் தூக்கி எறிந்தது. ஆனால் விஞ்ஞானப் பொறி இயல் வளர்ச்சியைக் கருதி ஆங்கிலத்தைச் சுவீகரித்துக் கொண்டது.

நைஜீரியாவில் ஐந்து கோடி மக்கள் இருக்கிறார்கள். இவர்கள் ஒருவரையொருவர் பகைக்கும் மூன்று இனங்களாகப் பிரிந்திருக்கிறார்கள். வழக்கிலுள்ள மொழிகளோ 150. இந்நிலையில் பிரிட்டிஷார் அவர்களை விட்டுப் பிரிந்த போது, அவர்கள் விடுத்துச் சென்ற ஆங்கிலம் ஒன்றுதான் அவர்களை இப்போது ஒன்றுபடுத்தி வைக்கிறது!

இத்தாலி நாட்டில் தாய்மொழிக்கு அடுத்தாற்போல் பள்ளிகளில் ஆங்கிலம் கற்றுக் கொடுக்கத் தொடங்கியிருக்கிறார்கள். இதுகாறும் பிரெஞ்சு அந்த ஸ்தானத்தை வகித்து வந்தது. இத்தாலியிலுள்ள வயது வந்த வர்த்தகத் துறையினர் பிரெஞ்சு மொழியை உபயோகித்து வருகின்றனர். ஆனால் இளவட்டங்கள் ஆங்கிலத்தில் அலுவல்களை நடத்தி வருகின்றனர். டென்மார்க் தேசத்தில் பத்து ஆண்டுகளுக்கு முன்பு வரை டேனிஷ் மொழியிலும் பிரெஞ்சு மொழியிலும் புள்ளி விவரங்களை அச்சிட்டு வந்தார்கள். இப்போது டேனிஷ் மொழியிலும் ஆங்கிலத்திலும் பிரசுரிக்கிறார்கள். இங்கிலீஷ், கிழக்காசிய நாடுகளாகிய ஜப்பான் கொரியா, பார்மோஸா, ஹாங்காங் பிலிப்பைன் தீவுகள், மலேசியா இந்தியா, பாகிஸ்தான், இலங்கை ஆகிய நாடுகளில் கணிசமான அளவு பிரபலமாகி விட்டது. பர்மா, தாய்லாந்து, தென்வியட்நாம் ஆகிய நாடுகளிலும் பரவி வருகிறது. ஐரோப்பிய நாடுகளில் 300 பெரிய கம்பெனிகளில் ஆராய்ச்சி நடத்தியதில் தொண்ணூறு சதவிகிதக் கம்பெனிகள் உலக நாடுகளுடன் வியாபாரத் தொடர்பு கொள்ள ஆங்கிலத்தையே பயன்படுத்தி வந்திருக்கின்றன! அர்ஜென்டினா என்ற தென் அமெரிக்க நாட்டு மொழி ஸ்பானிஷ் ஆகும். ஆயினும் வர்த்தக ஒப்பந்தங்கள் யாவும் ஸ்பானிஷ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் எழுதப்பட்டுக் கையொப்பம் இடப்பட வேண்டும். ஆனால் இந்த ஒப்பந்தம் சம்பந்தமாக விவகாரம் எழும் பட்சத்தில் ஆங்கில ஒப்பந்த விதிகளே சரியானவை; இரு கட்சிகளையும் கட்டுப்படுத்தும்.

ஐ. நா. சபை, உலகப் பொதுச் சபை. அது ஆங்கிலம், பிரெஞ்சு, ஸ்பானிஷ், ருஷ்யன் ஆகிய நான்கையுமே தன் அலுவலக மொழியாக ஏற்றுக் கொண்டுள்ளது. வியன்னாவில், அதன் 'அகில உலக அணுசக்தி ஏஜென்ஸி' என்னும் குழு கூடியபோது, அதன் அலுவலக உத்தியோகஸ்தர்கள் சுமார் ஐந்நூறு பேர் உலகின் பல பகுதிகளைச் சேர்ந்தவர்கள் கூடினார்கள். அவர்கள் வேலை செய்தது ஆங்கிலத்தில்தான்!

யூகோஸ்லேவியாவின் வெளிநாட்டு அலுவலகம், பத்திரிகையாளருக்குப் பேட்டியளிக்கும் போது, ஒவ்வொரு கேள்விக்கும் பதில் யூகோஸ்லேவிய மொழியில் தருவதுடன் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துத் தருகிறது. வேறு எந்த மொழியிலும் தருவதில்லை.

இப்படி உலக நாடுகளில் ஆங்கிலம் பரவி வரும் வேகத்தைப் பார்க்கும் போது, நம் நாட்டில் ஆங்கிலத்தைத் தூக்கி எறியும் முயற்சி நடைபெற்று வருவதைப் பார்க்க யாருக்குமே மனம் வேதனையுறத்தான் செய்யும். வடநாடு ஆங்கிலத்தை எறிந்தால், உலகில் முன்னணியிலுள்ள நாடுகள் எல்லாம் ஆங்கிலத்தை விரும்பி ஏற்றிருக்கின்றன என்பதை உணர்ந்து, நம் முன்னேற்றத்தைக் கருதி நாம் ஆங்கிலத்தைப் போற்றி வருவோமாக.

— எல். வி. எஸ்.

# வஞ்சம் ஒழிந்தது

தாமரை மணாளன்



'ஆர். ஐ.' அய்யாசாமியும், தலையூர்த் தணிகாசலமும்தான் நம் கதைக்கு நாயகர்கள். ஒரு கதையில் இரண்டு நாயகர்கள் வந்தால் ஒருவர் கதாநாயகனாகவும் மற்றவர் வில்லனாகவும் இருக்க வேண்டுமென்பது கதை உலக சம்பிரதாயம். ஆனால் நம்மவர்களைப் பொறுத்த அளவில் கதாநாயகன் யார், வில்லன் யார் என்று என்னால் நிர்ணயிக்க முடியவில்லை. வேண்டுமென்றால் நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். வேண்டாமென்றால் சனியன்கள் எப்படியும் தொலைகிறார்கள் என்று விட்டு விடுங்கள்.

அய்யாசாமியின் முன் இருக்கும் 'ஆர்.ஐ.' என்பது அவருடைய உத்தியோகத்தின் கௌரவச் சுருக்கம். அதாவது ரெவின்யூ இன்ஸ்பெக்டர். கொஞ்சம் கௌரவமாகச் சொல்லப் போனால் அவர் உத்தியோகம் செய்யும் பிராந்தியத்தைப் பொறுத்த அளவில் மாட்சிமை தங்கிய சர்க்காரின் ஆட்சிக்கு அவர்தான் சக்தி வாய்ந்த பிரதிநிதி.

இந்த உத்தியோகஸ்தர்கள்தான் அரசாங்க இயந்திரத்தின் 'முதுகெலும்பு' போன்றவர்கள் என்பது ஒரு தத்துவம். ஆனால் 'முதுகெலும்பே இல்லாதவர்கள்'தான் இந்த உத்தியோகத்தில் சோபிக்க முடியும் என்பது நடைமுறை.

நம் அய்யாசாமியின் குணசித்திரம் ஒரு சிக்கலான பிரச்னை. விவகாரச் சூன்யம் என்பதற்கு !அவரை விடச் சிறந்த உதாரணத்தைக் கண்டுபிடிப்பது சிரமம். அவருடைய உத்தியோகத்துக்கும் சரி, வாழ்க்கைக்கும் சரி, அறவே வேண்டப்படாத 'முதுகெலும்பு' தன்னிடம் மிக உறுதியாக இருப்பதாக ஓர் அசட்டு எண்ணம்; அதனால் ஏற்பட்ட 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' என்ற இறுமாப்பு; இவற்றின் கலவைதான் அய்யாசாமி என்ற பிரகிருதி. நமனை அஞ்சாமல் இருக்கலாம். அதற்காக இந்த உலகத்துக்கு அஞ்சாமல் இருக்கமுடியுமா?

அய்யாசாமியின் ஜாதகத்தைப் பார்த்த ஜோசியன் ஒருவன் அவருக்குச் சரியாக இருபது வயதில் ஒரு பெரிய கண்டம் இருப்பதாகவும் அதிலிருந்து தப்புவது கஷ்டம் என்றும் அடித்துச் சொன்னான். ஜோசியன் வாக்கும் பலித்தது. அய்யாசாமியும் தப்பவில்லை. சரியாக இருபதாவது வயதில்தான் அவர் அரசாங்க உத்தியோகத்தில் சேர்ந்தார்!

அவருக்கு இருந்ததைப் போல் சாந்தா என்ற பெண்ணுக்கும் ஒரு பயங்கரக் கண்டம் இருந்திருக்க வேண்டும். அதனால்தான் அவள், இந்த உலகத்தில் வேறு மாப்பிள்ளையே கிடைக்காமல், நம் அய்யாசாமிக்கு வந்து வாழ்க்கைப்பட்டாள்.

அய்யாசாமி உத்தியோகத்தையும் தாம்பத்தியத்தையும் ஒரே காலத்தில் ஆரம்பித்தார். கொஞ்ச காலம் வரையில் உத்தியோகம் எப்படியிருந்தாலும், தாம்பத்தியம் 'தங்கமாக' நடந்தது. அதாவது சாந்தாவின் கழுத்தில், கையில் கிடந்த தங்கமெல்லாம் பணமாக மாறி, சௌக்கியமாக அவர்கள் குடித்தனம் நடந்தது.

இந்தத் தங்க மாற்றுக்கெல்லாம் காரணம் அய்யாசாமியைச் சுற்றியிருந்த பெரியவர்கள் செய்த தவறு. புதிதாக வாழ்க்கையைத் தொடங்கும் மனிதனிடம்






அனுபவஸ்தர்கள் எதைப் பற்றிச் சொன்னாலும் சொல்லாவிட்டாலும், வாய்மையை முரட்டுத்தனமாகக் கடைப்பிடித்து அரிச்சந்திரன் பட்ட அவஸ்தையைப் பற்றி அவசியம் சொல்லியிருக்க வேண்டும். ஒருவரும் சொல்லவில்லை. அதனால் அய்யாசாமி, திருவள்ளுவர் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் சொன்ன 'கட்டுப்பெட்டி' சங்கதிகளையெல்லாம் இந்த இருபதாம் நூற்றாண்டில் கடைப்பிடிப்பது என்ற வைராக்கிய சித்தனையில் இருந்தார். 'வாய்மை எனப்படுவது யாதெனில்...' என்று மனப்பாடம் செய்துகொண்டு கையைக் காலை ஆட்டி அழகாகப் பிரசங்கம் செய்யலாம்; ரசமாக இருக்கும். அதை மனத்தில் வைத்துக் கொண்டு வாழ்க்கையில் புகுந்தால் ஒருவன் என்ன ஆவான்?

ஒரு நாள் 'மரம் வெட்டு' வழக்கு ஒன்றின் விசாரணை அய்யாசாமியின் தலையில் விழுந்தது. அதாவது சர்க்காருக்குச் சொந்தமான புறம்போக்கு நிலத்தில் வளர்ந்திருந்த மரங்களைக் கிராமவாசி ஒருவர் வெட்டிவிட்டதாகப் புகார் வந்தது. ரெவின்யூ இன்ஸ்பெக்டர் அய்யாசாமி உடனே விசாரணை நடத்தப் புறப்பட்டார்.

பொதுவாக இப்படி ஒரு விசாரணை என்றால், இன்ஸ்பெக்டர், கிராம முன்சிப் வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு குற்றம் சாட்டப்பட்டவரை அழைத்து வரச் சொல்வார். கி. மு.வோ அந்த ஆசாமி தமக்கு வேண்டாதவராக இருந்தால், தலையாரியை விட்டு இழுத்துப் பிடித்துக் கொண்டு வந்து நிறுத்தச் செய்வார். தமக்கு வேண்டியவர் என்றால் கி. மு. அஷ்டாவதானம் நடத்துவார். வந்த அதிகாரிக்குச் 'சோடா'வுபசாரம் நடத்தி, சாவடியில் உட்கார வைத்து விட்டு, ஒரு பக்கம் வெட்டியான் மூலம் ஆசாமியைத் தலைமறைவாகப் போகும்படி செய்தி அனுப்பிவிட்டு, பின்னால் தலையாரியிடம், "அவன் எங்கே இருந்தாலும் பிடித்துக்கொண்டு வா" என்று பாவ்லாக் கத்தல் போடுவார். தலையாரி ஊர்க் கோடியிலிருக்கும் ஆலமரத்து நிழலில் உட்கார்ந்து அரை மணி நேரம் சீட்டாடி விட்டுத் திரும்பி வந்து, "அவர் காலங்காத்தாலே பட்டணத்துக்கோ பம்பாய்க்கோ போயிட்டாராம்" என்று சேதி சொல்வான். "போயிட்டாரு, பயல்! சரி, அப்போ சார், நானே விவரமா விசாரிச்சு உங்களுக்கு ரிப்போர்ட் கொடுக்கிறேன்" என்று கி. மு. வாக்குறுதி வழங்குவார். அதை 'ரிக்கார்ட்' செய்து கொண்டு இன்ஸ்பெக்டர் திரும்புவார். இதுதான், சாராயக் கேஸ் முதல் கொலைக் கேஸ்வரை நடக்கும் மாமூல் ஸ்தல விசாரணை.

ஆனால் அய்யாசாமி ஊருக்குள் நுழைந்ததும் முதலில் செய்தது, கி. மு.வின் ஆத்மார்த்தமான கோபத்தைச் சம்பாதித்துக் கொண்டதுதான். அவர் கி. மு. மார்க்கமாகப் போகாமல், 'தான்தோன்றித்தனமாக'ப் புகாருக்குள்ளான நபரின் வீட்டை விசாரித்துக் கொண்டுபோய் வாசலில் நின்று கொண்டு அவனை அழைத்தார்.

முதலில் கதவிடுக்கு வழியாக இரண்டு மூன்று தலைகள் எட்டிப் பார்த்தன. ஐந்து நிமிட மௌனத்துக்குப் பின் ஒரு சிறுமி வந்து, "எங்க நயினா வீட்டில் இல்லே" என்று அறிவித்தாள்.

"எப்போ வருவாரு?" என்று முரட்டுக் குரலில் கேட்டார் அய்யாசாமி.

சிறுமி பயத்துடன் உள்ளே ஓடிப் போய் விட்டாள். பின் தாய் வந்து, "அவர் ரொம்ப நாழிக்கு வரமாட்டார்" என்று புது அறிவிப்புக் கொடுத்தாள்.

"ரொம்ப நாழிக்கு வராமல் இருக்கிறதுக்குன்னு போயிருக்காரா?" என்று தாடையைச் சொறிந்தவாறே கேட்டுக்கொண்டு, "சரி, அவரு வந்ததும் பார்த்துட்டுப்



இந்த வாரச் சிறப்புச் சிறுகதை உலக நடப்பைக் கேலியும் கிண்டலும் கலந்த நடையில் எடுத்துக் காட்டுவதில் சிறந்து விளங்குகிறது. தாமரை மணாளனுக்கு இத்தகைய நடை கைவந்த கலை.

இக் கதையில் உள்ள கேலியைக் கண்டு உலகம் சீர்திருந்துமா அல்லது கேலிசெய்து காற்றில் பறக்கவிடுமா? படித்துப் பார்த்துப் பதில் சொல்லுங்கள்!

போறேன்'' என்று திண்ணையில் உட்கார்ந்து கொண்டார்.

அவ்வளவுதான்; கதவை உடைத்துக் கொள்வதைப் போல் படாரென்று திறந்து கொண்டு ஒரு முரட்டு ஆசாமி வெளியேறி வந்து, ''என்னவே, எம் புள்ளையும், பொண்சாதியும் நான் இல்லேன்னு சொன்னப் பொறவும் நின்னுக்கிட்டிருக்கிறீரே! ஒரு மருவாதிக்கோசரம் இல்லேன்னு சொல்லி விட்டால் போக வேண்டியதுதானே!'' என்று கத்தினான்.

''ஓகோ, நீர்தான் அந்த ஆளா? ஆமாம் புறம்போக்கிலே மரம் வெட்டினது நீர் தானே?'' என்று தம் விசாரணையைத் தொடங்கினார் அய்யாசாமி.

''ஆமா, அதுக்கென்ன செய்யப் போறீர்?''

''கவர்ன்மெண்ட் மூலம் நடவடிக்கை எடுப்பேன். சரியாகக் கட்டுப்படாவிட்டால், ஜெயில் வரைக்கும் போக வேண்டியிருக்கும்.'' என்று உத்தியோக மிடுக்குடன் அறிவித்தார் இன்ஸ்பெக்டர்.

உடனே மற்றவன் தன் முஷ்டியைத் தட்டிக் காட்டிக்கொண்டு, ''வேய், இந்தாப் பாரும், மரம் வெட்டறதை விட, மனுஷனை வெட்டறது எனக்குச் சுளுவு. கெவனிச்சுக்கும். ஆமாம்'' என்றான்.

அப்பொழுது அய்யாசாமி ஆச்சரியகரமான காரியம் ஒன்றைச் செய்தார். கையிலிருந்த பைல் கட்டை அருகில் வைத்து விட்டுத் தன் சொக்காயை உருட்டியவாறு, ''யோவ், என்ன நினைச்சே நீ! சூட்டும் கோட்டும் போட்டுட்டு வந்திருக்கிறதைப் பார்த்து உன்னைவிட இளைச்சவனு இருப்பேன்னு நினைச்சுக்கிட்டியா? பழைய கஞ்சியும் கட்டித் தயிரும் தின்று பட்டிக்காட்டிலே வளர்ந்தவன்யா நான்! ஏதோ முட்டாள் தனமாப் படிச்சுப்புட்டு இப்படி ஊர் ஊரா அலையறேன். சும்மா மிரட்டாமல், நான் கேக்கறதுக்கு ஒழுங்காகப் பதில் சொல்லும்'' என்று தோள் தட்டினார். அஞ்சாமையைப் பற்றி வள்ளுவர் முதல் பாரதி வரை எவ்வளவு சொல்லியிருக்கிறார்கள்!

உத்தியோகஸ்தன் என்றால் மரியாதையாக ஓர் இடத்தில் உட்கார்ந்து கொண்டு 'நைசா'கப் பேசுவான் என்ற 'மூட நம்பிக்கை'யில் இருந்த கிராமவாசி இப்படிப் பகாசுரக் கூச்சல் போடும் அய்யாசாமியைக் கண்டு கொஞ்சம் அசந்துதான் போனார். அதற்குள் ஊர் கூடிவிட்டது. கிராம மணியம் வந்து விட்டார்.

ஒரு வழியாக விசாரணை கிராமச் சாவடி முன் வந்தது. மரம் வெட்டு விவகாரத்தை விசாரணை செய்வதை விட விசாரணையை எப்படிச் சமாளிப்பது என்ற பிரச்னையில் தான் அய்யாசாமியைத் தவிர அனைவருக்கும் ஈடுபாடு.

கி. மு. விவகாரத்தைச் 'சமாதான முறை'யில் தீர்த்து வைக்க முயன்றார். ஏனென்றால் மரம் வெட்டிய பேர்வழி ஊருக்குள் முரடன். வந்திருக்கிற இன்ஸ்பெக்டர் விசாரணை முடிந்ததும் திரும்பிப் போய்விடுவார். ஆனால் அவரோ ஊருக்குள் இருந்தாக வேண்டியவர். விசாரணையின் முடிவு தனக்கு எதிராக முடிந்துவிட்டால், மரத்தை வெட்டியவனின் திருஷ்டிக்கு அவருடைய காலோ, கையோ உள்ளானால் ஆச்சரியப்படுவதற்கில்லை. எனவே, அவர், மரம் வெட்டியைத் தனியாக அழைத்து, ''இந்தாப்பா, மரம் வித்த காசில் ஏதாவது மிச்சம் இருந்தால் கொடு. அதை வைத்து இந்த முரட்டு மனிதனைச் சமாளித்து அனுப்பிவிடலாம். அப்புறம் உனக்குத் தேவையானால் கூட வேறு இரண்டு மரத்தை வெட்டி வித்துச் சரி பண்ணிக்கோ'' என்று கலந்து பேசி, அவனிடம் பணத்தை வாங்கிக்கொண்டு அய்யாசாமியிடம் சென்றார்.

அய்யாசாமிதான் 'பிழைக்கிற பிள்ளை' இல்லை என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறதே. எனவே, பணத்தைக் கண்டதும் எப்படி எகிறிக் குதித்திருப்பார் என்று தனியாகச் சொல்லவேண்டியதில்லை. ''ஓய், கி.மு. நீர் இந்த வேலையா செய்கிறீர்? மேலாவுக்கு எழுதி உம்மை என்ன செய்கிறேன், பாரும்'' என்று கத்திவிட்டுத் தம் விசாரணையைத் தோல்விகரமாக முடித்துக் கொண்டு புறப்பட்டார்.

இயேசு கிறிஸ்து சொல்லிய 'வலது கை, இடது கை' என்ற வார்த்தைகளில் அந்த ஊர்க்காரர்களுக்குக் கொஞ்சம் பரிச்சயம் இருக்க வேண்டும். எனவே, அவர்கள் வலது கையால் கொடுத்ததை அய்யாசாமி வாங்க மறுக்கவே, இடது கையால் ஒன்றைத் தயாரித்து அனுப்பினார்கள். அது வேறு ஒன்றுமில்லை. ஒரு 'மொட்டை மனு'. ஊரில் ஒருவர் பாக்கியில்லாமல் அத்தனை பேரும் இடது கையால் ஒப்பமிட்டிருந்தார்கள். ரெவின்யூ இன்ஸ்பெக்டர் விசாரணைக்கு வந்த இடத்தில் எல்லோரையும் மிரட்டி அடிக்கப் போனதாகவும், அதனால் ஜனங்கள் மத்தியில் பெரும் பீதி நிலவுவதாகவும், காருண்யம் மிக்க மேலதிகாரிகள் அந்த இன்ஸ்பெக்டரை வேறு இடத்துக்கு மாற்றி மக்களின் அச்சத்தைப் போக்க வேண்டும் என்றும் தாழ்மையுடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள் மனுதாரர்கள்.

# ஒப்பனை

பாரதநாட்டில் மலர்ந்த கலை, மனித முயற்சியின் வரலாற்றிலே மகத்தான பொன்னேடாக மிளிருகிறது. கல்லிலும் பாறையிலும் தெரிகின்றது நம் பழம்பெரும் கலையின் நினைவுமுகம். காலக் கொடுமைகளையும் பருவமோதல்களையும் கடந்துமிஞ்சி, இன்று தேசப் பொருட்காட்சிசாலைகளிலே பாதுகாக்கப்பட்டுவரும் அப் பொக்கிஷங்கள், கற்பனைச் சிறகடித்த ஆக்க எழுச்சிக்குக் கண்கூடான சான்றுகளாக நின்று, தம்மைப் பெற்ற மக்கள் சமூகத்திற்குப் பெருமைதருகின்றன.

ஒப்பனை என்றொரு சிற்பம்: (11-ம் நூற்றண்டின்) காஜுராஹோ சிற்ப மண்டலத்திலே கொலுவிருக்கும் எழில்வடிவம்.

சிற்பக் களஞ்சியங்களுக்காக மட்டுமின்றி, கைவினைத் தொழில்களுக்காகவும் புகழ்பெற்றிருந்தது பழங்கால பாரதநாடு; நெசவுக் கலை நிபுணர்களும், சாயம் தோய்த்தோரும், வார்ப்படக் கம்மாளர்களும் அப் பழங்காலத்திலே எய்தியிருந்த கலைதேர்ச்சி என்றும் வியப்புக்குரியது.

தொழில் முன்னேற்ற யுகமாகிய இந்நாள், அப் பழங்காலத் தொழில்வல்லுனர்களின் பண்பாட்டைத் தழுவும் ராயப்பூர், தற்கால எந்திர வசதிகளின் உதவியால், நேர்த்திமிக்க நெசவுகளையும் துணிவகைகளையும் உற்பத்தி செய்கின்றனர்.

கோடு போட்ட & கட்டம்போட்ட ஷர்ட்டிங்
வெண்ணிற & சாயம்தோய்த்த பாப்ளின்
ப்ரிண்டெட் லான் & வாயில்
புட்டா-வினே
ஸ்பைப்பர்ஃபைன் வேஷ்டி
கேபர்டின் – கோட்டிங்






**ராய்ப்பூர் மில்ஸ்** அஹமதாபாத்

இரண்டே வாரங்களுக்குள், அய்யாசாமியின் தலையெழுத்தை நிர்ணயிக்கும் பிரம்மாக்கள், பொதுஜனங்களுடன் சுமுகமாகப் பழகத் தெரியாத 'முசுடு' என்று அவருடைய ஜாதகத்தில் எழுதி, அவரைத் 'தண்ணீர் இல்லாத காட்டுக்கு' மாற்றிப் போடவேண்டியது என்று தீர்ப்பு வழங்கினார்கள். அதற்குப் பின்தான் பொதுமக்களின் பீதியும் நீங்கியது. இனித் தாராளமாகப் பயமில்லாமல் சர்க்கார் மரங்களை வெட்டலாம் அல்லவா?

அந்தப் பகுதி அரசாங்க ஊழியர்களின் பூகோள சாஸ்திரப்படி 'தண்ணீர் இல்லாத காடு'களில் ஒன்று தலையூர்ப் பிரதேசம். அவ்வூருக்கு அந்தப் பெருமையைக் கொடுத்துதவியவர் திரு தணிகாசலம் அவர்கள்.

'கிங் மேக்கர்' என்று சொல்வார்களே, அப்படி ஒரு ரகம் திரு தணிகாசலம். அந்த வட்டாரத்தைப் பொறுத்த அளவில் கிராமப் பஞ்சாயத்தில் நடக்கும் தோட்டி நியமனம் முதல் தொகுதியில் நிகழும் சட்ட சபை அங்கத்தினர் தேர்தல் வரை அத்தனையிலும் தணிகாசலத்தின் 'கை' இருக்கும். ''அவரைப் பகைத்துக் கொண்டு இந்த வட்டாரத்திலே ஒரு துரும்பை அசைக்க முடியுமா?'' என்பது அந்தப் பகுதி முழுவதிலும் ஒரு நிஜமான பேச்சு. அப்படி ஒரு செல்வாக்கு தணிகாசலத்துக்கு.

'செல்வாக்கு' என்பது இலக்கண வரம்புக்கு கட்டுப்படாத விஷயம். பொதுவாக நல்லவர்கள் செல்வாக்காக இருப்பார்கள் என்பது உண்மைதான். ஆனால் அதற்காகச் 'செல்வாக்கு'ப் படைத்தவர்கள் எல்லாரும் நல்லவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. முதல் ரகத்தாரின் செல்வாக்குக்கு எதிராக எந்தப் பகையும் எழாது. ஆனால் இரண்டாம் ரகத்தவர்கள் தமக்கு எதிராக எழும் பகையைத் தலைதூக்க விடமாட்டார்கள். இது தான் வித்தியாசம். தணிகாசலத்தின் செல்வாக்கு எந்த ரகம் என்பது ஆராய்ச்சிக்குரியது. இந்த ஆராய்ச்சியில் அந்தப் பகுதிவாசிகளுக்குச் சிறிது ரசனை உண்டு.

''அவான் பணம்தான் செல்வாக்குக்குக் காரணம்!'' என்று வாதிடுவார்கள் ஒரு சாரார்.

''பணம் என்னய்யா, பணம்! அது நேற்று வந்ததுதானே! எல்லாம் ஆள் பலம் தான்! அவுக ஒருவார்த்தை சொன்னாதன்று மந்திரி வரை அசங்குமே!'' என்று அடித்துப் பேசுவார் சிலர்.

இன்னும் சிலர், திரு தணிகாசலம் சுதந்திரப் போராட்ட காலத்தில் ஜெயிலுக்குப் போய்ப் பெருமை பெற்றிருப்பதாகத் தப்புத் தெரிவிப்பார்கள். அவர் போராட்ட காலத்தில் ஜெயிலுக்குப் போயிருந்தது பற்றி எதிராளிகள்கூட ஆட்சேபம் தெரிவிக்காமல் ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காகத்தான் ஜெயிலுக்குப் போனாரா என்ற சந்தேகம் இன்னும் தீர்க்கப்படாதது!

'தண்ணீர் இல்லாக் காட்டுத் தீர்ப்பு பெற்றுத் தலையூருக்கு மாற்றலாகி உத்தியோகம் செய்ய வந்த அய்யாசாமிக்கு மேற்படி ஆராய்ச்சிகளிலெல்லாம் ஈடுபட நேரமும் இடையாது. அதற்கான லோகாநுபவமும் பூஜ்யம். அவருடைய ஆராய்ச்சியெல்லாம் தம் அலுவலக ரிகார்டுகளோடு சரி.

அய்யாசாமியின் ரிக்கார்ட் ஆராய்ச்சியில் கூடத் தணிகாசலம் பிரசன்னமாயிருந்தார். தணிகாசலத்தைப் பற்றி மற்றவர்கள் கண்ணில் படாத புதிய உண்மை ஒன்று அய்யாசாமியின் கண்ணில் பட்டது. அதாவது தணிகாசலம்தான் அந்தப் பகுதியிலேயே சிறந்த ஜனநாயகவாதி என்பதே!

ஜனநாயகத் தத்துவம் என்ன? அரசாங்கம் மக்களுடையது என்பதுதானே! அரசாங்கமே மக்களுடையது என்றால் அரசாங்கச் சொத்துகளும் மக்களுடையதுதானே! மக்களுக்குச் சொந்தமான ஒன்றை மக்களில் குறிப்பிடத் தக்கவராகத்தான் சர்வ சுதந்திரமாக அநுபவிப்பதில் என்ன தவறு?.... இப்படி ஒரு சித்தாந்தத்தில் தணிகாசலம் ஊறிப்போயிருந்தது அய்யாசாமியின் கண்ணில் பட்டுத் தொலைத்தது.

எனவே, அய்யாசாமி உத்தியோகம் ஏற்றுக் கொண்ட மூன்று வாரங்களுக்குள் அவரிடமிருந்து தணிகாசலத்துக்குச் சில தாக்கீதுகள் சென்றன.

ஒன்றில், ''திரு தணிகாசலம் அவர்கள் அறிய வேண்டியது. தாங்கள் அரசாங்கத்துக்குச் சொந்தமான அடியிற் கண்ட சொத்துக்களை ஆக்கிரமித்து அநுபவித்து வருவதால், உடனடியாக அவற்றைச் சர்க்கார் வசம் திருப்பித் தருவதுடன் இதுவரை அநுபவித்த அநுபவ லாபத்தையும் கொடுக்க வேண்டியது. இன்றேல் தக்க நடவடிக்கை

எடுக்கப்படும்? என்ற குறிப்புடன் ஒன்றரை முழ நீளத்துக்கு நீளப் பட்டியல் அடியில் கண்டிருந்தது.

இன்னொரு கடிதத்தில், தணிகாசலம் அவர்கள் சர்க்காரிடமிருந்து ஆயிரக்கணக்கான ரூபாய்கள் கடன்பட்டு விட்டு நெஞ்சம் கலங்காதிருந்த சமாசாரம் நினைவூட்டப்பட்டிருந்தது. இப்படி ரகம் ரகமாகப் பெரியதொரு கத்தை.

இந்தக் கடிதங்கள் சென்ற மூன்றாம் நாள் தணிகாசலத்தின் காரியஸ்தர் அய்யாசாமியைச் சந்தித்துப் பேச்சுவார்த்தை நடத்தினார். ஒரு மணி நேரப் பேச்சு வார்த்தைக்குப் பின் காரியஸ்தர், ''மகா யோக்கியர் மாதிரி தான்! இப்படி எத்தனை பேரைப் பார்த்திருக்கிறேன்!'' என்று உறுமிக் கொண்டே வெளியே வந்தார். உள்ளேயிருந்த அய்யாசாமி, ''எல்லாம் இவருகிட்டேயா நடக்கும்'' என்று உறுமிக் கொண்டிருந்தார்.

இப்படி உறுமலுடன் முற்றுப் பெற்ற அந்த விவகாரத்தில் திடீரென்று ஒரு விசித்திரத் திருப்பம் ஏற்பட்டது. அந்தச் சம்பவத்தால் அய்யாசாமியின் தோள்களே சிலிர்த்துப் போயின. அந்தத் 'தோள் சிலிர்ப்பை' ஏற்படுத்தியவர் சாட்சாத் தணிகாசலம் அவர்களேதான். அவர் திடீரென்று காரில் வந்து இறங்கிய கையோடு, தாம் கொண்டு வந்த 'ஆள் உயர' ரோஜா மாலையை அய்யாசாமியின் கழுத்தில் போட்டுத்தான் அந்தத் தோள் சிலிர்ப்பை ஏற்படுத்தி விட்டார்.

திடீரென்று தம் அலுவலகம் தேடி வந்து தம் கழுத்தில் மாலையைப் போட்ட தணிகாசலத்தைக் கண்டு அய்யாசாமிக்கே கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. அப்படி ஓட விடாமல் தணிகாசலம் அவருடைய கரங்களைப் பிடித்துக் குலுக்கு குலுக்கென்று குலுக்கி விட்டு, ''தம்பி, உங்களுடைய நேர்மையைக் கண்டதும் எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா? உங்களைப் போல் 'ஹானஸ்டா'ன இன்ஸ்பெக்டர் ஒருவரைத்தான் எங்கள் பகுதிக்குப் போட வேண்டும் என்று மந்திரிகிட்டே சொல்லியிருந்தேன். அவர் செய்துட்டார்.... ஆம். என் விஷயம் பற்றி, காரியஸ்தன் எல்லாம் விவரமாகச் சொன்னான். எனக்கு ரொம்பவும் மனக் கஷ்டமாய்ப் போச்சு. எல்லாம் கண்ட பயல்களை நம்பி நிர்வாகத்தை விட்டதால் வந்த வினை. எனக்கே இப்போதுதான் தெரிய வந்தது. எல்லா விஷயத்தையும் ஒரு மாசத்துக்குள் பைசல் செய்து விடுகிறேன். சரிதானே?'' என்றார்.

தம் நேர்மையை முதன் முதலாகப் பாராட்டிய ஒரே மனிதரான தணிகாசலத்தின் பெருந்தன்மையில் மெய்ம்மறந்து போனார் அய்யாசாமி.

தணிகாசலம் குறிப்பிட்டபடி ஒரு மாதத் தவணைக்குள் விஷயம் பைசலாகி விட்டது. ஆனால் அது பைசல் ஆனது அய்யாசாமி நினைத்த மாதிரி அல்ல.

தணிகாசலம் – அய்யாசாமி சந்திப்பு நடந்த மூன்றாம் நாள், தணிகாசலத்தின் ஆட்கள் சிலர் ஊர்க்கோடியில் ஒரு மைதானத்தில் ஒரு குழி தோண்டினார்கள். அதற்கு அடுத்த நாள் அந்தக் குழியினருகே கொஞ்சம் கல்லும் சிமெண்டும் வந்து சேர்ந்தன. அதைத் தொடர்ந்து ஊரெல்லாம் அதே பேச்சாயிற்று. அந்த ஊரில் எப்போதோ பிறந்து இறந்துவிட்ட ஒரு பிரமுகரின் நினைவு திடீரென்று தணிகாசலத்துக்கு ஏற்பட்டு விட்டதாகவும், அந்த நினைவுக்காக அவர் ஒரு மண்டபம் கட்டப் போவதாகவும், அந்த மண்டபத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்ட மந்திரி ஒருவரே கலெக்டர், தாசில்தார் போன்ற பரிவாரங்களுடன் வரப் போவதாகவும் செய்தி வெளியாகியது.

இந்தப் பெரியவர்களின் வருகை ஸ்தல அதிகாரியான அய்யாசாமிக்கும் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது. அந்த அறிவிப்பைத் தபாலில் பெற்ற வினாடி முதல் ஒரு பெரும் நெருக்கடிக்குள்ளானார் அய்யாசாமி. அது புதிதான நெருக்கடி ஒன்றுமில்லை. மேலதிகாரிகளின் விஜயம் பற்றி அறிவிப்பு வரும் போது ஒவ்வொரு கீழதிகாரிக்கும் ஏற்படும் நெருக்கடிதான்.

இந்த அறிவிப்புக்கு உலகமறிந்த தாத்பரியம் ஒன்று உண்டு. அதிகாரியின் வரவை அறிவிப்பது வெளிப்படை. ஆனால் அந்த அதிகாரிகளின் வரவையொட்டி அவர்கள் தங்களுக்கான முன்னேற்பாடுகளை அந்தந்த இடத்தில் இருக்கும் உத்தியோகஸ்தர் செய்து வைக்க வேண்டுமென்பது அறிவிக்கப்படாத நடைமுறைக் கடமை. பணத்தில் 'வெள்ளைப் பணம்', 'கறுப்புப் பணம்' என்கிறார்களே, அது போல் இது. ஸ்தல உத்தியோகஸ்தரின் கணக்குக்கு வராத கறுப்பு வேலை!

முன்னேற்பாடு செய்வதென்றால் முன் பணம் போட வேண்டுமே! சில 'சாமர்த்தியமான' பேர்வழிகள் அந்த முன்பணத்தைத் தயார் செய்ய 'என்னென்ன' வழிமுறைகளையெல்லாமோ கையாள்வதுண்டு. ஆனால் அய்யாசாமிக்குத் தெரிந்த வழி தம் மனைவியின் நகைகளில் கை வைப்பதுதான்.

ஆனால் இப்போது அந்தக் காரியம் நடக்கவில்லை. ஏனென்றால் அவர் மனைவி தன் தகப்பனார் வீட்டிலிருந்து கொண்டு வந்த நகைகள் எல்லாம் தீர்ந்தாயிற்று.

இந்த நெருக்கடியில் தணிகாசலம்தான் அய்யாசாமிக்கு அபயமளித்தார்.

அவர் வந்து, ''சார், உங்கள் சங்கடம் எனக்குத் தெரியும். அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள். 'பெரியவர்கள்' தங்கள் செலவைத் தந்து விடுவார்கள் என்றாலும் அவர்களோடு வருபவர்கள் எல்லாரும் தருவார்கள் என்று சொல்ல முடியாது. அப்படியும் இப்படியுமாக எப்படியும் உங்கள் கையைக் கடிக்கத்தான் செய்யும். நீங்கள் என்ன செய்வீர்கள், பாவம்! ஆனால் அதிகாரிகள் விஷயமாக நான் நேரடியாகச் செலவழிப்பது எல்லாருக்கும் கெட்ட பேர். அதனால் நான் பணம் போடுகிறேன். நீங்கள் அதை மேற்பார்த்துப் பட்டுவாடா செய்து கவனித்துக் கொள்ளுங்கள். இதில் தப்பு ஒன்றுமில்லை. என் விஷயமாக வரும்போது நான் செலவழிப்பதில் குற்றமில்லை'' என்றார்.

சிறிது நேர யோசனைக்குப்பின் இரண்டு வித நியாயத்துக்குக் கட்டுப்பட்டு அய்யாசாமி அந்த ஏற்பாட்டுக்குச் சம்மதித்தார். ஒன்று, தணிகாசலம் கூறுவது நியாயம் போலவே தோன்றியது. இரண்டாவது அப்படிச் செய்வதைத் தவிர வேறு விதியும் இல்லை!

ஒரு வழியாக அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டு விட்டது. எல்லாரும் திரும்பியதும், அய்யாசாமி தம் மூலம் பட்டுவாடா ஆகிய வரவு செலவுக் கணக்கைத் தணிகாசலத்திடம் ஒப்புவித்தார். பெரியவர்களுக்கும் பரிவாரங்களுக்குமாக ஆகியிருந்த மொத்தச் செலவு இருநூற்றிருபது ரூபாய் சொச்சம். பெரியவர்கள், தங்கள் செலவுக்காக மட்டும் அவ்வூர் ஹோட்டல் மார்க்கெட் நிலவரப்படி கணக்குப் பார்த்துக் கொடுத்துவிட்டுச் சென்றிருந்த தொகை பதின்மூன்று ரூபாய் எண்பத்தேழு பைசா!

விழா முடிந்த மூன்றாம் நாள் 'ஆர். ஐ.' அய்யாசாமி மேலதிகாரி ஒருவர் முன்பாக ஒரு விசாரணைக்கு ஆஜராகவேண்டியிருந்தது.

''என்னய்யா, மேலதிகாரிகள் எல்லாம் வருகிறார்கள் என்று சாக்கிட்டுத் தணிகாசலத்திடம் முந்நூறு ரூபாய் இலஞ்சம் வாங்கிச் செலவு செய்தீர் என்று நிருபணம் ஆகியிருக்கிறது. என்ன சொல்கிறீர்?'' என்று எதிரில் நின்ற அய்யாசாமியை விசாரித்தார் விசாரணை அதிகாரி.

''இலஞ்சமா? சார், நான் அதை இலஞ்சம் என்று வாங்கவில்லை. அந்தப் பணத்தில் தயாரான சாப்பாட்டைக்கூட நான் சாப்பிடவில்லை. என் வீட்டில்தான் சாப்பிட்டேன்!''

''ஓகோ, வந்திருந்தவர்கள் சாப்பிட்டார்கள் என்று அவர்கள் மேல் பழியைப் போடப் பார்க்கிறீரோ! வந்திருந்தவர்களுக்கு ஹோட்டலில் போய்ச் சாப்பிடத் தெரியாதோ? உம்மை ஏற்பாடு செய்யச் சொல்லி உத்தரவு வந்ததா? உம் அயோக்கியத்தனத்துக்கு மற்றவர்களை உடந்தையாக்கப் பார்க்கிறீரோ? உம் சமாதானத்தை ஏற்றுக் கொள்ள முடியாது.'' சட்டத்தின் வார்த்தைகள் கம்பீரமாக முழங்கின.

அய்யாசாமி ஏதோ பேச வாயெடுத்தார். ஆனால் உதடுகள் துடித்தனவே தவிர, வார்த்தைகள் வெளிவரவில்லை!

சில நாட்களுக்குப்பின் பத்திரிகைகளில் கீழ்க்கண்ட செய்தி, ''இலஞ்சம் ஒழிந்தது!'' என்ற தலைப்பில் பிரசுரமாகியிருந்தது:

''தலையூரில் ரெவின்யூ இன்ஸ்பெக்டராகப் பணியாற்றி வந்த அய்யாசாமி என்பவருக்கு மேலதிகாரிகளின் சுற்றுப்பயணத்தைச் சாக்கிட்டு உள்ளூர்ப்பிரமுகர் ஒருவரிடம் இலஞ்சம் வாங்கிய குற்றத்துக்காக ஓராண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.''

மேற்கண்ட இலஞ்ச வழக்கை நடத்த அதிகாரிகளுக்கு உதவியாக இருந்து தேசிய ஒழுக்கச் சரிவைத் தூக்கி நிறுத்திய தணிகாசலம் அவர்களுக்கு ஏதோ பெரிய அரசியல் பதவி கிடைக்கப் போவதாகத் தலையூர் பகுதியெங்கும் ஒரே பேச்சாக இருக்கிறது. இது உண்மையோ, பொய்யோ தெரியாது.












''சிலருக்கு அதிசயமாய், எதிர்பார்க்க முடியாத வேளையில் ஞானோதயம் ஏற்பட்டு விடுகிறது. நினைத்துப் பார்த்தால் வாழ்க்கையே ஒரு விசித்திரமான புதிர்தான்.''

இப்படிச் சொன்னவர் 'அம்மாஞ்சி' என்ற பெயரால் உரிமை கொண்டாடி அழைக்கப்படும் ராமகப்பு. நெஞ்சில் பழைய நினைப்புக்கள் கனவுகளாய்ப் பரவும் அநுபவத்தில் ஆழ்ந்துவிட்ட பிரமை அவருடைய முகத்தில் தேங்கியிருந்தது.

நான் மௌனமாய் எதிர்த் திண்ணையில் உட்கார்ந்து கொண்டேன். நான் வந்ததும், எதிரே உட்கார்ந்ததும் அவருடைய பார்வையில் பதிந்தாலும், அவர் நினைவின் தீவிரத்தில் சுழன்ற மனம் உடனே கலையவில்லை.

எனக்குள் ஆவல் பெருகிற்று. பேசாமல் காத்துக் கொண்டிருந்தேன். ராமகப்பு, ஏதோ 'அந்தக் காலத்து' நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டுதான் 'ஞானோதயம்-வாழ்க்கைப் புதிர்' என்கிற பெரிய வார்த்தைகளைச் சொல்கிறார் என்பதைப் புரிந்து கொள்வது அவ்வளவு சிரமமான விஷயமில்லை.

ராமகப்புவின் வாழ்வே ஓர் அநுபவங்களின் கோவை. எண்பது வருஷ வாழ்வில் உணர்ச்சி மயமான இளமைக் காலம் முழுவதும் அவர் 'மைன'ரின் நண்பராக இருந்திருக்கிறாரே !

'உம்ம்....' என்ற களைப்புக் குரல், நீண்ட மௌனத்துக்குப் பிறகு கேட்டது. நிமிர்ந்து உட்கார்ந்து அவருடைய முகத்தைக் கூர்ந்து கவனித்தேன். ராமகப்புவின் முகத்தில் காலப் போக்கால் பதிந்திருக்கும் சுருக்கங்களின் நடுவே, 'அந்த நினைவுகளால்' ஏற்பட்ட மாறுதல் தெளிவாகத் தெரிந்தது.

அவர் ஒரு முறை நெட்டுயிர்த்தார். கை மடியில் பொடி மட்டையைத் தேடித் தடவியது. நான் 'சட்'டென்று அவருக்காக வாங்கி வந்திருந்த புதுப் பொடியை எடுத்து நீட்டினேன்.

ராமகப்பு அவசரப்படாமல் மிக நிதானமாக இரு விரல்களின் நடுவில் பொடியைத் திரட்டினார்.

''ம்.....ஏதோ ஞாபகம் வந்தது. எங்கே நேற்றைக்கு உன்னைக் காணவே இல்லை?''

''மாயவரம் போயிருந்தேன். அப்படியே பிரமாதமாய் விளம்பரம் பண்ணியிருந்தார்கள் ஒரு நாடகத்தைப் பற்றி. அதையும் பார்த்துவிட்டுக் காலையிலேதான் வந்தேன்.''

பேச்சு எங்கேயாவது திசை மாறிப் போய் விடப் போகிறதே என்ற பயத்துடனேயே தான் பதில் சொன்னேன். ராமகப்பு அவசரமாய் ஒரு முறை கையை உதறிவிட்டுப் பொடியை இழுத்தார்.

''அடடா! என்ன பொருத்தம்? நானும் நாடகக்காரி ஒருத்தியைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவளைச் சாதாரணமாய் வெறும் நடிகை என்று மட்டும் சொன்னால் போதாது. மைனருக்கு ஞானோதயம் ஏற்பட அவள்தான் ஒரு விதத்தில் காரணமாய் இருந்தாள்.''

''அப்படியா? அந்தக் கதையை இதுவரையில் நீங்கள் எனக்குச் சொல்லவே யில்லையே அம்மாஞ்சி ?''

''கதையா? உம்.... உனக்கு எல்லாமே கதைதான். உன்னைச் சொல்லி என்ன பிரயோசனம்? வாழ்வே ஒரு பிரமை — கதை மாதிரி. அந்த நாடகக்காரியின் வாழ்க்கையும் அப்படித்தான் முடிஞ்சு போச்சு.''

அவர் மறுபடியும் பெருமூச்சு விட்டார். கண்களை மூடி மூடித் திறந்தார். எனது எண்ணமெல்லாம் அவருடைய விரல்கள் எப்பொழுது பொடி மட்டையிலிருந்து இரண்டாவது சிட்டிகையை அள்ளும் என்பதிலேயே ஒன்றியிருக்க, ராமகப்பு அலட்சியமாய் மட்டையைக் கீழே வைத்து விட்டார்.

''ஏன் இப்படிப் பெருமூச்சு விட்டுக் கொண்டு கண்ணை மூடிக்கிறேன் என்று





பார்க்கிறீர்களா! ஆகா! இப்போது நினைத்தாலும் அவன் உருவம் மனசிலே வந்து நிற்கிறது. அழகிலே எத்தனை விதம் உண்டோ, அத்தனை விதமாகவும் மாறும் சாமர்த்தியம் அவனுக்கு உண்டு. 'பவழக் கொடி', 'அல்லி அர்ஜுனா', 'சத்யவான் — சாவித்திரி' இப்படி ஒவ்வொரு நாடகத்திலும் அவன் நடிக்கும் போது, அவன் அழுதாலும் சிரித்தாலும் எல்லாமே அழகாய்த்தான் இருக்கும்.''

நான் தலையை அசைத்தேனே தவிர வாயைத் திறக்கவில்லை. அவருடைய நினைவின் தீவிரத்தின் நடுவில் எதுவும் பேசத் தோன்றவில்லை அவரால். கதையை ஆரம்பிக்க முடியவில்லை என்று புரிந்துகொண்டேன்.

''நீ வரும்போது வாழ்க்கையே ஒரு புதிர் என்று சொல்லிக் கொண்டிருந்தேனா? சாதாரணமான மனிதனும் அப்படித்தான் சொல்ல முடியும். நாற்பது வேலி நஞ்செய் நிலத்தை அழித்து விட்டார் என்றுதான் மைனரைப் பற்றி ஊரில் எல்லாரும் சொல்லுவார்கள். ஆனால் மைனர் அற்பத்தனமாய் என்றுமே நடந்ததில்லை. அவரைப் போலப் பெருந்தன்மையோடு சத்தியத்தைப் புரிந்து கொண்டு நடந்துகொண்ட வேறே யாரையும் இந்த ஊரில் நான் கண்டதில்லை. ஒரு காரியத்திலே தாம் செய்தது தவறு என்று தெரிந்து விட்டால், அப்போதுதான் அவருடைய பெருமை தெரியும். அவரைப் போல முரட்டுத்தனமும் பிடிவாதமும் நிறைந்தவர்களும் இல்லை. மைனர் தவறே செய்ததில்லை என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால்......''

ராமகப்பு பேச்சை நிறுத்தி விட்டுப் பொடி மட்டையை எடுத்துப் பிரித்தார். தொடர்ந்து ஒரு சின்னக் கனைப்பு. இத்தனை நேரம் ஒன்றிப் போயிருந்த உணர்ச்சிகளி



விருந்து விடுபட்டு, சாதாரணக் குரலில் கதையை ஆரம்பித்தார்.

* * *

சித்திரை மாதம். ஊரில் அம்பாள் கோவில் திருவிழாவுக்குக் காப்புக் கட்டுவதற்கு நாள் பார்த்தாகி விட்டது. கருவாழைக்கரை காமாட்சி அம்மன் உத்ஸவம் அமர்க்களப்பட்ட காலம் அது. மைனர்தான் பரம்பரைத் தர்மகர்த்தா. பத்து நாட்களும் அவர் ஊரை விட்டு நகரமாட்டார். ஆனால் அந்த வருஷம் உத்ஸவம் ஆரம்பிக்கிறதற்கு முன்னாலேயே ஊர் இரண்டுபட்டு விட்டது. வழக்கமான பாட்டுக் கச்சேரிக்குப் பதிலாய் நாடகம் நடத்தலாம் என்றார் மைனர். அவருடைய முகத்துக்கு நேரே 'கச முச' வென்று பேசினவர்கள், பின்னால் மறைவாகப் பெரிய எதிர்ப்புக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள்.

மைனர் என்னைத் தனியாகக் கேட்டார். ஊர்ப் பொதுக் காரியத்தில் எல்லாரையும் எதிர்த்துக் கொண்டு ஓர் ஏற்பாடு செய்தால் சுகப்படாது என்பதுதான் என் அபிப்பிராயம்.

''போகிறது, போ. இந்த வருஷம் நான் ஊரிலே இருக்கப் போகிறதில்லை. எல்லாம் காரியஸ்தரே இருந்து பார்த்துக் கொள்ளட்டும்'' என்று முடிவாகச் சொன்னார் மைனர்.

ஒரு விதமாகத் தகராறு இல்லாமல் முடிந்ததே என்று நினைத்தேன். மைனர் வேறு திட்டம் போட்டிருந்தது சாயங்காலம்தான் தெரிந்தது.

சவுக்கண்டி வாசலில் குதிரை வண்டி பூட்டி நின்றது. வண்டிக்காரன் அவசரமாக ஓடி வந்து, ''ஐயா, கூப்பிட்டாங்க'' என்றான். போய்ப் பார்த்தால் மைனர் வெளியூர்ப் பிரயாணத்துக்குத் தயாராய் நின்று கொண்டிருந்தார்.

''ராமகப்பு! வா, கும்பகோணம் வரையில் போய்விட்டு வரலாம்.''

''என்ன இது, திடீர்ப் பிரயாணம்?''

''எல்லாம் போகும் போது பேசிக் கொள்ளலாம். வீட்டுக்கு நானே சொல்லி அனுப்பி விடுகிறேன்.''

ஏதாவது காரணம் சொல்லித் தட்டிக் கழித்து விடலாம் என்று நினைக்கக்கூட அவர் இடம் வைக்கவில்லை. புது வேஷ்டியும் சட்டையும்கூட எனக்காகத் தயாராய் எடுத்து வைத்திருந்தார்.

முப்பது மைல் தூரம். மைனரின் குதிரைக்கு அது பிரமாதமில்லை. மைனரின் பிரயாணத் திட்டத்தைப் பூர்த்தி செய்யத் தவறாது அது.

கும்பகோணத்தில் அம்புஜத்தின் நாடகக் கம்பெனி ஒரு மாதமாய்ச் 'சக்கைப் போடு' போட்டுக் கொண்டிருந்தது. ஒன்றுவிட்டு ஒரு நாள் நாடகம். ஒரு பெண் துணிவோடு நாடகக் கம்பெனி நடத்துகிறாள் என்பதே அந்த நாளில் புதுமையான செய்தி. அதோடு அவளுடைய அழகும், நடிப்பும் நாடகம் பார்த்தவர்களை யெல்லாம் வாய் ஓயாமல் அவளைப் பற்றியே பேச வைத்தன. அதிகமாகப் போனால் அம்புஜத்துக்கு அப்பொழுது வயது இருபத்தி ஒன்று இருக்கலாம். தொழிலில் எத்தனையோ போட்டி. அவள் எல்லாவற்றையும் சமாளித்துக் கொண்டது மட்டுமில்லை; நல்ல பெயரோடும் இருந்தாள்.

இரண்டு பேரும் கும்பகோணம் போய்க் காப்பி சாப்பிட்ட பிறகுதான் மைனர் விவரத்தைச் சொன்னார்.

''ராத்திரி நாடகத்தைப் பார்ப்போம். காலையில் அம்புஜத்திடம் பேசி நம் ஊரில் ஒரு நாள் நாடகம் போட ஏற்பாடு செய்து கொள்வோம். கோவில் செலவில் வேண்டாம். எவ்வளவு ஆனாலும் நான் கொடுக்கிறேன்'' என்றார்.

''ஓ! அப்படியா சேதி?'' என்று நினைத்துக் கொண்டேன். மைனரின் பிடிவாதத்துக்கு யாராலுமே அணை போட முடியாதுதான்.

முதல் வகுப்பில் முதல் வரிசையில் இடத்துக்கு ஏற்பாடு செய்து, நாடகத்தைப் பார்த்தோம். அம்புஜத்தின் அழகைப் பற்றி முன்பே சொல்லி விட்டேன். அவளுடைய நடிப்பைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. சொல்லிப் புரிய வைக்கிற காரியமில்லை அது. அன்றைக்குச் சகுந்தலை நாடகம். நாடகத்தைப் பார்க்கும்போது சகுந்தலையைத்தான் பார்க்க முடிந்ததே தவிர, அம்புஜம் என்கிற நடிகையை அங்கே நாங்கள் காணவில்லை. 'வேறு யாருக்காகவும் நான் நடிக்கவில்லை. நடிப்பை உபாசிக்கிறவள் நான்' என்று அவள் சொல்வது போலத்தான் இருந்தது. மைனர் உண்மையான ரஸிகர். நடுவிலே ஒரு தடவைகூட அவர் வெற்றிலைப் பெட்டியைத் திறக்காததிலிருந்து அவர் அவளுடைய நடிப்புக்கு எவ்வளவு மதிப்புக் கொடுத்தார் என்பது தெரிந்தது. நாடகம் முடிந்து இருவரும் திரும்பினோம். ஆனால் ஒருவரும் அதைப் பற்றிப் பேசவில்லை. அவருடைய மனசில் புரண்டு கொண்டிருந்த உணர்ச்சியை அவரது முகமே எடுத்துக் காட்டிற்று.

அடுத்த நாள் அம்புஜம் தங்கியிருந்த ஜாகைக்குப் போனோம். கம்பெனி மானேஜரைத்தான் பார்க்க முடிந்தது. மைனர் அவரிடம் வந்த காரியத்தைச் சொன்னார். உடனே கையை விரித்து விட்டார் அவர். தனிப்பட்டவர்களின் அழைப்பை ஏற்றுக் கொண்டு அம்புஜம் நாடகம் நடத்துகிற வழக்கமே இல்லையாம். 'நானே நேரில் கேட்டுப் பார்க்கிறேன்' என்று சொல்லிப் பார்த்தார் மைனர். எதுவும் பிரயோசனப் படவில்லை. ஏமாற்றத்தோடு திரும்பினோம்.

''ஊருக்குப் புறப்பட வேண்டியது தானே?'' என்று கேட்டேன்.

''நீ வண்டியில் திரும்பிப் போ. நான் இன்னும் இரண்டு நாட்கள் தங்கி, நாளைக்கும் நாடகம் பார்த்துவிட்டு, எப்படியும் அவளை அழைத்துக் கொண்டுதான் வரப்போகிறேன்'' என்று பிடிவாதமாகச் சொன்னார் மைனர்.

''அவள்தான் நாடகம் போட வரமாட்டாளாமே?''

''வராவிட்டால் போகட்டும். இத்தனை உயர்ந்த நடிப்பை நான் கண்டதில்லை. அதற்காக அவளை நேரில் பார்த்து ஒரு வார்த்தை சொல்லிவிட்டு வரப்போகிறேன்.''

"சரி" என்று கூறிவிட்டு நான் மட்டும் திரும்பி விட்டேன்.

ஃ ஃ ஃ

மூன்று நாட்கள் கழித்து மைனர் திரும்பினார். வந்தவர் கலகலப்பாகப் பேசவேயில்லை. அவருடைய மனம் ஏதோ சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டது என்பதைப் புரிந்து கொண்டேன். என்னிடம் எந்த அந்தரங்கத்தையும் மறைத்தது கிடையாது அவர். இரண்டு நாட்கள் போனால் தாமாகவே சொல்லி விடுவார் என்பது தெரியும். அதே போலச் சவுக்கண்டியில் தனிமையில், நடந்த கதையை அப்படியே சொன்னார்.

"ராமகப்பு! அவளைப் பார்த்தேன். ஒரு மணி நேரம் என்னிடம் பேசிக் கொண்டிருந்தாள். அவள் சாதாரணப் பெண் இல்லே ராமகப்பு......"

"அதுதான் நாடகம் பார்க்கும்போதே தெரிந்ததே?"

"நாடகத்திலே பார்த்தபோது நான் நினைத்தது வேறு. நேரில் பார்த்த சமயம் நினைத்தது வேறு. அவள் சாதாரணப் பெண்ணாக இருந்தால்தான் கவலையே இல்லையே! வாழ்க்கையிலும் அவள் எத்தனை பரிசுத்த மானவள் என்று தெரிந்து கொண்டேன். அதற்காகவே என்னால் அவளைச் சிறிதும் மறக்க முடியவில்லை."

மைனர் பெருமூச்சு விட்டார். அதில் ஆவலும் ஏமாற்றமும் கலந்திருந்தன.

"எப்படியாவது அவள் மனதை மாற்றித் தான் ஆக வேண்டும். அவளுக்காக நான் எப்படிப்பட்ட தியாகமும் செய்யத் தயங்க மாட்டேன்."

"ஏது, ரஸனை வேறே விதமாகத் திரும்பி விட்டது போலிருக்கே?"

"விளையாடாதே, ராமகப்பு. ஏதாவது உருப்படியாகப் பேசு."

"அவள் உண்மையில் அவ்வளவு உயர்ந்தவளானால், அவளுடைய கலையிலும் அத்தனை தூரம் ஈடுபாடு இருந்தால் அவளைக் கல்யாணம் செய்துகொள்கிற துணிச்சல் இருக்க வேண்டும்."

"அந்த முடிவோடுதான் அவளைக் கேட்டேன். கலைதான் அவள் லட்சியமாம். அதற்காக என்றும் தனியாகவே இருக்கப் போகிறாளாம்."

"எல்லாம் அந்தப் புகழ் படுத்துகிற பாடு. இவள் நாடகத்தை யாரும் பார்க்க வரா விட்டால், இந்த லட்சியமெல்லாம் போகிற இடம் தெரியாது."

உடனே எதுவும் பதில் சொல்லவில்லை; அப்படியே சிந்தனையில் ஆழ்ந்து போய் விட்டார் அவர்.

இதற்குப் பிறகு அடுத்த நான்காவது நாள் மைனர் திடீரென்று வெளியூர் புறப் பட்டுப் போய் விட்டார். என்னிடம் எதுவுமே சொல்லிக் கொள்ளவில்லை. வண்டிக்காரனை விசாரித்தேன். "மாயவரம் ரயிலடியிலே கொண்டு இறக்கி விட்டேன். டிக்கெட்டை அவரே வாங்கிக் கொண்டார். திரும்பி வருகிறதைப் பற்றியும் எதுவும் சொல்லவில்லை" என்றான் அவன். எனக்கு என்



## வாள் வேண்மடன் *

மகாராஷ்டிர மாநிலம் 1960ம் ஆண்டில் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டதும், பண்டைய பேஷ்வாக்களின் தர்பார்களில் ஊழியர்கள் அணியும் உடுப்பை முதலமைச்சரின் மெய்ப் பாதுகாப்பாளரும் (பாடி கார்ட்) அணிய வேண்டுமென்று விதிக்கப்பட்டது. அந்த ஆடை அணிகளில் ஒரு முக்கிய அம்சம் இடுப்பிலே வாளைச் செருகிக் கொள்வது.

இது குறித்து கனம் பி. கே. ஆர்ட்டே என்னும் ஒரு சுயேச்சை உறுப்பினர் வாள் அணிந்துகொண்டு சட்டசபையில் எவரும் பிரவேசிக்கலாமா? என்று ஓர் உரிமைப் பிரச்னையை எழுப்பினார்.

சட்டசபை உறுப்பினர்கள் - மந்திரிகள் உட்பட ஆயுதங்களோ கம்புகளோ வைத்துக்கொண்டு சட்ட சபைக்குள் வரக்கூடாது! இது அமைச்சர்களின் பணியாட்களுக்கும் பொருந்தும் — என்று சபாநாயகர் தீர்ப்பளித்தார்.

—தூரம்

னவோ மனதில் விவரம் புரியாமல் பயம் வந்து புகுந்து கொண்டது. மைனரிடம் நான் வேடிக்கையாக நினைத்துப் பேசி விட்டேன். உண்மையில் அவருடைய போக்கையும் ஆசையையும் தடுத்திருக்க வேண்டும் நான். என் பிடிவாதம் தீவிரமாக இருந்திருந்தால் அவர் ஒரு சமயம் மாறியிருக்கலாம்.

ஃ ஃ ஃ

ராமகப்பு இத்துடன் கதையை நிறுத்தி விட்டு என்னையே சில விநாடிகள் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய முகத்தில் மெல்லிய சிரிப்புப் பரவிற்று.

"இதெல்லாம் நடந்தது ஐம்பது வருஷ காலத்துக்கும் முன்னால் என்பதை மறந்து விடக் கூடாது. மைனர் கொஞ்சம் 'அப்படி-இப்படி' நடந்து கொண்டவர்தான். ஆனால் ஒரு நாடகக்காரியைக் கல்யாணமே செய்து கொள்ளும் முடிவுக்கு வருகிற அளவுக்கு அவர் போய் விட்டார் என்றால் அம்புஜத்திடம் எத்தனை தூரம் அவர் மனம் ஈடுபட்டிருக்க வேண்டும்? அம்புஜமும் அத்தனை கௌரவத்துக்கும் தகுதி உள்ளவள்தான். அதைவிட அவளை மனைவியாக அடைந்தால் மைனரும் பாக்கியசாலிதான்."

"நீங்கள் சொல்கிறது புரிகிறது அம்மாஞ்சி."

"ஆனால் இதில் வேடிக்கை என்ன தெரியுமா? மைனரின் எண்ணம் அம்புஜத்துக்குப் புரியவில்லை. தன்னை ஓர் அழகான பெண் என்பதற்காகவே மைனர் விரும்புகிறார் என்று அவள் நினைத்தாள். அதே போல் அம்புஜத்துக்கு நாடகக் கலையின் மேல் இருந்த தணியாத ஆசை மைனருக்கும் புரிய

வில்லை; கர்வம் பிடித்தவள் என்று நினைத்து விட்டார் அவர்.''

''அப்புறம்?''

ராமகப்பு பொடி மட்டையை எடுத்தார். கச்சிதமாக இரண்டு விரல்களும் இயங்கி முடித்ததும் தொண்டையைக் கனைத்து விட்டுக் கொண்டார்.

✤ ✤ ✤

அடுத்த வாரம் பத்திரிகையில் ஒரு செய்தி தடபுடலாக வெளியாகியிருந்தது. கும்பகோணத்தில் அம்புஜத்தின் நாடகங்கள் நடத்தப்பட்ட கொட்டகை முழுதும் தீ விபத்தில் எரிந்து சாம்பலாகி விட்டதாம். ஏகப்பட்ட நஷ்டம். நாடகத்துக்குத் தேவையான சாமான்கள் அவ்வளவும் அழிந்து விட்டனவாம். அதைப் படித்ததும், ஏற்கனவே என் நெஞ்சில் ஒட்டிக் கொண்டிருந்த இலேசான பயம், பயங்கரமாக வளர்ந்து விட்டது. மைனர் ஏதாவது வம்பில் மாட்டிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்ற நினைப்புடன் உடனே கும்பகோணத்துக்குப் போனேன்.

மைனர் வழக்கமாகத் தங்கும் ஹோட்டலுக்குப் போய் விசாரித்த போது, போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து அவரை அழைத்துக் கொண்டு போயிருப்பதாகத் தெரிந்தது. குதிரை வண்டியைப் பிடித்துப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனேன். மைனர் அங்கேதான் இருந்தார்.

தீ விபத்து சம்பந்தமாய்ப் போலீசுக்குப் புகார் வந்திருக்கிறது. அது ஒரு சதி வேலை என்று கம்பெனி மானேஜர் மூன்று பேர்கள் பேரில் சந்தேகப்பட்டுப் புகார் செய்திருக்கிறார். அதில் மைனரின் பெயரும் இருந்தது. அதற்காகவே மைனரை அழைத்து விசாரித்தார் இன்ஸ்பெக்டர்.

நான் வந்திருப்பது தெரிந்ததும் மைனர் இன்ஸ்பெக்டரின் அனுமதியோடு என்னையும் ஸ்டேஷனுக்குள் அழைத்துக் கொண்டு வரச் சொன்னார். முதன் முதலில், அவசரமாக உள்ளே போனதும், மைனரின் முகத்தைத் தான் பார்த்தேன். அதிலே கவலையும் இல்லை; பயமும் இல்லை.

''நீங்கள் உங்கள் முறைப்படியே மேலே நடக்க வேண்டியதைச் செய்யுங்கள், இன்ஸ்பெக்டர். இவர் என் நண்பர். எனக்காக ஜாமீன் கொடுப்பார். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் நீங்களே செய்து விடுங்கள்'' என்று அலட்சியமாகப் பேசினார் மைனர்.

'இது என்னடா வம்பை விலை கொடுத்து வாங்குகிறார்?' என்று திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தேன்.

அதே நேரத்தில் வேகமாகக் குதிரை வண்டி ஒன்று வந்து வெளியே நின்றது. அதிலிருந்து கீழே இறங்கிய நபரைப் பார்த்ததும் எல்லாரும் பிரமித்துப் போனோம்.

அம்புஜந்தான் வந்தாள். மைனர் பக்கம் அவளுடைய பார்வை ஒரு விநாடி சென்றது. பிறகு இன்ஸ்பெக்டரிடம், ''சார்! தீ விபத்து தற்செயலாகத்தான் நடந்தது. நான் கம்பெனி ஆட்களையெல்லாம் நன்றாய் விசாரித்து விட்டேன். எனக்குத் தெரியாமல் கம்பெனி மானேஜர் உங்களிடம் புகார் கொடுத்து விட்டார். உண்மையைச் சொல்லி விட்டுப் போகத்தான் வந்தேன்'' என்றாள்.

''அம்புஜம்....'' என்று ஏதோ சொல்ல வாயெடுத்தார் மைனர்.

''நீங்கள் எதுவும் பேசாதீர்கள்'' என்று அதிகாரத்தைக் காட்டினார் இன்ஸ்பெக்டர். ''நீங்கள் சொல்வது நிஜந்தானா?'' என்று அம்புஜத்திடம் கேட்டார்.

''சந்தேகமேயில்லை. நான் நிஜத்தைத் தான் சொல்கிறேன்'' என்று அம்புஜம் சொன்ன போது அவளுடைய குரலில் இருந்த கம்பீரம் எல்லாரையும் செயல் மறக்க வைத்து விட்டது.

இன்ஸ்பெக்டர் வாக்குமூலம் வாங்கிக் கொண்டு அம்புஜத்தை அனுப்பினார். ஒரு வழியாக நாங்களும் அங்கிருந்து விடுபட்டு வந்து சேர்ந்தோம்.

அன்றைக்குச் சாயங்காலம் ஹோட்டலுக்கு ஓர் ஆள் வந்தான். மைனரை விசாரித்துக் கொண்டு வந்தவன், அவரிடம் அம்புஜம் கொடுக்கச் சொன்னதாகக் கடிதம் ஒன்றைக் கொடுத்து விட்டுப் போய் விட்டான். மைனர் அவசரமாகக் கடிதத்தைப் பிரித்தார். கத்தையாக நூறு ரூபாய் நோட்டுக்களும் ஒரு துண்டுக் காகிதமும் அதில் இருந்தன.

''நீங்கள் கொடுத்த பணம் முழுவதும் இதில் இருக்கிறது. பெற்றுக் கொள்ளவும். இன்று இரவே நான் வெளியூர் போகிறேன்.

அம்புஜம்.''

மைனர் காகிதத்தைப் படித்ததும் எழுந்து வெளியே ஓடினார். நானும் மாடியிலிருந்து ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். வண்டி ஒன்று வேகமாகச் சென்று கொண்டிருந்தது. அதில் அம்புஜம் உட்கார்ந்திருந்தாள். கீழே வாசலில் பிரமித்துப் போய் நின்ற மைனரின் மேலேயே அவளுடைய பார்வை நிலைத்திருந்தது.

'உம்..... நாடகக் கொட்டகை எரிந்து போய் விட்டதே என்று ஐயாயிரம் ரூபாய் கொடுத்தேன். அப்படியே திருப்பி அனுப்பி விட்டாள்' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார் மைனர். அவருடைய முகத்தில் வேதனை கலந்த விரக்தி மட்டும் மிஞ்சியிருந்தது. அலட்சியச் சிரிப்பு போன இடம் தெரியவில்லை.

✤ ✤ ✤

''அப்போதுகூட ஒருவரை யொருவர் புரிந்து கொள்ள வில்லையா?' என்று மெதுவாகக் கேட்டேன்.

''அதற்கு அப்புறம் ஒரு வருஷம் ஆச்சு'' என்றார் ராமகப்பு.

''ஒரு வருஷம் கழித்து...?'' முடிவை நெருங்கும் அவசரத்தோடு கேட்டேன்.

கும்பகோணத்திலிருந்து திரும்பி வந்த பிறகு மைனர் உடம்பு சரியில்லாமல் படுத்து விட்டார். நாலைந்து மாதங்கள்வரை வீட்டிலேயேதான் தங்கியிருந்தார். எப்பொழுதாவது திடீரென்று நினைவு வந்தவர் மாதிரி அம்புஜத்தின் நாடகத்தைப் பற்றி ஏதாவது சொல்லுவார். அவ்வளவுதான்.

அந்த நாடகக் கம்பெனி என்ன ஆயிற்று என்றே தகவல் இல்லை. அம்புஜம் எங்கே போனாள் என்பதும் தெரியவில்லை.

சரியாக ஒரு வருஷம் கழிந்து விட்டது. மைனரும் நானும் மலைக்கோட்டை உத்ஸவத்துக்குப் போய் விட்டுத் திரும்பி வரும் போது தஞ்சாவூரில் இறங்கினோம். நீண்ட காலத்துக்குப் பிறகு மைனர் மறுபடியும் வெளியூர் புறப்பட்டது அப்போதுதான்.

தஞ்சாவூர் ரயிலடியில் காத்துக் கொண்டிருக்கும் போதுதான் அந்த அதிசயம் நடந்தது. அம்புஜம் மட்டும் தனியாக எதிரே வந்து கொண்டிருந்தாள்.

மைனர் அவளைப் பார்த்ததும் அவசரமாக எழுந்து போனார்.

''அம்புஜம்!'' என்று கூவினார்.

''நீங்களா?'' என்று பிரமித்துப் போய்ப் பார்த்தாள் அவள்.

மூவரும் வெயிட்டிங்ரூமில் போய் உட்கார்ந்தோம். காப்பி தருவித்துச் சாப்பிட்டோம்.

''அம்புஜம்! உன்னை மறுபடியும் சந்திக்க வேண்டும் என்று தவித்துக் கொண்டே இருந்தேன். நல்ல வேளையாக இன்றைக்குப் பார்த்தேன். அம்புஜம், என்னை மன்னித்து விடு. உண்மையில் அந்தத் தீ விபத்துக்குக் காரணம் நான்தான். உன் பிடிவாதத்தை மாற்ற எனக்கு வேறே வழி தோன்றவில்லை.''

மைனரின் பேச்சைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். அமைதியாக, எளிய தோற்றத்தோடு இருந்த அம்புஜம் சாதாரணமாகவே உட்கார்ந்திருந்தாள்.

''எனக்கு அப்போதே தெரியும். முதலில் உங்கள் பேரில் கோபந்தான் வந்தது. ஆனால் யோசித்துப் பார்த்ததில் என் மேல் இருந்த ஆசையில்தானே அப்படிச் செய்தீர்கள் என்று புரிந்து கொண்டேன். அப்படிப்பட்டவரின் அன்பை அலட்சியமாய் உதறி விட்டேனே என்று தவித்தேன். இத்தனை நாட்களாய்....''

மேலே பேசுவதை நிறுத்தி விட்டு அவள் என்னைப் பார்த்தாள்.

''என் சிநேகிதன்தான். எல்லா விவரமும் இவனுக்கும் தெரியும்'' என்றார் மைனர்.

''நாடகக் கம்பெனி என்ன ஆச்சு?'' என்று கேட்டேன்.

''ஏகப்பட்ட நஷ்டத்தைச் சமாளிக்க வழியில்லை. எல்லாருக்கும் சம்பளப் பாக்கி வேறு. புதிதாக எல்லாம் வாங்கிக் கம்பெனியை ஆரம்பிக்க வழியே இல்லை. நகைகளை யெல்லாம் விற்றுக் கடனைத் தீர்த்து விட்டுக் கம்பெனியைக் கலைத்து விட்டேன்.''

''அம்புஜம்! நான் செய்த தவறுக்காக எந்த உதவி வேண்டுமானாலும் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறேன். என்ன வேண்டுமோ, கேள் அம்புஜம்'' என்றார் மைனர்.

''இனி மேல் நான் மேடை ஏறுவதாக எண்ணமே இல்லை. உங்களுக்கு இஷ்டமானால் அன்றைக்கே நீங்கள் என்னிடம் கேட்ட அதே கேள்வியை இப்போது நான் உங்களைக் கேட்கிறேன். தயவுசெய்து என்னை உங்கள்...... மனைவியாக......'' அவள் தயங்கினாள்.....

''வேண்டாம். அம்புஜம்..... அதில் உனக்குக் கௌரவமே இல்லை. கலைக்காகவே வாழ்வதாகத் தீர்மானித்துக் கொண்டவள் நீ. ஒரு சாதாரணமான மனிதனைக் கல்யாணம் செய்து கொள்ளாதே. உன்மேல் உள்ள அன்போடு, உன்னைப் புரிந்து கொண்ட மதிப்போடு இதைச் சொல்கிறேன்.''

மைனருக்குத் தொண்டையை அடைத்தது. அம்புஜத்தின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. இப்போதும் அவள் பூரண சௌந்தர்யத்தோடு, புனிதமாகவே தோன்றினாள். அழியாத அழகு அது.

மைனர் அவளுக்காக வீடும், நிலமும் வாங்கிக் கொடுத்தார். தஞ்சாவூருக்குப் பக்கத்தில் கிராமம் ஒன்றில் அவள் இருந்தாள். ஆனால் அதற்குப் பிறகு மைனர் அவளை ஒரு தடவைகூடச் சந்திக்கவில்லை; அவளைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கக் கூட இல்லை.

ஃ ஃ ஃ

ராமசுப்பு மறுபடியும் பொடி மட்டையை எடுத்தார். ஆனால் அதைப் பிரிக்காமலே கீழே வைத்து விட்டார். மறுபடியும் நினைவின் தீவிரம் அவரை மௌனத்தில் ஆழ்த்தி விட்டது. நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டேன்.

# கி.பி.1000ல் ஒரு வழக்கு



வானின் நிறைகாக்க வண்ண நிலாவழகி வந்துதித்தாள். மண்ணின் தன்மை மணத்தது; மக்களின் எண்ணம் இனித்தது.

அன்றுவரை சரிவர உண்ணவோ, உறங்கவோ இயலாமல் அவலத்தின் கைக்குழந்தையாய் அல்லலுற்றுக் கொண்டிருந்த அருளானந்த உடையாரும் கூட அகமகிழ்வுடன் உண்டியை நிரப்பினார். உவகையுடன் படுத்துறங்கப் பாயலைப் பரப்பினார். அவருள்ளத்தின் நிறைவு நெஞ்சில் வழிந்து கொண்டிருந்தது. அடடா! எத்தனை பெரிய பாரம் இறங்கப் போகிறது! எதிர்பார்த்து எண்ணிய நாட்கள் அவரை ஏமாற்றவில்லை.; மனிதர் சத்தியவந்தர். சத்தியம் என்பதே வெற்றியடையக் கூடிய ஒன்றுதானே?

''அப்பா, அப்பா! தூங்கி விட்டீர்களா?'' அன்புக்கும், ஆசைக்கும், ஆறுதலுக்குமாக இருந்த ஒரே மகள் கமலம் அழைப்புக் குரல் விடுத்துக்கொண்டே அருகே வந்தாள்.

சற்றே ஒருக்களித்து எழுந்து உட்கார்ந்த அருளானந்த உடையார், ''என்னம்மா கமலம்? இன்னுமா தூங்கவில்லை நீ?'' என்று கரிசனத்துடன் கேட்டார்.

''தூக்கம் வந்ததப்பா. நான்தான் அதை இப்போதைக்கு வேண்டாம் என்று விரட்டி விட்டேன்!''

''ஏனம்மா?''

''இன்று நீங்கள் தூங்கி நான் பார்க்க வேண்டுமே!''

உடையார் மெல்ல நகை புரிந்தார்.

''அப்பா! அப்பா! இன்றோடுதான் உங்களுள்ளிருக்கும் ஒரு பெரிய பாரம் நீங்கப் போகிறதே! இன்றாவது அந்தப் பெரும் பேழைகளில் என்ன இருக்கிறதென்றுதான் பார்ப்போமே!''

''கமலம்! நீ சிறியவள். உலகம் தெரியாதவள். அதைப் பார்ப்பதால் நமக்கென்ன லாபம்? உரியவன் நாளை வருகிறான். அவன் திறந்து காட்டினால் பார்ப்போமே!''

''போங்கப்பா! நேர்மைக்கும் கூட ஓர் எல்லை உண்டு. நீங்கள் சுத்தப் பைத்தியம். அளவுக்கு மீறிய நேர்மை. திறந்து பார்ப்பதாலேயே நாம் அதில் இருப்பதைத் திருடிக் கொண்டு விடவா போகிறோம்?''

''பார்த்த பிறகு அப்படி ஓர் எண்ணம் உதயமாயிற்று என்று வைத்துக்கொள்வோம். அப்போது என்ன செய்வது?''

கலகலவென்று சிரித்துவிட்டாள் கமலம்.

''நல்ல அப்பா நீங்கள்! இந்த நான்கு ஆண்டு காலமாக எத்தனை எத்தனையோ பேர்கள் எப்படியெல்லாமோ உங்கள் மனத்

கோவி. மணிசேகரன்

தைக் கலைத்துப் பார்த்தார்கள். அப்போதெல்லாம் அசையாத உங்கள் மனம் இப்போதா அசைந்துவிடப் போகிறது?''

''ஏன் அசையக் கூடாது? மனித மனத்தத்துவம் உனக்குப் புரியாது தம்பீ! போய்ப்படுத்துக்கொள்.''

எழுந்து சென்றவன் தொலைவிலிருந்த விளக்கின் திரியை ஏறத் தள்ளிவிட்டு மீண்டும் வந்தமர்ந்தான். வெளிச்சம் மேலும் கூடியது. அப்போது உடையாரின் மனைவியாள் உத்தமநாயகி அங்கு வந்து கொண்டிருந்தாள்.

''நேர்மை நேர்மை என்றுதானடி, கமலம் உன் அப்பா வீட்டைக் குட்டிச் சுவராக்குகிறார். ஆனால் வெளி உலகில் எப்படியெல்லாமோ பிழைக்கிறார்கள். இவர்? இவர் இப்படித்தான் பிழைக்க வேண்டும் என்று உன்னையும் என்னையும் இந்த வீட்டையும் பாழடிக்கிறார். அந்தப் பேழைகளை நாமேதான் எடுத்துக் கொண்டுவிட்டால் என்ன குடி மூழ்கிப் போய்விடுமாம்?''

உத்தமநாயகி சீறிவிழுந்தாள். உடையார் சிரித்த முகத்துடன் அண்ணாந்து நோக்கினார். ''உத்தமநாயகி, நீ எனக்குப் பொருத்தமோ என்னமோ, ஆனால் உனக்கு இந்தப் பெயர் பொருந்தாதடி!''

''போங்களேன்: பொல்லாத புடலங்காய்ப் பெயர்! நமக்கும் ஒரு பெண்: அதற்கும் ஒரு வாழ்வு இருக்கிறதே என்று நினைத்துப் பார்க்கிறீர்களா? அரண்மனை உத்தியோகம் பார்க்கும் ஒருவனுக்கு அவளைக் கைப்பிடித்துத் தரவேண்டும் என்ற எண்ணமே உங்களுக்கில்லையே! அதற்கு எவ்வளவு செலவாகும்?''

''அதற்காக இந்தச் செல்வப் பேழைகளைக் களவாடிவிடுவதா? அழகுதான் போ! உத்தமநாயகி! இந்தப் பேழைகளை ஒப்புவித்து மறைந்தவன் வெறும் பிரபு மட்டுமல்ல; என் நண்பன். அவனுடைய மகன் நாளை வருவான். அவன் தான் உன் மருமகன். போதுமா?''

''அப்பா!'' என்று மெல்லிய குரல் விடுத்த கமலம், நாணிப் புன்னகைத்து எழுந்தோடினாள். அதுவரை படபடத்துச் சொல்மாரி பொழிந்த உத்தமநாயகியும் கூட ஒரு கணம் மலைத்துவிட்டாள்.

''நிச்சயம் முடிகிற காரியம் தான். என் நேர்மை என்னைக் காக்கும். அத்துடன் நாளைக்கு நாடு திரும்பும் தங்கப்பன் என் சொல்லைத் தட்டாதவன். போய் நிம்மதியாகப் படுத்துறங்கு!''

அருளானந்த உடையார் ஆனந்தமான நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

நான்காண்டுகளுக்கு முன்னம் ஒரு நாள்.

தொண்டை மண்டலத்துப் பெருந்தனத்துக் குடும்பங்களுள் குன்றத்தூர் குமரேச உடையாரும் ஒருவர்; அவருக்கும் சோழ மாமன்னர் இராஜ ராஜ சோழர் வரை செல்வாக்கு உண்டு. ஆண்டுதோறும் நடைபெறும் சதயத் திருவிழாவில் அவருக்கும் ஒரு பங்குண்டு; சிறப்பான பீடமுண்டு; செல்வாக்குக்கு உரிய பட்டமும் உண்டு. அவருடைய ஒரே மகன் தங்கப்பன், ஈழம் நோக்கிச் சென்றுவிட்டான். ஏதோ, பிள்ளைக்கும் அப்பனுக்கும் ஏற்பட்ட பிணக்குத்தான் காரணம் என்று குன்றத்தூர்வாசிகள் பேசிக்கொண்டார்கள். அருமை நண்பரான அருளானந்த உடையாரும் அப்படித்தான் நம்பி வந்தார். ஒருவேளை உண்மை அதுவாக இருக்கலாம். ஆனாலும் பிரபு குமரேச உடையார் இதைப் பற்றி உண்மையை எவரிடமும் சொன்னதில்லை. சொல்லவும் விரும்பினதில்லை. நல்ல குடும்பத்தின் ரகசியங்கள் எப்போதுமே வாசற்படிகளுடன் நின்றுவிடும்.

குமரேச உடையாருக்கும் வயது ஐம்பதைத் தாண்டி விட்டது. அது ஒரு பெரிய வயதாக அக்காலத்தில் கணக்கிட முடியாது என்றாலும் ஒற்றை மகனாய்—செல்வ மகனாய்ப் பிறந்த தங்கப்பனின் பிரிவுக்குப் பிறகு அவர் நூறு வயதைத் தாண்டிய மூப்படைந்து விட்டார்! கோடானு கோடி செல்வமிருந்து என்ன பயன்? கவலை அவரை நாளுக்கு நாள் காச நோயாய் அரித்துத் தின்று கொண்டே வந்தது. மிச்சம் மீதிக்காகக் காத்திருந்தது இடுகாட்டு மண்தான்.

உயிர்மேல் நம்பிக்கை இல்லாத நிலை வந்ததும், இருக்கும் செல்வங்களைத் தான தருமம் செய்தார்; குன்றில் மேலிருந்த முருகப் பெருமானுக்கு நிவந்தம் விட்டார். கடைசியாக இரண்டு பெரும் பேழைகளில் தாம் விரும்பியதை நிரப்பிப் பூட்டிவிட்டு நண்பர் அருளானந்தரை அழைத்து, ''நண்பரே! இந்த இரண்டு பேழைகளில் என் மகனுக்கு நான் விரும்பி வைத்துவிட்டுச் செல்லும் செல்வம் இருக்கிறது. இவற்றைப் பொறுப்



பான ஒருவரிடம் ஒப்படைக்க வேண்டுமென்று கருதினேன். நேர்மையும், பழுதில்லா நட்பு முடைய உங்களை விட வேறு எவரும் எனக்கு நம்பிக்கைக்கு உரியவர்களாகத் தெரியவில்லை. ஆகவே, என்று என் மகன் தங்கப்பன் திரும்பி வந்து என்னைப் பார்க்க விரும்புகிறானோ அன்று இவற்றை அவனிடம் ஒப்படைத்துவிடவேண்டும்'' என்று கூறிப் பேழைகளை ஒப்படைத்தார். அதன் பிறகு அதிக நாட்கள் வாழவில்லை. இறைபதம் அடைந்துவிட்டார்.

ஓராண்டு, ஈராண்டென மூன்றாண்டுகள் கழிந்தன. தங்கப்பன் திரும்பவில்லை. அருளானந்த உடையாருக்கு மட்டும் மனம் ஒரு நிலைப்படாமலேயே இருந்தது. இத்தனைக்கும் அவர் வறுமையில் உழல்பவர். அழகே உருவான பெண்ணை வைத்துக் கொண்டு எவர் தலையில் அவளைக் கட்ட ஆண்டவன் எழுதியிருக்கிறானோ என்று எண்ணிப் புழுங்குபவர். பிரபு அவர்கள் ஒப்படைத்துச் சென்ற பேழைகள் விஷயம் நெருங்கிய ஒருசிலருக்குத் தெரியும். அவர்கள் மோசம் செய்யவல்ல கருத்துக்களை எடுத்துச் சொல்லினர். நல்ல வரன் — பெரிய இடத்து வரன் இதனால் கிடைக்கும் என்றும், திருமணம் எத்தவிதத் தொல்லையுமின்றி அமர்க்களமாக நடந்துவிடுமென்றும் கூறினர். மனையாள் உத்தம நாயகியும் உடன்சேர்ந்து பிரலாபிக்கலானாள். நேர்மையும், நீதியும் வாழ்வின் கண்களாக எண்ணிக் காலந் தேரச் செலுத்திவரும் அருளானந்த உடையாரின் செவிகளில் ஏறக் கூடிய கருத்துக்களா இவை? அவர் அழுத்தம் திருத்தமான முடிவுடன் தங்கப்பனை எதிர் நோக்கியே காத்திருந்தார். நேற்றுப் பகல் ஈழத்திலிருந்து வந்த ஒரு மனிதர், தங்கப்பன் தம்முடன் வந்ததாகவும், காஞ்சியில் தங்கி நாளைப் புறப்பட்டு வருவதாகச் செய்தி சொல்லியனுப்பி விருப்பதாகவும் தெரிவித்துவிட்டுச் சென்றார். இத்தனை நாட்களாக யாருக்காக மன உறுதியுடன் சரியான ஊணுறக்கமின்றிப் பேழைகளைக் காத்துப் பிறழாது நிற்கும் நெஞ்சைக் காத்து வந்தாரோ அந்தத் தங்கப்பன் நாளை வருகிறானே!

ஃ ஃ ஃ

பொழுது விடிந்து புலர்ந்த கதிரவன் கமலத்தை மலரச் செய்யும் ஆனந்தக் கதிரவனாகவே காணப்பட்டான். விடிந்தும் விடியாததுமாகத் தன்னை மறந்த மனோலயத்தில் மூழ்கித் துடித்தாள் கமலம். தங்கப்பன் வருகிறான்! அவனை அவள் பார்த்ததில்லை. தங்க நிற மேனி கொண்ட அழகன்தானோ வெனத் தனக்குள் தானே கேட்டுக் கனவுகளை சிருஷ்டித்துக் கொண்டாள்.

வீட்டில் சமையல் தடபுடலாக ஏற்பாடாகியிருந்தது. உச்சியில் பகலவன் நிற்க இன்னும் ஒரு நாழிகைப் போதே யிருந்தது. அழகான பெட்டி வண்டி ஒன்றில் வந்திறங்கினான் தங்கப்பன். அருளானந்த உடையார் எல்லையிலா மகிழ்வுடன் எதிர்கொண்டழைத்தார். காலம் சென்ற பிரபுவின் மகன் வெகு காலத்துக்குப் பிறகு கரையடைந்திருக்கிறான் என்பதைக் கேள்விப்பட்டுக் குன்றத்தூரே திரண்டு வந்தது. எல்லோருக்கும் வணக்கம் தெரிவித்தவனாய், வீட்டினுள் நுழைந்தான் தங்கப்பன். அப்படி வந்தவனுக்கு திண்ணைவாசற்படி தலையில் பலமாக இடித்து விட்டது. தலையைப் பிடித்தவாறே வீட்டின் கூடத்தில் வந்தமர்ந்தான். இது ஏதோ ஒரு பொல்லாத உற்பாதமாகவே பட்டது உடையாருக்கு.

''தம்பி! எல்லாவற்றையும் பிறகு பேசிக் கொள்வோம். எழுந்து குளியலை முடித்துவிடு. உணவு உண்ட பிறகு சாவகாசமாகப் பேசிக் கொள்வோம்!'' — உடையார் கரிசனமாக மொழிந்தார்.

''மாமா! நான் காலையிலேயே குளித்தாகி விட்டது. சற்று ஓய்வுக்குப் பிறகு உணவு உட்கொள்கிறேன். அப்பா இறந்துவிட்ட செய்தியைக் காஞ்சியிலேயே கேள்விப்பட்டேன். எப்படி இறந்தார் என்பதுதான் எனக்குத் தெரிய வேண்டும்!''

தங்கப்பன் கண்களைத் துடைத்துக்கொண்டான். அறைக் கதவருகில் நின்று அவனைக் கண்கொட்டாமல் கவனிப்புடன் நோக்கித் தன்னை மறந்திருந்த கமலத்தின் கமலக் கண்களிலும் நீர்கசிந்து விட்டது.

''குறிப்பாக எதையும் சொல்வதற்கில்லை தம்பி, எல்லாம் உன் பிரிவால் வந்த துயரமும், துறவும்தான்.''

தங்கப்பன் தலையசைத்தவாறு அமைதியாக இருந்து பிறகு திடுமென்று கேட்டான்: ''சொத்துக்களை என்ன செய்தார்?''

''எல்லாவற்றையும் தான தருமங்கள் செய்தார். நீ எப்படியும் திரும்பி வரவேண்டும் என்ற ஆசையால்தான்! கோயில்களுக்கு நிவந்தங்கள் விட்டார்!''

''ஏன்? நான் திரும்பி வந்ததும் பரதேசியாக வாழ வேண்டும் என்று?''

''அப்படிச் சொல்லக் கூடாது, தம்பி! உனக்காக இரண்டு பெரிய பேழைகளைப் பூட்டிவிட்டு என்னிடம் ஒப்படைத்திருக்கிறார். நீ திரும்பி வரும் வரை அவற்றைப் பாதுகாத்து ஒப்படைக்குமாறு என்னிடம் சொல்லி விட்டுத்தான் காலமானார். அவை பத்திரமாக என்னிடம் இருக்கின்றன.''

''அப்படியா! கொண்டு வாருங்கள், மாமா, அவற்றை!''

''உண்டு முடித்த பிறகு பொறுமையாக அவற்றைப் பார்வையிடக் கூடாதா?''

''பரவாயில்லை. முதலில் அவற்றைக் கொண்டு வாருங்கள்.''

அருளானந்தர் மறுமொழி கூறாமல் பேழைகளைக் கொண்டு வந்து வைத்தார். அதன் பிறகு திறவுகோல்களைப் பணிவுடன் கொடுத்தார். கதவிடுக்கின் வழியாகக் கவனித்து வந்த கமலமும்கூடச் சற்றே தலையை வெளியே கொண்டு வந்து நீட்டிப் பேழைகளுக்குள் என்ன இருக்கிறதென்பதை அறிய ஆவல் கொண்டாள். உத்தம நாயகியின் கண்களைப் பற்றிக் கூறவே தேவையில்லை.

பேழைகள் திறக்கப்பட்டன. எட்டு ஜோடிக் கண்கள் கொட்டாவி விட்டன. ஒரு பேழை நிறைய ஜாதிக் கமலங்கள் செவ்விய ஒளி நகை சிந்தி, விலையற்ற



## களிமண்ணைக் கல்லாக்க......

புகழ்பெற்ற பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரம் (Pisa) ஒரேயடியாகச் சாய்ந்து கொண்டே வருவதாகவும், சீக்கிரத்தில் அது விழுந்து பெரும் சேதம் விளைவிக்கலாம் என்றும் எச்சரிக்கப்பட்டு வருகிறது. இதன் காரணத்தை ஆராய்ந்த எஞ்சினியர்கள், கோபுரத்தின் அடியிலுள்ள களி மண் தரை நெகிழ்ந்து கொண்டே வருவதாகவும், அதனால் கோபுரம் அசைந்து சாய்ந்து வருவதாகவும் கூறுகின்றனர்.

ஸோவியத் எஞ்சினியர் ஒருவர் ரோமாபுரி மேயருக்குப் பைசா கோபுரத்தைக் காப்பாற்றத் திட்டம் ஒன்று அனுப்பி வைத்திருக்கிறார். அதன்படி கோபுரத்தின் அடியில் சக்தி வாய்ந்த மின் அலைகளைப் பாய்விட்டால் களிமண் தரை கல்லைப் போன்று இறுகி விடுமாம்; அதன் அசைவும் நின்று விடுமாம்.

—பூராம்

பூரிப்பை வெளிப்படுத்தின. இன்னொரு பேழையில்......?

வெறும் சரளைக் கற்கள். சிறிதும் பெரிதுமாகக் காட்சி தந்த அவற்றைக் கண்டு பெருவியப்படைந்தான் தங்கப்பன்!

'வெறும் கற்கள்!'

தங்கப்பன் முனகிக் கொண்டான். உடையார் புரியாத சிந்தனையுடன் கண்களில் கேள்வியை எழுப்பிக் கொண்டார்.

''இது என்ன வேடிக்கையாக இருக்கிறதே!'' என்று அங்கலாய்த்துக் கொண்டாள் உத்தமநாயகி!

தங்கப்பனுக்கு மிஞ்சியது கோபம்தான். ''வேடிக்கைதான்! என்னிடமே அதைக் காட்டத் தொடங்கி விட்டீர்கள்! ஏன், மாமா? ஒரு பேழை நிறைய விலை மதிக்க முடியாத கமலக் கற்களை நிரப்பிய என் அப்பா, இன்னொரு பேழையில் வெறும் கற்களையா நிரப்பி இருப்பார்? அதில் தங்கம் இருந்திருக்க வேண்டும். அதை அபகரித்துக் கொண்ட நீங்கள் என்னிடமே உங்கள் வேடிக்கையைக் காட்டுகிறீர்கள், இல்லையா?'' என்றான்.

அரண்டு மருண்டு அதிர்ச்சி கண்டு விட்டார் அருளானந்த உடையார். அவருடைய உடல் அந்தச் சில கணங்களுக்குள் 'குப்' பென்று வியர்த்து விட்டது. ''தம்பி! என் நேர்மைக்கு இப்படி ஒரு சோதனையா?''

உத்தமநாயகி மேலும் அலுத்துக் கொண்டாள்: ''பார்த்தீர்களா! நேர்மை நேர்மை என்றீர்களே! இப்போது அது திருட்டுப் பட்டம் கட்டி விட்டது. இப்படிக் கட்ட உங்கள் நண்பருக்கு நீங்கள் என்ன பாவம் செய்தீர்கள்?''

''உத்தமநாயகி! நீ பேசாமலிரு!''

''போதுமே! ஒரு பேழையில் விலையுயர்ந்த கற்களை அடுக்கியவர், மறு பேழையில் ஏன் இப்படி வெறும் கற்களைக் கொட்டி வைக்க வேண்டும்? உங்களைக் காட்டிக் கொடுக்கத் தானே?'' என்றான் அவன் தொடர்ந்து.

''நீ பேசாமலிருக்க மாட்டாய்?''

அருளானந்தர் இடி விழுந்து அப்படியே அமர்ந்து விட்டார். அவர் கட்டின கனவுகளெல்லாம் பொடிந்து சிதிலமாயின.

''மாமா! இன்னமும் மரியாதையாகக் கேட்கிறேன். எடுத்து ஒளித்து வைத்திருப்பதை என்னிடம் கொடுத்து விடுங்கள். உங்கள் வறுமைக்கு நானாகப் பார்த்து எதையேனும் கொடுத்து விட்டுச் செல்கிறேன்!''

''நான் நிரபராதி! இதைத் தவிர வேறு என்ன சொல்ல இருக்கிறது?''

''எப்படிச் சொல்லுவீர்கள்? சொல்ல வேண்டிய இடத்தில் உங்களைச் சொல்ல வைக்கிறேன்!''

வேகமும், கோபமுமாக வெறுப்பார்ந்த சிலிர்ப்புடன் எழுந்தான் தங்கப்பன்!

காட்டுத் தீயைப் போலப் பரவிய செய்தி, குன்றத்தூரையே ஒரு கலக்குக் கலக்கியது. நம்பிக்கைக்கும், நேர்மைக்கும் பெயர் போன அருளானந்த உடையாரா இப்படிச் செய்து விட்டார்?

குன்றத்தூர்க் கோட்டத்தில் 'ஊர் மன்றம்' கூடியது. பெரிதாக அகன்று நெடிது வளர்ந்திருந்த ஆலமரத்தின் கீழ் அந்த மன்றம் கூடியது. வழக்கு விசாரணைக்கு வந்தது. என்னதான் அருளானந்த உடையாரின் ஒழுக்கம் மன்றத்தின் கண் முன்னால் வந்து நின்றாலும், வழக்காடுபவன் சீமான் வீட்டுச் செல்வன்! அத்துடன், ஒரு பேழையில் ஜாதிக் கற்களை நிரப்பிய பிரபு, மறு பேழையில் கேவலம் வெறும் கற்களையா, நிரப்பி இருப்பார்? அதுவும் தம்முடைய மகனுக்கு?

தீர்ப்பு அருளானந்த உடையாரைக் குற்றவாளியாக்கியது. இது வரை தம்மைத் தேற்றி, நியாயம் வாழ வைக்கும் என்று எதிர்பார்த்தார். அது முதுகைக் காட்டி விடவே அவர் 'கோ'வென்று கதறிக் குழந்தை போல் அழத் தொடங்கி விட்டார். ஆயினும் ஒருசில நல்லவர்கள் முன்னிருந்து முனைந்து வழக்கைக் காஞ்சி மண்டலேசுவரர் மேற்பார்வைக்குக் கொண்டு சென்றனர். ஆனால் மண்டலேசுவரர்.....

மயக்கம் கண்டார். இரு திறத்து வாதங்களிலும் நியாயம் இருந்தது. ஆயினும் 'ஊர் மன்றம்' வழங்கிய தீர்ப்பையே உறுதி செய்தார். அதற்குத் தண்டனை....

ஐந்தாண்டு சிறைவாசம்! இருக்கும் சிறிய வீடும், ஏதோ சில நகைகளும் பறிமுதல்!

கொதித்துப் போனார் உடையார். தெய்வத்தைப் பெரிதாக நொந்து கொண்டார். மனைவியும், மகளும் கண்ணீரும் கம்பலையு

மாகக் காட்டி தந்தனர். விதி இப்படியா வந்து சூழ வேண்டும்? முடிவாக வழக்கு சோழர் தலைநகர் நோக்கிச் சென்றது.

ஃஃஃ

கங்கைகொண்ட சோழ புரத்துத் திருவோலக்கம் தான் அருளானந்த உடையாரின் தலைவிதியை நிர்ணயிக்க விருந்தது.

ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் கூடின. உலகம் வியந்த மகா சக்கரவர்த்திகளுள் ஒருவரான இராஜ இராஜ சோழர் கட்டிய முழுக்கத்துடன் கனகமணிக் கட்டிலில் அரியாசனத்தில் வந்தமர்ந்தார். அவை எழுந்தது—பணிந்தது — அமர்ந்தது.




தூக்க மாத்திரை விலையைக் கேட்டதும் விழிப்பு மாத்திரை சாப்பிட்டாப்போல இருக்கு சார்!

''இன்று ஒரு வழக்கு அக்கா! அது என் சிந்தனையைப் பலவாறாகக் குழப்பிவிட்டது. நியாயம் எப்படி வழங்குவது என்றே புரியாத ஒரு நீதி மயக்கம்!''

''நானும்தான் கேள்விப்பட்டேன். மதுராந்தக மூவேந்தர் அனைத்தையும் விளக்கினார். ஆமாம், தம்பி! இன்னொரு பேழையில் வெறும் கற்கள் அடங்கியிருந்தனவாமே! அவை நிரம்ப இருந்தனவா? குறைவாக இருந்தனவா?

''பேழையில் பாதி அளவு இருந்தது. அக்கா!''

''ஓகோ! போகட்டும்! உடையாரின் மகள் பெயர் என்ன?''

''கமலம்!''

''ஓகோ! அந்தப் பிரபுவின் மகன் பெயர்?''

''தங்கப்பன்!''

''நல்லது. வழக்கை நாளை நான் கவனிக்கிறேன். நீ போய் நிம்மதியாகத் தூங்கு!'' என்று கூறினார் குந்தவைப் பிராட்டியார்.

வழக்கின் வாதம் தொடர்ந்தது. ஊர் மன்றமும், காஞ்சி மண்டலேசுவரரும் வழங்கிய தீர்ப்பினை ஒப்புநோக்கிப் பார்த்தனர். பேரறிவு படைத்த இராஜ ராஜ சோழருக்கே இந்த வழக்கு விசித்திரமாக இருந்தது. எப்படிப் பார்த்தாலும், எந்தக் கோணத்தில் சிந்தித்தாலும் தீர்ப்பைத் திட்டவட்டமாகக் கூறத்தக்க வழக்காக அது தென்படவில்லை. என்றாலும், ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும், முந்திய தீர்ப்புக்களையே ஊர்ஜிதம் செய்து ஓலைகள் மூலம் சக்கரவர்த்திகளுக்கு அறிவித்தன. இராஜராஜ சோழரால் மட்டும் அந்தத் தீர்ப்பை ஏற்க முடியவில்லை. ஆகவே, அவர் சிந்தனை மயக்கம் கண்டு வழக்கை ஒத்திப் போட்டார்.

அன்று இரவு முழுவதும் உறக்கம் வர வேண்டுமே!

அந்தப்புரத்துக்குங்கூட சக்கரவர்த்திகள் செல்லவில்லை. மேன்மாடத்து நிலாமுற்றத்தில் உலவிக் கொண்டே வெகு நேரத்துக்கு வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார். பெருந்தனக்காரர் குமரேச உடையாரைச் சக்கரவர்த்திகள் நன்கு அறிவார். அவர் ஏன் இப்படி, ஆசை மகன் — ஆண்டாண்டு காலமாகத் திரும்பி வருவானு என்று எதிர்பார்த்த மகன் — வாழ்வதற்காக வைத்துச் செல்லும் செல்வத்தில் வெறுமனே சரளைக் கற்களையா நிரப்புவார்? ஆனாலும் அருளானந்த உடையார் நியாயத்துக்குப் பேர் போனவராயிற்றே! அவருக்கும் மீறிய ஒன்று இப்படி நடைபெற்றிருக்குமா? அப்படி நடைபெறக் காரணமே இல்லை என்று வாதத்தின் போது உடையார் உறுதியாகக் கூறி மறுத்து விட்டாரே! பின் எப்படி இவ்வாறான தவறு நேர்ந்திருக்கும்?

''தம்பி! இன்னுமா தூங்கவில்லை?''

பெரிய குந்தவைப் பிராட்டியாரின் குரல் கேட்டு, பணிவுடன் திரும்பி நோக்கினார். ''தூக்கம் வரவில்லை, அக்கா!''

''உடம்பு என்ன ஆகும்? இப்படிக் கண் விழித்துக் கால் கடுக்க உலவ வேண்டுமா?''

அக்காள் பெரிய குந்தவைப் பிராட்டியாரைப் பற்றி நாடறியும். அரசமாச் சிந்தையில் பெயர் போனவர்! சோணாடே இடுகிடுவென்று நடுங்கிப் பணிவு செலுத்தத்தக்க மாதரசி. மாவீரர் வந்தியத்தேவரின் அன்பு மனையாள்.

மகா சக்கரவர்த்திக்கு உண்மையிலேயே நிம்மதி பிறந்தது. அக்காளின் தீர்ப்பு எப்போதுமே பிறழாதது என்பதை அவர் நன்கு அறிந்திருந்தார்.

ஃ ஃ ஃ

திருவோலக்கத்தில் பேரமைதி சூழ்ந்திருந்தது.

ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் கூட ஏற்கவில்லை என்பதை அவர்கள் நேற்றே உணர்ந்து கொண்டனர்.

மங்கள வாத்தியம் முழங்க, மார் நிமிர்ந்த சேவகன் கட்டியம் கூற, புலிக் கொடிச் சின்னங்கள் முன்னே வர, புலியை நிகர்த்த சக்கரவர்த்தி இராஜ ராஜ சோழரும், அவருடைய தமக்கை அறிவு சார்ந்த குந்தவைப்பிராட்டியாரும் பின்னே வந்தனர்; அரியணைகளில் அமர்ந்தனர். திருமுருக ஓலை நாயகம் உத்தமசோழ மதுராந்தக மூவேந்த வேளார் வழக்கின் ஆதிமுதல் அந்தம் வரையில் படித்துக் காட்டி முடித்தார்.

''தங்கப்பா! வெறும் கற்களிருந்த பேழையில் தங்கம் இருந்திருக்க வேண்டும் என்பது உன் வாதம்! அல்லவா?''— பெரிய குந்தவைப் பிராட்டியார் கேள்வியை ஆரம்பித்தார்.

''ஆமாம், தாயே!'' — தங்கப்பன் தலை வணங்கிச் சொன்னான்.

''நிச்சயமாக அப்படி இருக்க முடியாது. ஏனென்றால், தங்கத்தையே உன் பெயரில் வைத்து விட்டார் உன் தந்தையார். இன்னொரு பேழையில் இருந்தது?''

''கமலம்!''

''அருளானந்த உடையாரின் மகள் பெயர் கமலம்தானே?''

''ஆமாம்!''

''தங்கத்துக்குக் கமலத்தை வைத்து விட்டுச் சென்றிருக்கிறார் குமரேச உடையார். தங்கப்பா! உன் தந்தையும், கமலத்தின் தந்தையும் உயிர் நண்பர்கள். அவருக்கு இவர் துரோகம் செய்யவோ, இவரை அவர் காட்டிக் கொடுக்கவோ நிச்சயம் நினைத்திருக்க முடியாது. ஆகவே, என் மகனுக்கு உன் மகள் என்பதைச் சுட்டிக் காட்டவே இவ்வாறு தம்முடைய சொத்துக்களில் வேறெதையும் வைக்காமல் இருந்தவற்றை விற்றுக் கமலக் கற்களாகவே மாற்றி, வைத்து விட்டுச் சென்றிருக்கிறார். அப்படி வைத்து அருளானந்த உடையாரிடம் கொடுக்கும்போது அவருக்கு மற்றுமொரு நினைவு உதயமாகியிருக்க வேண்டும். அருளானந்தரும் பலவீனமுடைய மனித இனம்தானே? ஏதேனும் கொஞ்சம் எடுத்து வைத்துக் கொள்ளலாம் என்று சந்தேகித்தே அந்த விலை மதிக்க முடியாத ஜாதிக் கமலக் கற்களுக்குச் சரியான எடையாக இந்த வெறும் கற்களை இன்னொரு பேழையில் அடைத்து வைத்திருக்கிறார். பிள்ளை புத்திசாலியாகத் திரும்பினால் எடை போட்டுப் பார்த்துக் கொள்ளட்டும் என்பது உன் தந்தையின் முடிவு. ஆனால், நீ அதைச் செய்யாமல், ஒரு நல்ல மனிதரை ஊர் சிரிக்க வைத்து விட்டாய்'' என்று கூறி முடித்த பெரிய குந்தவைப் பிராட்டியார், திருமந்திர ஓலை நாயகத்தை நோக்கி, ''வேளாரே! இரண்டையும் துலாக்கோல் கொண்டு வந்து இரண்டு தட்டுக்களில் வைத்து எடை போட்டுப் பாருங்கள்!'' என்றும் உத்தரவு பணித்தார்.

சற்றைக்கெல்லாம் துலாக்கோல் கொண்டு வந்து ஒரு தட்டில் கமலக் கற்களையும், மறு தட்டில் வெறும் கற்களையும் வைத்து எடை போட்டனர். எடை சரியாக இருந்ததைக் கண்டு திருவோலக்கமே வியந்து ஆகாகாரம் ஊகாரமிட்டது. பெரிய குந்தவைப்பிராட்டியாரைப் பாராட்டாத உள்ளங்களும் உண்டா? தமக்கையின் அறிவைக் கண்டு இராஜராஜர் வியந்தே போனார்!

விடுதலை கிடைத்த உடையாரும், அவர் மனைவியும், மகளும் பிராட்டியாருக்கு எட்டங்கமும் தரையில் பட விழுந்து பணிந்தனர். நாணி வெட்கித் தலை குனிந்த தங்கப்பனும் விழுந்து பணிந்தான். அவனுடைய கண்கள் நீர் நிரம்பிய நிலையில் கமலத்தை நோக்கின. தான் செய்த தவற்றை அந்தக் கண்ணீரில் கரைத்துவிட யத்தனித்தான் தங்கப்பன். அவ்வளவு இலகுவில் செய்து விடக் கூடிய செயலா அது?

* * *

**ப**த்துப் பதினைந்து நாட்கள் வரை தங்கப்பன் மனம் குன்றித் தலைநகரிலேயே தங்கியிருந்தான். பிறகு மனம் ஒரு நிலைப்பட்டு, தீர்க்கமான முடிவுடன், கமலத்தை மணந்து வாழக் குன்றத்தூர் நோக்கிப் பயணமானான். அருளானந்த உடையாரின் காலில் விழுந்து பலர் முன்னிலையில் பொறுத்தருள வேண்டவும் அவன் சித்தமானான்.

குன்றத்தூரையடைந்து நேரே உடையார் வீடு நோக்கிச் சென்றான். அங்கே.... அவனுக்குக் காத்திருந்த அதிர்ச்சி.....

வீடு மணக்கோலம் பூண்டு விளங்கியது.

அப்போதுதான் கமலத்தைத் தொட்டுத் தாலி கட்டியவன் கைத்தலம் பற்றி வலம் வந்து கொண்டிருந்தான். மனமிடிந்துபோன தங்கப்பன், செய்வதொன்றும் தோன்றாமல், கையிலிருந்த கமலப் பேழையை ஆனந்தக் கண்ணீருடன் கமலத்தின் மணப் பரிசாகக் கொடுத்து விட்டு வந்த வழி நோக்கித் திரும்பினான். எத்தனையோ பேர்கள் தடுத்து நிறுத்திப் பார்த்தனர். செவிகள் கேட்க வேண்டுமே..... மனம் ஒப்ப வேண்டுமே!

கால்கள் மீண்டும் ஈழம் நோக்கியே நடை போட்டன.

---

## தாய்மொழி!



பழைய கதை ஒன்று: அப்பா! நாம் பேசும் மொழிக்கு ஏன் தாய்-மொழி என்று பெயர் வந்தது? — எனச் செல்ல மகன் கேட்கிறான்.

தந்தைக்குப் பேசச் சந்தர்ப்பமே கிடைப்பதில்லை. அம்மாதானே சதா பேசிக் கொண்டிருக்கிறாள். அதனால்தான் தாய்மொழி எனப் பெயர் வந்தது என்று சமையலறையை ஓரக்கண்ணால் பார்த்துக்கொண்டே அப்பா பதில் அளிக்கிறார்.

இது உண்மையோ என்னவோ? ஆனால் தாமறிந்த மொழிகளிலே வல்லுனர்கள் பெண்கள்தாம் என்பது கல்கத்தா பல்கலைக் கழகப் பரீட்சை முடிவுகள் ஒருதடவை உறுதிப்படுத்திற்று.

ஆங்கிலம், வங்காளி, இந்தி ஆகிய மும்மொழிகளிலும் எம். ஏ. பரீட்சைகளில் மூன்று மாதரசிகள் முதல் வகுப்பில் முதலாவதாக வெற்றி பெற்றிருக்கின்றனர். மிஸ் அதிதி ஷியாம்; மிஸ் சுகீர்லி பிகரி; மிஸ் அருணா கபூர். —துராப்

---





**எல். கிருஷ்ணசாமி பாரதி**

**ம**னத்துக்கு அமைதியையும் சாந்தியையும் நாடி, அன்றொரு நாள் மாலை வேளையில் சென்னை மேரி ராணி அரசினர் கல்லூரிக்கு எதிராக உள்ள கடற்கரையில் கண்களை மூடியவண்ணம் மென்மையாக வீசிய காற்றை நுகர்ந்தவாறு அமர்ந்திருந்தேன். அங்கப் பொழுது திடீரென்று ஒரு பெண் வந்தாள். வந்தவள் தன் வரலாற்றை ஒரு கதையாகச் சொன்னாள்.

"நான் சர்க்கார் ஆஸ்பத்திரி ஒன்றில் நர்ஸ் வேலை பார்த்து வந்தேன். நோயாளிகளுக்கு மருந்து கொடுக்க வேண்டியது என் வேலைகளில் ஒன்று: ஒரு நாள் வீட்டுக்கு ஆஸ்பத்திரி அதிகாரியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதைப் படித்ததும் என் இதயம் சில விநாடிகள் நின்றே விட்டன! "897வது எண் நோயாளிக்கு, நவம்பர் 24 இரவு ஒன்பது மணிக்கு நீ கொடுக்க வேண்டிய மருந்தைக் கொடுக்கத் தவறியதால் உன்னை ஏன் வேலையிலிருந்து நீக்கக் கூடாது என்று காரணம் காட்டவும்' என்று அக்கடிதத்தில் கண்டிருந்தது. உடனே ஆஸ்பத்திரிக்குச் சென்று குறிப்பிட்ட ரிஜிஸ்தர்களை யெல்லாம் பார்த்து, 'அந்த நோயாளி ஒன்பது மணிக்குத் தூங்கிக் கொண்டிருந்தபடியால் அந்த மருந்தை அப்பொழுது கொடுக்கவில்லை' என்ற காரணத்தைத் தெளிவாக எழுதி அவ்வதிகாரிக்கு அனுப்பினேன்.– இரண்டே நாட்களில் பதில் வந்தது:

'நோயாளிக்கு டாக்டர் கொடுக்கச் சொன்ன மருந்தைக் குறித்த நேரத்தில் கொடுக்காதது தவறு. நோயாளி தூங்கிக் கொண்டிருந்தாள் என்று காரணம் காட்டியிருப்பது ஏற்றுக் கொள்ளத் தக்கதில்லை. குறித்த நேரத்தில் நோயாளி தூங்கிக் கொண்டிருந்தால், நோயாளியை எழுப்பி மருந்தைக் கொடுக்க வேண்டும் என்று ஆஸ்பத்திரி விதி இருப்பது உன் கவனத்துக்குக் கொண்டு வரப்படுகிறது. எனவே, நீ வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறாய்' என்று அவ்வுத்தரவில் கண்டிருந்தது. இந்தப் பேரிடியை என்னால் தாங்க முடியவில்லை. பெரிய சர்ஜனுக்கு அப்பீல் பண்ணினேன். அவரிடமிருந்து 'அப்பீல் தள்ளுபடி' என்ற கிடைத்தது: அரசுக்கு அனுப்பிய அப்பீலும் அதே கதியை அடைந்தது! 'தலையிடுவதற்கு ஒரு காரணமும் இல்லை' என்ற ஒரே வரி பதில் கிடைத்தது. வருடங்கள் உருண்டு ஓடியதுதான் நான் கண்ட பலன்; பட்ட கஷ்டங்களுக்கோ அளவேயில்லை.

"இந்த நிலையில்தான் எங்கள் பக்கத்து வீட்டுக்குச் சட்டத் தேர்வில் தேறி விட்டு, 'பெரிய வக்கீலிடம்' அப்ரண்டீஸ் பயிற்சிக்காக ஓர் இளைஞர் வந்து குடியேறினார். அவர், எங்கள் மனுக்களை யெல்லாம் பார்த்து விட்டு, உயர்நீதி மன்றத்தில் 'ரிட்' மனுப் போட வேண்டும் என்று யோசனை கூறினார். நீதி மன்றத்துக்கு அலைவதற்குப் போதிய பலமும், வேண்டிய பணமும் எங்களிடம் இல்லாததால் அந்த யோசனையை நிராகரித்தோம். ஆனால், கருணை மிகுந்த அவ்விளைஞர், அப்பொறுப்பைத் தாமே

ஏற்றுக் கொள்வதாகக் கூறி ஒரு வயது முதிர்ந்த அட்வகேட் ஆபீசுக்கு எங்களை அழைத்துச் சென்றார்.

''வக்கீலோ, 'அரசாங்கத்தில் கவர்னர் உள்பட எல்லாரும் நிராகரித்த பின்னர், கோர்ட்டில் என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று சோர்வாகச் சொன்னார். எனினும் கட்டை நிதானமாகப் படித்து விட்டு 'இந்த வழக்கு நிச்சயம் வெற்றியடையும்; அடைய வேண்டும். ஜட்ஜ் மட்டும் செவி சாய்த்துக் கேட்பாரானால் அது உங்கள் அதிர்ஷ்டம்!' என்றார். இளைஞரின் வேண்டுகோளின் பேரில் பீஸ் இல்லாமல் வாதாடவும் அவர் முன்வந்தார்.

விசாரணை தினத்தன்று நீதிபதி என் வக்கீலைப் பார்த்து, ''மிஸ்டர் நாயுடு! இம்மாதிரிக் கொஞ்சங்கூடப் பொருள் இல்லாத வழக்குகளைப் போட்டு நீதிமன்றங்களின் அரிய காலத்தைத் தங்களைப் போன்ற பொறுப்புள்ள வக்கீல்கள் வீணாக்கலாமா? இந்த மனுவை இதோ தள்ளுபடி செய்யப் போகிறேன். தாங்கள் ஒன்றும் பேசத் தேவையில்லை!'' என்று கடுமையாகக் கூறிவிட்டார்.

என் இருதயம் அந்தச் சமயம் நின்றுவிடும் போல் இருந்தது. அப்பொழுது எங்கள் வக்கீல், ''நீதிபதி அவர்கள் அப்படிச் செய்தால் அது என் கட்சிக்காரியின் போதாத காலமே! ஆனாலும், வழக்கைப் பற்றிக் கேளாமலே தள்ளி விடுகிறேன் என்று நீதிபதி அவர்கள் சொல்லுவது எனக்கு ஆச்சரியத்தை விட வருத்தத்தையே அதிகம் தருகிறது. வழக்கைப் பற்றி அறிந்துகொள்ளாமையே அதற்குக் காரணம்'' என்று இழுத்தார்.

அதற்குள் நீதிபதி இடைமறித்து, ''மிஸ்டர் நாயுடு, வழக்கைப் பற்றி நான் அறிந்து கொள்ளவில்லையா? தாங்கள் நினைப்பது தவறு. வீட்டில் வைத்து வழக்கைப் படித்த பின்னரே இந்த முடிவுக்கு வந்துள்ளேன். அரசினர் செய்த முடிவு சரியானதே. குறித்த நேரத்தில் நோயாளிக்கு மருந்து கொடுக்காமல் இருந்தது தவறு. அச்சமயம் நோயாளி தூங்கிக் கொண்டிருந்தபடியால் மருந்து கொடுக்கவில்லை என்று உங்களுடைய கட்சிக்காரி சொல்லும் சமாதானம் ஏற்கக் கூடியதாக இல்லை. தூங்குகிற நோயாளியை எழுப்பி மருந்து கொடுக்க வேண்டும் என்பது ஆஸ்பத்திரியின் 6407வது சுற்றறிக்கை என்பதை சர்ஜன் ஜெனரல் எடுத்துக் காட்டியிருக்கிறார். இதற்காக வேலையிலிருந்து நீக்கிய தண்டனை கடுமையானது என்று வேண்டுமானால் நீங்கள் வாதாடலாம். அது அரசின் யுக்தம். நீதிமன்றத்தாராகிய நாங்கள் அதில் தலையிட முடியாது. வழக்கைப் பற்றி நான் படிக்கவில்லை என்று நீங்கள் புகார் கூறுவது தவறு'' என்றார்;

''பிரபோ! வழக்கைப் பற்றித் தாங்கள் படித்திருக்கிறீர்கள் என்பது நன்றாகத் தெரிகிறது; ஆனால் நன்றாகப் படிக்கவில்லை என்பதும் தெரிகிறது!'' என்றார் நாயுடு.

நீதிபதியின் கண்கள் சிவந்தன. ''என்ன, நான் நன்றாகப் படிக்கவில்லையா? அது என்னய்யா நன்றாகப் படிப்பது என்பது? அதைப் பேராசிரியராகிய உங்களிடமிருந்துதான் இனிமேல் உங்கள் பள்ளியில் மாணவனாகச் சேர்ந்து கற்றுக்கொள்ள வேண்டும். முதல் பாடத்தை இன்னொரு நாள் வைத்துக் கொள்ளலாம். பொதுப் பணத்தில் உருவாகும் அரிய காலத்தை இத்தகைய வேண்டாத வழக்குகளால் நாம் வீணாக்கிக்கொண்டிருக்க வேண்டாம்'' என்றார்.

''பிரபோ! நான் சொன்ன முறையில் ஏதோ தவறு இருக்கலாம்; தவறுதான். மன்னித்தருளுங்கள்!... தாங்கள் அரசினரின் தீர்ப்புகளை மட்டும் நன்றாகப் படித்திருக்கிறீர்கள். அவற்றிலிருந்து என் கட்சிக்காரியின் வாதம் புலப்படுவதில்லை. என் கட்சிக்காரியின் மனுவில் அதை விளக்கியுள்ளேன். அதனை எடுத்துரைக்க அனுமதி தர வேண்டுகிறேன்.''

''மிஸ்டர் நாயுடு! வக்கீல்கள் தங்கள் கட்சிக்காரர் வழக்கே நியாயமானது என்று வாதாடுவது இயற்கைதான். ஆனால் இரண்டு கட்சிகளிலும் ஒரே சமயம் நியாயம் இருக்க முடியாது. மூன்று நிமிடங்களில் கூறவேண்டிய வாதத்தைச் சில வக்கீல்கள் மூன்று மணி நேரத்திலும், இன்னும் சிலர் மூன்று நாட்களும் பேசுகிறார்கள். இடையில் தடுத்தால் வழக்குகள் நன்றாகக் கேட்கப்படவில்லை என்று கூக்குரல். பேச விட்டாலோ வழக்குகள் வருடக்கணக்கில் தீர்க்கப்படவில்லை என்று புகார். சரி, இரண்டு நிமிடங்கள் தருகிறேன். அதற்குள் உங்கள் வழக்கைச் சொல்லிச் சமாதானம் அடைந்துகொள்ளுங்கள். ஆனால் என் முடிவு என்னவோ தீர்ந்த முடிவே! கிழக்கே உதித்த சூரியன் மேற்கே உதித்தாலும் வழக்கு தள்ளுபடிதான்!''

நாயுடு ''மிக நன்றி பிரபோ! தாங்கள் செவிசாய்த்துக் கேட்க உடன்பட்டதற்கு நன்றி! ஆனால் சிந்தையும் திறந்து கேட்டால், தங்கள் முடிவை மாற்றிக் கொள்வீர்கள். சூரியன் மேற்கேதிக்கும்! 'ஐயோ, எத்தகைய தவறு செய்ய இருந்தோம்; நீதியைக் கொலை செய்ய இருந்தோமே' என்று பெருந் துயரம் அடைவீர்கள்! அரசு இழைத்துள்ள அநீதிக்குக் கண்டனம் தெரிவிப்பீர்கள் என்பதில்....''

நீதிபதி இடைமறித்து ''உங்களுக்குக் கொடுத்த இரண்டு நிமிடம் முடிந்து விட்டது. இனி ஆசனத்தில் அமரலாம்!'' என்றார்.

பெஞ்சுக் கிளார்க்கைப் பார்த்துத் தீர்ப்புச் சொல்வதற்குச் சுருக்கெழுத்துக்காரரை வருமாறு சமிக்ஞை செய்தார் நீதிபதி.

''பிரபோ! மன்னியுங்கள். ஒரு நிமிடம். நோயாளிக்கு என் கட்சிக்காரி கொடுக்க வேண்டிய மருந்து என்ன என்பதைத் தெரிந்து கொண்டீர்களா?''

நீதிபதி, ''மருந்து எதுவாக இருந்தால் என்ன மிஸ்டர், நாயுடு! டாக்டர் கொடுக்கச் சொன்ன மருந்து! அதைப் பற்றி நர்சுக்கென்ன கவலை?'' என்றார்.

''பிரபோ! இந்த வழக்கில் நர்சுக்கும் கவலை உண்டு. அதில்தான் என் வழக்கின் உயிர் நாடி இருக்கிறது. அந்த மருந்து தூக்கத்தை உண்டாக்குவதற்காக ஏற்பட்ட தூக்க மருந்து. தூங்குகிற நோயாளியைத் தூக்கத்தைக் கலைத்துத் தட்டி எழுப்பித் தூக்கத்தை வரவழைப்பதற்கான ஒரு மருந்தைக் கொடுப்பது என்பதைவிட மடமை வேறு இருக்க முடியுமா?'' என்றார் வக்கீல்.

''என்ன, உங்கள் கட்சிக்காரி கொடுக்க வேண்டிய மருந்து தூக்கம் உண்டாக்கும்



''அட கஷ்டமே! நான்பாட்டுக்கு அப்பளத்துக்கு இடிச்சுண்டிருக்கேன். என்னைப் போய், சதுஸ்ர நடையை மாத்து; திஸ்ர நடையிலே இடின்னு. ஏன் பிராணனை வாங்கறேள்? தனி ஆவர்த்தனம் சாதகம் பண்ண நான்தானா அகப்பட்டேன்?''

மருந்தா? தூங்குகிற நோயாளியை எழுப்பித் தூக்க மருந்து கொடுக்கவில்லை என்பதற்காகவா இந்தத் தண்டனை?''

நீதிபதி ரிக்கார்டைப் பார்த்தார். — மருந்து — தூக்க மருந்து என்பதைக் கண்டு திடுக்கிட்டார்.

நாயுடு: ''அந்த நோயாளிக்குக் கையிலே ஆபரேஷன். ஆறு நாட்களாக வேதனை தாங்க மாட்டாமல் ஒரு நிமிடம் கூடத் தூங்காமல் அலறிக்கொண்டே இருந்தார். எனவே அன்றிரவு அவருக்குத் தூக்கம் வரச் செய்வதற்காக ஒன்பது மணிக்குத் தூக்க மருந்து கொடுக்கும்படி டாக்டர் எழுதினார். ஆனால் எட்டு மணிக்கே அந்த நோயாளி நன்றாகத் தூங்க ஆரம்பித்து விட்டார். நன்றாகத் தூங்கிக் காலை ஐந்து மணிக்குத்தான் விழித்தார். எனவே மருந்து கொடுக்க வேண்டிய நாளில் ஒன்பது மணிக்கு நேராக ''மருந்து கொடுக்கவில்லை — நோயாளி நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தபடியால்!'' என்று என் கட்சிக்காரி எழுதினாள். வந்தது வினை! என்ன மருந்து என்று கவனியாமலே மருத்துவ அதிகாரி விதித்தார் வேலை நீக்கத் தண்டனை! அரசினரும் அதை உறுதிப்படுத்தினர். எனவே நீதிமன்றத்துக்கு நியாயம் நாடி வந்தோம். நாங்களும் பொறுமை இழந்து தவறு] செய்யப் பார்த்தீர்கள். நல்ல வேளை! பதினெட்டு ஆண்டுகளுக்குப் பின்னராவது நியாயம் வென்றது; நீதி கிடைத்தது.''

நீதிபதி தாழ்ந்த குரலில், ''மிஸ்டர் நாயுடு, மிக வருந்துகிறேன். நீதிபதிகளாகிய நாங்கள் பொறுமை இழக்காமல், வாதங்களை நன்றாகக் கேட்டுப் பரிசீலனை பண்ண வேண்டிய அவசியத்தை நன்கு உணர்ந்தேன். உங்கள் கட்சிக்காரி மீண்டும் வேலையில் அமர்த்தப்படுவாள். வேலை நீக்கத் தேதியிலிருந்து திரும்பப் பெறும் வரையில் சம்பளம் முழுதும் தரப்படும். இப்பொழுது வேலையிலிருந்து நீக்கப்பட்டு என்ன, பதினெட்டு ஆண்டுகளாகி விட்டனவா?'' என்று கேட்டார்!

இவ்வளவு விவரமாகவும் சுவையாகவும் கதையைக் கூறிவந்த அந்தப் பெண் என்னை ஒருமுறை ஊடுருவப் பார்த்து விட்டுக் கதையை மேலும் தொடர்ந்தாள்:

''கதையை வளர்ப்பானேன் — வேலையில் நான் சேரவில்லை. பதினெட்டு ஆண்டுச் சம்பளத் தொகையைப் பெறும் முயற்சியில் அரசினரிடம் மேலும் மூன்று ஆண்டுகள் போராட வேண்டியிருந்தது. இறுதியில் சென்ற மாதம்தான் அந்த ஆபீசுக்குச் சென்று அரசாங்கத்தின் 'செக்'கை அனுப்பும்படி செய்தேன். அந்தச் செக்கும் ரிஜிஸ்தர் தபாலில் எங்கள் வீடு நாடி வந்தது.....ஆனால்.....''

இப்படிச் சொன்னதும் அந்தப் பெண் தன் முகத்தைப் புடவையின் முந்தானையில் மறைத்துக் கொண்டு 'ஓ' வென்று தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். அமைதி நாடி, காற்று வாங்க வந்த கடற்கரையில் இது என்ன தரும சங்கடம் என்று எனக்குத் திகைப்பும் வியப்பும் ஏற்பட்டன. என் வியப்புத் தீரு முன்னரே அவள் அழுகையை ஒருவாறு அடக்கிக் கண்ணைத் துடைத்துக் கொண்டு, ''சரி, உங்களை ஒன்று கேட்கிறேன் — சொல்லுங்கள்; நான் இந்த வரலாற்றைச் சொல்லி வந்தபோது ஒரு பெரிய சந்தேகம் உங்களுக்கு வந்திருக்க வேண்டுமே!'' என்றாள்.

''ஒன்றென்ன? எத்தனையோ சந்தேகங்கள். முதலில் கதையில் வயது பொருந்தவில்லை. உன்னைப் பார்த்தால் இருபது இருபத்தைந்து வயதிருக்கும். கதையில் வரும் நர்ஸுக்கு இப்பொழுது குறைந்தது நாற்பத்தைந்து, ஐம்பது வயதிருக்க வேண்டுமே!'' என்றேன்.

''கதையில்லை வக்கீல் சார், கதையில்லை. உண்மையான நிகழ்ச்சி. நான் சொல்லிய நிகழ்ச்சியில் வரும் 'நர்ஸ்' நான் இல்லை தான். ஆனால் அவள் கற்பனைப் பெண்ணுமல்ல. அவள் என்னை ஈன்றெடுத்த எனது அருமைத் தாயார்!

''உலகில் தனக்கு நீதி கிடைக்கவில்லையே என்று என் தாயார் ஏங்கிய வண்ணம் காலம் கழித்தாள். பதினெட்டு ஆண்டுகளுக்குப் பின்னராவது நீதிமன்றம் தனக்கு நியாயம் வழங்கியது அறிந்து ஆறுதல் அடைந்தாள். தனக்குச் சேர வேண்டிய பணத்துக்கு அரசினர் செக் அனுப்பியதையும் அறிந்து கொண்டாள். 'செக்' தாங்கிய ரிஜிஸ்தர் தபால் அன்று மாலை நாலு மணிக்கு வீடு தேடி வந்தது. ஆனால் அதற்கு அரை மணி நேரத்துக்கு முன்னதாக என் அருமைத் தாயார், 'இவ்வுலகில் நாம் பட்டதெல்லாம் போதும் பராபரமே! படமுடியாது இனித் துயரம்' என்று மண்ணுலகத் துன்பங்களுக்கெல்லாம் நிரந்தரமான முடிவு காண விண்ணுலகம் சென்றுவிட்டாள்! செக்கும் வந்த வழியே திரும்பிப் போய்விட்டது!

''அவளுக்கு நான் ஒரே மகள். அந்தப் பணத்தை நான் பெறுவதற்கு என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டாள்.

என்ன பதில் சொல்வேன் நான்? அந்தச் செக்கை அடைய அவளும் ஒரு பதினெட்டு ஆண்டுகள் காத்திருக்க வேண்டுமோ, என்னமோ? யார் கண்டார்கள்?

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# மக்ளீன்ஸ் பற்பசையின் புதிய புல்வரிக்கும் ருசியே சொல்லும் உங்களுக்கு, அது செயலாற்றுகிறதென்று!

## சுத்தமாக்க

– உங்கள் பற்களிலிருந்து அந்த மங்கிய மஞ்சள் திரையைப் போக்குகிறது

## வெண்மையாக்க

– அவைகளுக்கு அந்த அதிகமான வெண்மையைத் தருகிறது

## காக்க

– சொத்தைக்குக் காரணமான கிருமிகளை நீக்கி உங்கள் வாயைப் புத்துணர்ச்சியுடன் சுத்தமாக வைக்கிறது.




**மக்ளீன்ஸ் – அதிவெண்மையான பற்களுக்கு**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon